# தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்




புலவர் இரா. இளங்குமரன்

# தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்

(சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சார்பிலான பாவாணர் அறக் கட்டளைச் சொற்பொழிவு)

**புலவர் இரா. இளங்குமரன்**
பாவாணர் ஆராய்ச்சி நூலகம்
மதுரை




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**International Institute of Tamil Sutieds.**
**டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை-600 113.**

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அறக்-
கட்டளைச் சொற்பொழிவு வரிசை-2 [7,8.2-85]

Dr. G. Devaneya Pavanar Endowment Lecture No. 2
Endowment Lectures Publication Number-6

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Devaneya Pavanarin Chollayvukal |
| Author | : | R. Ilankumaran.<br>Pavanar Research Library,<br>Thirunagar, Madurai-625006. |
| Publisher | : | International Institute of Tamil Studies,<br>T.T.T.I Post, Tharamani,<br>**Madras-600 113.** |
| Publication Number | : | 105 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 7-2-85 |
| Paper used | : | 16Kg D/Demy |
| Size of the book | : | 21 × 14 cms |
| Printing types used | : | 10 point |
| Number of copies printed | : | 2200 |
| Number of pages | : | 135+12 |
| Price | : | Ten Rupees only |
| Printer | : | Blaze Printers & Co<br>12, First Main Road<br>Nehru Nagar<br>Madras 600 020 |
| Binding | : | Card board |
| Artist | : | A. S. Veluchamy |
| Subject | : | A study of the etymological research of Deveneya Pavanar. |

## பதிப்புரை

முனைவர் ச. வே. சுப்பிரமணியன்,

இயக்குநர்,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

டி. டி. டி. ஐ. (அஞ்சல்), தரமணி,

சென்னை—600 113.

உலகின் முதன் மொழி தமிழே என்பதை ஐயந்திரிபற நிலை நாட்டிய மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் அரும்பெரும் ஆய்வுகளைத் தமிழுலகு நன்கு அறிதற் பொருட்டு நிறுவப்பட்டது 'மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் அறக்கட்டளைச் சொற் பொழிவு'. அதன் இரண்டாவது சொற்பொழிவாக இந்நூல் இன்று வெளிவருகிறது. பாவாணரின் ஆய்வில் ஈடுபட்டு, உடன் பழகிய அறிஞர் பெருமக்களுள் திரு. புலவர் இரா. இளங்குமரனாரும் ஒருவர். பாவாணரின் வாழ்க்கையே சொல்லாய்வாக இருந்தமையை நாடறி யும். அவர்தம் சொல்லாய்வுப் பணி குறித்து மிகத் திறம்பட, செவ்வையாகத் தம் கருத்துகளை இங்கு வழங்கியுள்ளார் நூலாசிரியர். பாவாணரின் பெருமையை, ஆழ்ந்தகன்ற தமிழறிவை நூலின் ஒவ் வொரு பக்கமும் காட்டுவதுடன் நூலாசிரியரின் புலமையையும் புலப்படுத்துவதைக் காணலாம். தமிழன்பர், தமிழறிஞர், தமிழாய் வாளர் என அனைவருக்கும் நல்விருந்து இந்நூல் என்பது மிகையன்று.

இந்நூலாசிரியர் திரு. புலவர் இரா. இளங்குமரன் அவர்களைப் பாராட்டிப் போற்றி மகிழ்கின்றேன்.

அறக்கட்டளை நிறுவப் பெருந்தொகை அளித்த திரு. கோவலங் கண்ணன் அவர்கட்கும், பிறருக்கும் மற்றும், இவ்வெளியீட்டிற்குத் துணை நின்ற அனைவருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

சிறப்பாகக் குறுகிய காலத்தில் அச்சிட்டுத் தந்த பிளேஸ் அச்சகத் தினர்க்கு எங்கள் நன்றி.

சென்னை
7-2-85

அன்புள்ள,
ச. வே. சுப்பிரமணியன்.

# பொழிவாளன் புகல்வு

'சொல்' என்பது பலபொருள் ஒருசொல். அதற்குரிய பல பொருள்களுள் 'நெல்' என்பதும் ஒன்றாம்.

நெல்லில் பால் பிடியாப் 'பதர்' அல்லது 'பதடியை' எவரும் நெல் என்னார்; பால் பிடித்து மணிதிரளாத, 'அரைக்காயை' நெல் என்னார்; மணி திரண்டும் கறுத்துச் சிறுத்த 'கருக்காயை' நெல் என்னார்; மணி திரண்டதையே 'நெல்' என்பார்! அந்நெல்லே சொல்லின் பொருளை உவமை வகையால் விளக்க வல்லதாம்! பொரு ளற்றது சொல்லன்றாம். ''எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே'' என்பது தொல்காப்பியம்.

சொல் (நெல்) சூல், பசும் பாம்பாய்த் தோன்று தலையும், அது மணி பிடிக்குமுன் தகவிலாச் செல்வர்போல் தலை நிமிர்ந்து நிற்ற லையும், மணி முதிர்ந்த பின்னே கல்விதேர் மாந்தர்போல் தலை தாழ்ந்து வளைதலையும் உவமையால் சுட்டினார் திருத்தக்கதேவர்.

பயனிலாச் சொல்லைச் சொல்வானையும், அதனைக் கேட்பானை யும், அதனை நன்றெனை நயந்து பாராட்டுவானையும் ஒருங்கே 'பதடி' எனச் சுட்டினார் பொய்யாமொழியார். பயனற்ற நாளைப், ''பதடி வைகல்'' என்ற சான்றோர் பெயரே 'பதடி வைகலார்' ஆயது!

பயனில சொல்லாமை சுட்டிய வள்ளுவரே, சொல்வன்மை கூறியது, சொற்பயன் கருதியதேயாம். ஆதலால் 'சொல்' என்பது மணி போன்றது என்பதும், உள்ளீடு உடையது என்பதும், விளங்கும். சொல்லையும் நெல்லையும் ஒப்பக் குறிக்கும், 'சொல்' என்பதாலே, முன்னோர் சொல்லிய பொருளும் விளக்கமும் இவையாம்!

சொல்லாகிய நென்மணியால் உணவுக்குச் 'சொன்றி' என்பது பெயர். 'சோறு' என்பதும் சொல் என்பதன் வழியாக வந்த பெயரே. நெல்லால் ஆக்கப்பட்டதையே குறித்த சோறு என்னும் சிறப்புப் பெயர், பின்னர் எத்தவசத்தால் ஆக்கிய உணவையும் பொதுவாகக் குறிக்கும் சொல்லாக விரிந்தது. அவ்வளவிலும் நில்லாமல், கள்ளிச் சோறு, கற்றாழஞ் சோறு என்றும் விரிந்தது! 'சோற்றுக் கற்றாழை' என்னும் பெயரையும் வழங்கியது! சொல்வழி வந்த சோற்றின் ஆட்சிகள் இவை. சொல்லுதல் வகைகளைக் குறிக்க, ஏறத்தாழ நாற்பது சொற்கள் தமிழில் உள என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் பாவாணர் (பண்டைத் தமிழர் பண்பாடும் நாகரிகமும் பக்: 27-8).

| சொல் | | சிறப்புப்பொருள் |
| --- | --- | --- |
| அசைத்தல் | — | அசையழுத்தத்துடன் சொல்லுதல் (அசையழுத்தம்-accent) |
| அறைதல் | — | அடித்து (வன்மையாய் மறுத்து)ச் சொல்லுதல் |
| இசைத்தல் | — | ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல் |
| இயம்புதல் | — | இசைக் கருவி இயக்கிச் சொல்லுதல் |
| உரைத்தல் | — | அருஞ்சொற்கு அல்லது செய்யுட்குப் பொருள் சொல்லுதல் |
| உளறுதல் | — | ஒன்றிருக்க ஒன்றைச் சொல்லுதல் |
| என்னுதல் | — | என்று சொல்லுதல் |
| ஓதுதல் | — | காதிற்குள் மெல்லச் சொல்லுதல் |
| கத்துதல் | — | குரலெழுப்பிச் சொல்லுதல் |
| கரைதல் | — | அழைத்துச் சொல்லுதல் |
| கழறுதல் | — | கடிந்து சொல்லுதல் |
| கிளத்தல் | — | இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல் |
| கிளத்துதல் | — | குடும்ப வரலாறு சொல்லுதல் |
| குயிலுதல், குயிற்று | — | குயில்போல் இன்குரலில் சொல்லுதல் |
| குழறுதல் | — | நாத் தளர்ந்து சொல்லுதல் |
| கூறுதல் | — | கூறுபடுத்திச் சொல்லுதல் |
| சாற்றுதல் | — | பலரறியச் சொல்லுதல் |
| செப்புதல் | — | வினாவிற்கு விடை சொல்லுதல் |
| நவிலுதல் | — | நாவினால் ஒலித்துப் பயிலுதல் |
| நுதலுதல் | — | ஒன்றைச் சொல்லித் தொடங்குதல் |
| நுவலுதல் | — | நூலின் நுண்பொருள் சொல்லுதல் |
| நொடித்தல் | — | கதை சொல்லுதல் |
| பகர்தல் | — | பண்டங்களைப் பகுத்து விலை சொல்லுதல் |
| பறைதல் | — | மறை (இரகசியம்) வெளிப்படுத்திச்சொல்லுதல் |
| பன்னுதல் | — | திறுத்தி திறுத்திச் சொல்லுதல் |
| பனுவுதல் | — | செய்யுளிற் புகழ்ந்து சொல்லுதல் |
| புகலுதல் | — | விரும்பிச் சொல்லுதல் |
| புலம்புதல் | — | தனக்குத் தானே சொல்லுதல் |
| பேசுதல் | — | ஒருமொழியிற் சொல்லுதல் |
| பொழிதல் | — | இடைவிடாது சொல்லுதல் |

| | | |
|---|---|---|
| மாறுதல் | — | உரையாட்டில் மாறிச் சொல்லுதல் |
| மிழற்றுதல் | — | மழலைபோல் இனிமையாய்ச் சொல்லுதல் |
| மொழிதல் | — | சொற்களைத் தெளிவாகப்பலுக்கிச் சொல்லுதல் |
| வலத்தல் | — | கேட்பார் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல் |
| விடுதல் | — | மெள்ள வெளிவிட்டுச் சொல்லுதல் |
| விதத்தல் | — | சிறப்பாய் எடுத்துச் சொல்லுதல் |
| விள்ளுதல் | — | வெளிவிட்டுச் சொல்லுதல் |
| விளைத்துதல் | — | (விவரித்துச்) சொல்லுதல் |
| விளம்புதல் | — | ஓர் அறிவிப்பைச் சொல்லுதல். |

இங்குச் சுட்டப்பட்ட சொற்களும் அவற்றின் சிறப்புப் பொருள்களும் இட்டுக் கட்டப்பட்டவை என்றோ, வலிந்து கூறப்பட்டவை என்றோ வழக்கறிந்த நூற்பயிற்சியுடையார் கருதார். அனைத்தும் பொருள் பொதிந்த எடுத்துக் காட்டுகளை உட்கொண்டு உரை விரிக்கப்பட்ட உயர்வுடையவையாம்.

ஒரு பொருட் பல சொற்கள் உரைக்கும் உண்மை என்ன? பயில வழங்குபவை எவையோ, பகுதி பகுதியாக ஆராயப்படுபவை எவையோ, உள்ளங்கவர்ந்து உவகைக்கு இடமாய் இருப்பவை எவையோ, இன்றியமையாப் பயன்பாடு உடையவையாய் இருப் பவை எவையோ அவையே வழக்கும் செய்யுளும் ஆகிய இருவகை களிலும் பொதுமக்கள் புலமக்கள் என்னும் இரு பகுப்பாராலும் போற்றிப் போற்றிப் புதுப்புது வகைகளில் புனையப்பட்டு, ஒரு பொருட் பல சொற்களாய் விளங்குகின்றன என்பதேயாம். இதனைச் 'சொல்'லே இங்கெடுத்துக் காட்டப்பட்ட சொற்களால் சொல்லிவிடு கின்றதாம்.

சொல்லின் ஆட்சி எப்படி எப்படியெல்லாம் திகழ்கின்றது! ''அவரைப் பார்த்தேன்; வாய்திறந்து ஒரு சொல் கூடச் சொல்ல வில்லை; அவ்வளவு செருக்கு'' என்று பழி சொல்வது இல்லையா? இதனால், பண்பாட்டின் சின்னம் சொல் என்பது புலப்படும்.

''நீங்கள் ஒரு சொல் சொன்னால் போதும்; கட்டாயம் நடந்து விடும்'' என்பதில் சொல்வாக்கின் செல்வாக்கு வெளிப்படுகின்றதே!

'ஒரு சொல் சொல்லி வைக்கவும்' என்பதில் சொல் கண்டிப்புப் பொருளாகின்றதே! எச்சரிக்கை அன்றோ இது! 'ஒருசொல்லுக்குச் சொன்னேன்' என்பதில் சொல் 'சும்மா' 'வாளா' என்னும் பொரு

ளிலே யல்லவோ விளங்குகின்றது! ''பல்லக்கு ஏறுவதும் சொல்லாலே, பல்லுடைபடுவதும் சொல்லாலே'' என்பதில் பெருமை சிறுமைகளுக்கு மூலம் சொல்லே, என்பது தெளிவாகின்றதே!

'சொற்றுணை' மிக உயர்ந்த துணையாம்! தன்னந்தனியே காட்டுவழி போகின்றவனுக்குச் சொற்றுணைபோல எந்தத் துணையும் உதவுவதில்லையே! அவன்பாடிச் சொல்லும் சொல்லே, அவனுக்குத் துணையாவது அருமை அல்லவோ!

'சொற்றுணை' என்பது பேச்சுத் துணைதானே, அதுதானே, 'நாத்துணை', 'வாய்த்துணை,' என்பனவும்! சொற்கோ, சொல்லின் வேந்தர், நாவுக்கரசர், வாக்கின் வேந்தர் என்றெல்லாம் சொல்லப் படும் அப்பரடிகள், இறைவனைச் 'சொற்றுணை வேதியனாக' அல்லவோ கண்டார்! அருணகிரியார்க்குச் சந்தச் சொல் சொட்டச் சொட்ட வந்ததால் அல்லவோ, 'வாக்கிற்கு அருணகிரி' ஆனார்.

ஒருத்திக்குப் புகுந்த வீட்டில் ஒரு பேச்சுத்துணை கட்டாயம் வேண்டும். அவள் தன்னை ஒத்த அல்லது இளைய அகவையினளா கவும் வேண்டும்; அக்குடும்பத்தின் உறுப்பாகவும் வேண்டும். இவ்வெல்லாம் அமைந்தவள் தன் கொழுநன் உடன் பிறந்த தங்கை என்பது எவ்வளவு பொருத்தம்! அவளுக்கு ஒரு பெயர் 'நாத்துணை யாள்' என்பதே! இது, இந்நாளில் 'நாத்தினாள்' என்று வழங்கு கின்றது. இளங்கோ வடிகளார் இதனை, 'நாத்தூண் நங்கை' என்பர்.

உள்ளங் கலந்து உரையாடும் துணை உண்டு; உற்றுழி உதவி உவகையூட்டும் துணையும் உண்டு. அத்துணைகள் முறையே 'உசாத்துணை', 'அசாத்துணை' எனப்படும். இவை பழமையான சொல்லாட்சிகள்.

நூலுக்கு 'அழகுகள்' இவையெனப் பத்துக் கூறுவர்; நூலுக்குக் 'குறை'யெனவும் பத்துக் கூறுவர். முன்னை அழகுகளுள் தலையா யது 'சுருங்கச் சொல்லல்'; பின்னைக் குறைகளுள் முதன்மையானது 'கூறியது கூறல்'. 'நூலழகே, சொல்லழகு' என்பது குறிப்பாம்.

பாட்டியல் நூல்களிலே 'ஆனந்தக்குற்றம்' என ஒன்று சொல்லப் படும். ஆனந்தக் குற்றங்களுள் 'சொல்லானந்தம்' என்பது சொற் குற்றமேயாம்.

மட்டு, தேறல், ஊறல், குடி, கள், மது இப்படி எத்தனை பெயர்கள் இருந்தாலும், தண்ணீர், வெள்ளைக் குதிரை என

எத்தனை மாற்றுப் பெயர்கள் இருந்தாலும் கட்குடியர் வழக்கமாக இலக்கண நூல்களில் சொல்லப்படுவது 'சொல்விளம்பி' என்பதாம். குடியர்கள் ஏன், மயக்கும் கள்ளைச் 'சொல் விளம்பி' என்று தங்களுக்குள் சொல்லிக் கொள்ள வேண்டும்?

குடித்தவன் தன் வாயில் வந்ததை எல்லாம் உளறிவிடுவான் அல்லனோ! மறைக்க வேண்டியது சொல்லக் கூடாது என அவன் அடக்கிக் கொள்ளமாட்டாமல் அவிழ்த்து விட்டு விடுவான் அல்லவோ! அதனை வெளிப்படுத்தும் பொருட் பெயரே 'சொல் விளம்பி' என்க!

'சொல்' என்பதற்குக் 'கள்' என்பதும் ஒரு பொருள், தன் பிள்ளையை 'ஊரார் மெச்சி விட்டால் கள் வெறி ஏறும்' என்பது நாமறியாத பாட்டா? குடிக்காமலே, சொல் வெறியில் எத்தனை பேர்கள், ஆடாத ஆட்டமெல்லாம் ஆடக் கண்ணேரில் காண்கின்றோம் அல்லவோ!

'தென்னுண் தேனின் செஞ்சொல்' என்றார் கல்வியில் பெரியவர். அவரே, 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடு சரத்'தையும், 'சொல்லலங்காரப்' பண்பாகச் செல்லும் அம்புகளையும் புனைந்தார். 'வில்லம்பிற் சொல்லம்பேமேல்' என்று அவர் பாடிய தனிப் பாட்டொன்றும் காட்டும்! வள்ளுவரோ, சொல் வல்லாளரைச் 'சொல் லேருழ'வராகச் சுட்டினார்; உழவு பாடிய கிழவர் அவரல்லரோ !

'சும்மா இரு, சொல்லற' என்பதும் ''சொல்லால் முழக்கிலோ சுகமில்லை'' என்பதும்—சொல்லிச் சொல்லித் தழும்பேறியவர்கள், சொல்வதை எல்லாம் சொல்லிவிட்டு, அமைந்த நிறைநிலை! அதற்கும் கூட, சொல்லே வேண்டி வந்தது! இவை சொல்லின் பெருமை என்பதை யன்றி வேறென்ன? அதனால் தான், ''சொல்லாத சொல் = மறைச் சொல்'' என அகரமுதலிகள் சொல்கின்றன.
சொல்லின் வகைகளைச் சொல்லி முடியாது! ''வல்லான் வகுத்ததே வாய்க்கால்'' என்பது சொல்லுக்கும் பொருந்துவதே! சொல்லை எண்ணி எப்படிக் கணக்கிட்டு விடமுடியும்? விண்ணக மீனை எண்ணுவது போன்ற முடிவற்ற வேலையாகவே முடியும்?

ஒரு காலத்தில் ஓரடைவில் உள்ள சொற்கள் இவையென ஒருவாறே சொல்வதன்றி, 'யாவரே முடியக் கண்டு' சொல்வார்? இலக்கியச் சொற்களே அகரமுதலியில் முற்றாக இன்னும் இடம் பெறவில்லை! வட்டார வழக்கு — இனவழக்கு—குழு வழக்கு — இப்படி எத்தனை எத்தனை வகைகள்? இவைகளை எல்லாம் இயைதது எண்ணினால் இன்னும் எத்தனை எத்தனை விடுபட்டுப் போகுமோ?

சொல்லாய்வு—சொல் தொகுப்பு — ஒரு முடிந்த வேலையன்று! என்றும் தொடரும் வேலை! தொடரும் வேலைக்கு நிறைவு—முடிவு— என்பது ஏது?

சொல்லாய்வையே வாழ்வாகக் கொண்டவர் மொழிஞாயிறு பாவாணர். அவர் பெயரால் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஓர் அறக் கட்டளை நிறுவ ஆர்வம் கொண்டார் அதன் இயக்குநர் பண்டாரகர் திருமிகு. ச. வே. சுப்பிரமணியனார். ஆர்வம் மட்டுமோ கொண்டார்! அவரே முன்னின்று தூண்டினார்; முனைந்து பாடு பட்டார். ஆர்வலர்களை யெல்லாம் இணைத்தார். அறக் கட்டளை உருவாகியது. முனைவர் அல்லரோ அவர்!

பாவாணர் அறக்கட்டளையின் சார்பிலே பொழிவு! அவர் நினைவு நாளிலே பொழிவு நூல் வெளியீடு! ''வினையால் வினையாக்கிக் கொள்ளும்'' விழுமிய திறம் இது! பொழிவின் தலைப்போ, பாவாணர் ஆய்வின் உணர்வு! உயிர்ப்பு! ''தேவநேயப் பாவாணரின் சொல் லாய்வுகள்'' என்பது.

பாவாணரின் சொல்லாய்வுக்குக் களனமைத்துத் தந்த பெரு மகனார்க்கும், அறக்கட்டளை நிறுவுதற்கு உதவிய பெருமக்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியுடையேன்.

இப்பொழிவின் ஊடகப் பொருள் பாவாணர் இயற்றிய நூல்கள் அனைத்துமாம். அன்றியும், அவர் எழுதிய கடிதங்களும் இதழ்களி லும் மலர்களிலும் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளும் உதவின. ஆதலால், பாவாணர் நூல் வெளியீட்டுக்கு உதவியவர்களும், கடிதங் களுக்கு உரியவர்களும், கட்டுரைகளைத் தமிழுலகுக்கு வழங்கியவர் களும் உள்ளார்ந்த நன்றிக்கு உரியர்.

எளியேன் வாழ்வை என்றும் தமிழ் வாழ்வாக்கி வரும் தண்ணா ரும் தமிழன்னையின் பொன்னாரும் திருவடிகளில் இப்பொழிவு நூலைப் படைத்துப் போற்றி வணங்குகின்றேன்.

தமிழ்ச் செல்வம்,<br>பாவாணர் ஆராய்ச்சி நூலகம்,<br>திருநகர், மதுரை-625 006.

தமிழ்த் தொண்டன்,<br>இரா. இளங்குமரன்.<br>17—12—1984

## உள்ளுறை

# தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்

## 1. தேவநேயப் பாவாணர்

**கவிவாணர்—பாவாணர்**

1. மொழிஞாயிறு பாவாணர்க்கு அவர்தம் பெற்றோர் இட்ட பெயர், '**தேவநேசன்**' என்பது. படிப்பை முடித்து, ஆசிரியப் பணிக்குச் செல்ல அவர் விரும்பியபோது, பண்டிதர் மாசிலாமணி என்பவர் ஒரு சான்றிதழ் வழங்கினார். அதில் 'தேவ நேசக் கவிவாணன்'[1] என்று குறிப்பிட்டார். பின், அப்பெயரையே தம் பெயராகக் கொண்டார்; மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வு 1924 ஆம் ஆண்டில் எழுதினார்; அதில், மாசிலாமணியார் வழங்கிய பெயரையே தம் பெயராய்க் குறிப்பிட்டார் பாவாணர்.

1.1. பண்டிதத் தேர்வு பட்டியலில், ஞா.தேவநேசக் கவிவாணன் மிஷன் உயர்தரப் பாடசாலை, ஆம்பூர், வட ஆற்காடு ஜில்லா''[2] என்னும் முகவரி உள்ளது.

1.2. 'நேசன்' என்பதும் 'கவி' என்பதும் வடசொற்கள் என்பதை அறிந்து கொண்ட பின்னர்த், தம் பெயரைத் 'தேவநேயப் பாவாணர்' என அமைத்துக் கொண்டார் பாவாணர். தமிழுலகம் 'பாவாணர்' என்னும் அளவானே தேவநேயரைக் குறித்தலும், அறிந்து கொள்ளுதலும் வழக்காயின.[3]

---

1. தேவநேயரை அவர் ஆசிரியர் ஒருவர் கவிவாணர் என்று சிறப்பித்தார். புலமை—முத்திங்கள் இதழ், சூன் 1981, பக்கம் 122.
   பண்டிதர் மாசிலாமணி என்பவர் பாவாணர் ஆசிரியப் பணியில் சேர்தற்கு வழங்கிய சான்றிதழில் தேவநேசக் கவிவாணன் எனக் குறித்ததையே பாவாணர் மேற் கொண்டார். ''பாவாணரும் தனித் தமிழும்''; கட்டுரை; மீட்போலை 3:7; தமிழமல்லன்.
2. 1924 ஆம் ஆண்டு ஏப்பிரல் 7, 8, 9 ஆம் நாள்களில் நடைபெற்ற பண்டிதத்தேர்வில் ஒரோஒருவராகப் பாவாணர் தேர்ச்சி பெற்றார். தேர்ச்சி பெற்றதும் இரண்டாம் வகுப்பு. ''தொடர் எண்: 1; புதிவெண்: 4; செந்தமிழ் தொகுதி 22.
3. ''பாவாணர் என்றால் உலகமுதல் தாய்மொழி தமிழே என்பதனை

**பிறப்பும் பெற்றோரும் :**

2. பாவாணர் பிறந்த ஊர் சங்கர நயினார் கோயிலை[1] அடுத்துள்ள பெரும்புத்தூர்[2] என்பர்; சங்கரநயினார் கோயில் என்றும் கூறுவர்; இன்னும் சிலர் — வாய்மொழியாகப் — புறக்கடையான் பட்டி[3] என்றும் உரைப்பர். ஆனால், பாவாணர் பிறந்த ஊர் சங்கர நயினார் கோயிலே என்பது அவர்தம் எழுத்தானே[4] நன்கு அறிய வருகின்றது.

2.1. அன்றியும், அவ்வெழுத்துச் சான்றிலேயே, பிறந்த நாள், பொழுது, கிழமை, பெற்றோர், பாட்டனார் பற்றிய செய்திகளையும், தாம் எத்தனாம் பிள்ளை என்பதையும் தெளிவாக்கியுள்ளார்:

2.2. ''நான் சங்கரநயினார் கோயிலில் முத்துசாமித் தேவர் மகன் ஞானமுத்தனுக்கும் பரிபூரணம் அம்மையார்க்கும் பத்தாம் மகவும் நாலாம் மகனுமாக 1902 ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 7-ஆம் நாள் வெள்ளிக்கிழமை மாலை 6மணிக்குப் பிறந்ததாகச்சொல்லப்படுகிறது''.

2.3. இச் செய்தி, ''கொற்றவன்குடி, விரிவுரையாளர் குடியிருப்பு, தென்னார்க்காடு மாவட்டம்'' என்னும் முகவரியில் இருந்து 27—10—'60 இல் எழுதிய விரிவான கடிதத்தில் இடம் பெற்றுள்ளது. மேலும், 2—11—'60, 1—12—'60 ஆகிய நாளிட்ட கடிதங்களிலும்[5] இச் செய்தியை எழுதியுள்ளார். இதனால் பாவாணர் பிறந்த ஊர் சங்கர நயினார் கோயிலே என்பது உறுதியாம்.

---

எவரும் மறுக்க ஒண்ணாச் சான்றுகளால் எண்பித்து நிறுவிய மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் ஒருவரையே குறிக்கும்''—நாங்கள் காணும் பாவாணர் : பக். எ.

1. நெல்லை மாவட்டத்தின் வட எல்லையில் அமைந்த வட்டம் சங்கரநயினார் கோயிலாகும். வட்டத்தின்தலைநகர் அதுவேயாம்.

2. சங்கர நயினார் கோயிலுக்கு வடபால் 4 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊர் பெரும்புத்தூர்.
தமிழ்ப்பாவை 3:3; 7:10; புலமை 7:1. அ. ம. சத்தியமூர்த்தி

3. 1) பெரும்புத்தூர்க்கு வடமேற்கில் 4 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊர் புறக்கடையான்பட்டி.
   2) பாவாணரின் உறவினர் சிலர் இவ்வூர்களில் இருந்தமையால் இக் கருத்துத் தோன்றியிருக்கலாம்.

4. இக்கடிதத்தின் மூலப் படிவம் கட்டுரையாளர் கைவயம் உள்ளது.

5. இக்கடிதங்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர்

**பெற்றோர் நிலை :**

3. பாவாணரின் தந்தையார் ''ஞானமுத்தர் சங்கரன் கோயிலில் தொடக்கப் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றினார்.''[1] அன்னையார் பரிபூரணத்தம்மையார் பாளையங்கோட்டை ''சேராடக்கர் கல்லூரியில் 3ஆம் படித்தரம் (III grade) தேறியவர்''[2] தாயைப் பெற்ற தந்தையார் குருபாதம் என்பவர் கோயில்பட்டிப் பாண்டவர் மங்கலத்தில் ஓது வாராக (உபதேசியாராக) இருந்தவர்.''[3] ஆதலால் பாவாணரின் பெற்றோரும் அவர்தம் முன்னோரும் கற்றறிந்தவர் என்பது அறிய வருகின்றது.

**பெற்றோர் பெரும் பிரிவு:**

4. இத்தகைய ஏந்துகள் இருந்தும், பாவாணர் பள்ளியில் கால் வைக்க இருந்த காலையிலேயே தந்தையார் இயற்கை எய்தினர். அன்னையாரும் அவரை அடுத்துச் சென்றார்.[4] சிற்றிளம் பருவத்தி லேயே பெற்றோர் இருவரையும் இழக்கும் இரங்கத் தக்க நிலை பாவாணர்க்கு எய்தியது; குடும்பத்தில் இருந்த மக்கட் பெருக்கமோ மிகுதி; வறுமைக் கொடுமையோ அப் பெருக்கத்தினும் பெருக்க மிக்கது! ''கொடிது கொடிது வறுமை கொடிது; அதனினும் கொடிது இளமை யில் வறுமை'' என்னும் ஔவையார் மொழிக்கு[5] ஐந்தாம் அகவையி லேயே எடுத்துக் காட்டாக அமைந்து விட்டார் பாவாணர்! அதனால், நெல்லை மாவட்டம் சங்கர நயினார் கோயிலில் இருந்து, மிக மிக எட்டத்தில் உள்ளதான ஆர்க்காடு மாவட்டஞ் சார்ந்த ஆம்பூர் நடு நிலைப் பள்ளியில் பாவாணர் படிக்க நேர்ந்தது. அதற்கு, ஓதுவாராக இருந்த பாட்டனார் பணியிட மாறுதலோ, ஏற்பாடோ கரணியமாக இருக்கலாம். அக்குறிப்புத் தெரிந்திலது.

---

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு எழுதப்பட்டவை. இவை மறைமலையடிகள் நூல் நிலையத்தில் உள்ள பாவாணர் கடிதத் தொகுப்பு மடலங்களில் உள்ளவை.

1—3 : கட்டுரையாளர் கைவயம் உள்ள 27—10—60 ஆம் நாள் கடிதம்.

4. ஷ கடிதம், ''என் தந்தையார் 1906 ஆம் ஆண்டிலும் என் அன்னையார் அதன் பின்பும் இறந்து போயினர்.''பாவாணர்க்குத் தந்தையார் இயற்கை எய்தியபோது அகவை ஐந்தே நடந்து கொண்டிருந்ததாம்.

5. தனிப்பாடல்.

**ஆம்பூரில் கல்வி :**

5. பாவாணர் பெற்ற நடுநிலைக் கல்வி, உயர் நிலைக் கல்வி ஆகியவை பற்றிய செய்திகள் அவர்தம் எழுத்தாலேயே அறிய வருகின்றன. ''நான் வடார்க்காடு மாவட்ட ஆம்பூரில் மிசௌரி நல்லஞ்சல் ஊழியத்தரின் விடையூழிய (M.E.L.M.) நடுநிலைப் பள்ளியிற் படிப்பு முடித்தபின், நெல்லை மாவட்டப் பாளையங் கோட்டையில் திருச்சபை விடையூழியக் கூட்டறவு (C.M.S) உயர்நிலைப் பள்ளியில் பள்ளியிறுதிக் கடவைக்குச் சேர்ந்து 4 ஆம் படிவத்தில் பூதநூல், உடல்நூல், நிலைத் திணைநூல் (Botany) தொகுதியையும், 5 ஆம் படிவத்தில் சுருக்கெழுத்து, தட்டச்சு, கணக்குவைப்பு (Book-Keeping)த் தொகுதியையும், 6 ஆம் படிவத்தில் வரலாறு தமிழ்த் தொகுதியையும் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தேன்''[1] என்பது அவர் தரும் செய்தி.

**ஆம்பூரில் பணியும் : மேனிலைக் கல்வியும்**

6. பாவாணர் இளமையில் பயின்ற ஆம்பூர் நடுநிலைப்பள்ளி, உயர்நிலைப் பள்ளியாக வளர்ந்தது. அதில், உதவித் தமிழாசிரியராக 1921 ஆம் ஆண்டு அமர்ந்தார்; தலைமைத் தமிழாசிரியர்க்கு வேண்டும் தகுதி நோக்கி, 1924 இல் மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வு[2]. எழுதி வென்றார்.

6.1 தமிழ்ச் சங்கத் தேர்வின் வெற்றி பாவாணரை ஊக்கியது. அதனால், திருநெல்வேலி, தென்னிந்திய தமிழ்ச்சங்கம் நடாத்திய தனித்தமிழ்ப் புலவர் தேர்வை 1926 ஆம் ஆண்டு எழுதி அதில் வெற்றி பெற்றார்.[3]. அப்பொழுது, சென்னை கிறித்தவ கலா சாலையில் பாவாணர் பணியாற்றிவந்தார்[4].

6.2. பண்டிதத் தேர்விலும் புலவர் தேர்விலும் வென்ற பாவாணர், சென்னைப் பல்கலைக் கழகம் நடாத்திய வித்துவான் தேர்வும் எழுதி வெற்றிபெற்றார். பின்னர், பி.ஓ.எல் தேர்வும்

---

1. என் தமிழ்த்தொண்டு இயன்றது எங்ஙனம்?- செந்தமிழ்ச் செல்வி 44 : 217.
2. செந்தமிழ்-திங்களிதழ்; தொகுதி 22.
3. செந்தமிழ்ச் செல்வி 4 : 336.
4. ஷை. ஷை. ஷை.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் எழுதி வென்றார்[1]. இறுதியில் பெற்றபட்டம் அவரைக் கலை முதியர் ஆக்கியது.[2]

6.3. எம்.ஓ.எல். பட்டம் பெறுதற்குப் பாவாணர் விரும்பினார். அப்பட்டத்திற்குரிய ஆய்வில் அமிழ்ந்தார்.[3] ''திராவிட மரபு தோன்றிய இடம், குமரி நாடே'' என்னும் பொருள்பற்றி இடுநூல் (Thesis) எழுதிப் பல்கலைக் கழகத்தில் படைத்தார்.

6.4. பாவாணரின் இடு நூலைப் பல்கலைக் கழகம் ஏற்காமல் தள்ளி விட்டது.[4] அதனால், ''இனிமேல் இந்தியாவுக்குள் எனக்கு ஒரு தேர்வும் இல்லை'' என்று முடிவு செய்து, முற்றிலும் சொல்லாய்விலேயே வாழ்நாளெல்லாம் செலவிட்டார் பாவாணர்.

## 2. வழக்கும் செய்யுளும் வாய்ப்புறல்

**தொல்காப்பிய வழி :**

1. ஆசிரியர் தொல்காப்பியனார் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி இலக்கணம் செய்தற்கு முன்னர், வழக்கும் செய்யுளும் ஆகிய இரு முதல்களையும் பெரிதுற ஆய்ந்தார். இதனைத் தொல்காப்பியரின் ஒரு சாலை மாணவராகிய பனம் பாரனார்,

---

1. செந்தமிழ்ச் செல்வி 23:25. கட்டுரை, இசைத்தமிழ். ''பண்டித புலவ வித்துவ ஞா. தேவநேயன் B.O.L.''

2. மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதன், நெல்லைத் தமிழ்ச் சங்கப் புலவன், சென்னைப் பல்கலைக் கழகப் புலவ **கலைத் தலைவன்** மேனாள் சேலம் நகராட்சிக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியன், ஞா. தேவநேயன் எழுதியது என வரும், 'வண்ணனை மொழி நூலின் வழுவியல்' என்னும் நூன் முகப்புச் சுட்டால் இதனை அறியலாம். பி.ஓ.எல் பட்டம் பெற்றவர் மூன்றாண்டுகளின் பின், கலை முதியர் (M.A.) பட்டம் பெற்றவராகக் கொள்ளப்படுதல் அந்நாள் விதிமுறையாம்.

3. M.O.L. Thesis பற்றிய ஆராய்ச்சியில் அமிழ்ந்துள்ளேன். திரு.வ.சு. அவர்களுக்கு 13.11.'35 இல் பாவாணர் எழுதிய கடிதம்.

4. ''திராவிட மரபு தோன்றிய இடம் குமரி நாடே என்னும் பொருள் பற்றிய எனது இடு நூலை (Thesis)ப் பல்கலைக் கழகம் தள்ளி விட்டது....இனிமேல் இந்தியாவிற்குள் எனக்கு ஒரு தேர்வும் இல்லை.'' 11.2.'39 கடிதம் (திரு.வ.சு)

''வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி.''[1]

என்பதால் தெளிவுறுத்தினார்.

**பாவாணர் கடைப்பிடி :**

2. பாவாணர், ஐம்பான் ஆண்டுகள் சொல்லாய்விலேலே அழுத்தமாக ஊன்றிய உரவோர்.[2]. அவர், வழக்கும் செய்யுளுமாகிய இரு முதல் களையும் உன்னிப்பாக ஆய்ந்தவர்; அவ் வாய்வுத் திறத்தை, அவர் தம் படைப்புகளை மேலோட்டமாகப் பார்ப்பவரும், பட்டப் பகலில் வெட்டவெளியில் அமைந்த பருமலையைக் காண்பது போல் காணக் கூடும். எடுத்துக் கொண்ட எச்சொன் முடிவையும் இருவகை வழக்கு களாலும் நிறுவுவதே பெருவழக்காகப் போற்றினார் அவர்.

**இருவகை வழக்கு :**

3. வழக்கு என்பது, உலகியல் வழக்கு எனப்படும். அது, பொது வழக்கு, வட்டார வழக்கு, நாட்டு வழக்கு, குடிவழக்கு, இன வழக்கு, தொழில் வழக்கு எனப் பலதிறப்படும். செய்யுள் வழக்கோ இலக்கண வழக்கு, இலக்கிய வழக்கு என இருவகைப்படும். ''இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்[3]'' என்பது நெறியாகலின் செய்யுள் வழக்கு, இலக்கிய வழக்கெனச் சொல்லப்படும். 'நூல் வழக்கு' என்பதும் இதுவேயாம். இவ்விருவகை வழக்குகளிலும் நுண்ணிய தேர்ச்சி கொண்டிருந்தார் பாவாணர்.

---

1. தொல். சிறப்புப்பாயிரம்.

2. 1) ''வேர்ச் சொற்கள் சிறுவேரும் பெருவேரும் என இருவகைய. அவற்றுள் முன்னவை பன்னூற்றுக் கணக்கின; பின்னவை ஒரு நூற்றிற்குட்பட்டவை. இவ்வுண்மை என் கடந்த **அரை நூற்றாண்டு** மொழியாராய்ச்சியிற் கண்டது''.
—வேர்ச். கட். முகவுரை :11

2) ''**வாழ்நாள் முழுதும்** வேர்ச் சொல் ஆராய்ச்சியில் மூழ்கிக் கிடந்த ஒருவன்'' —டி டி டி:

3) **ஐம்பான் ஆண்டாக** மொழியாராய்ச்சி செய்தும் செல்வியில் வெளிவரும் வேர்ச்சொற் கட்டுரைகள் போன்றவற்றை எழுதியும் வரும் ஒருவனை நெறிமுறை அறியாது குருட்டுத்தனமாக வரைபவன் என்பது அறியாமையோடு அழுக்காறும் கலந்த இருட்டடிப் பேயன்றி வேறன்று''. வேர்ச். கட். 202.

3. நன்னூல். 141.

3.1. எடுத்துக் கொண்ட ஒருகருத்தை நிறுவுவதற்கு நாட்டு வழக்கைக் காட்டுவார்;[1] நாட்டின் உட்பிரிவாம் மாவட்ட வழக்கைக் காட்டுவார்;[2] வட்டார வழக்கென்றும் சுட்டுவார்;[3] உள்வட்டார வழக்குகளையும்[4] ஊர் வழக்குகளையும் குறிப்பார்;[5] உலக வழக்கையும்[6] குடிவழி தொழில் வழி வழக்குகளையும்[7] தெரிவிப்பார்; பொதுவாக 'வழக்கு' என்று கூறும் அளவிலும்[8] அமைவார். இவ்வாறு பலதிற வழக்குகளையும் இயல்பாக எடுத்துக் காட்டுதல் ஒருவர்க்கு மிக அருமையாம். ஆனால், இவ் வருமைத் திறம் பாவாணர்க்கு எளிமையாக அமைந்ததே, இஃதெதனால்?

3.2. பாவாணர் பிறந்ததும் உயர்பள்ளிக் கல்வி பெற்றதும் நெல்லை மாவட்டத்தில் நிகழ்ந்தவை; முகவை மாவட்டத் தென் மேற்குக் கோடிச் சீயோன்மலை உயர் தொடக்கப்பள்ளியில் சிறிது காலம் பணி செய்தார்.[9] மதுரை மாவட்டத் தொடர்பும் அணுக்க

---

1. சுணைப்பு = மானவுணர்ச்சி. ''ஒருதரஞ் சொன்னால் தெரியாதா? உனக்குச் சுணைப்பில்லையா?'' என்பது நாஞ்சில் நாட்டு வழக்கு. ''உனக்குச் சுணையில்லையா''? என்பது தமிழ்நாட்டு வழக்கு.
— வேர்ச். கட். 206.

2. ''வீட்டிற்குள் புகுதலைத் தூர்தல் என்பது வடார்க்கார்ட்டுவழக்கு.''
— தமிழ். வர. 70.

3. 40 மரக்கால் = 1 கண்டகம் (சேலம் வட்டாரவழக்கு) தமிழ். வர. 151.

4. 1 ''மிளகாய் வற்றலை உணந்த மிளகாய் என்பது வடார்க்காட்டு ஆம்பூர் வட்டார வழக்கு'' — வேர்ச். கட். 55.
   2 ''சிறுபடியை மானம் என்பது மேலை வடார்க்காட்டு வழக்கு''
   — தமிழ். வர. 151.

5. ''மிதுக்கம் பழத்தைக் குறுமுத்தம் பழம் என்பது கரூர் வழக்கு''
— தமிழ். வர. 16.

6. ''குத்தலும் குடைச்சலும் உ. வ.'' — வேர்ச். கட். 175.

7. 1 ''இசை குடிமானம் = நாட்டுக் கோட்டைச் செட்டியாரால் எழுதப்பெறும் திருமண ஒப்பந்தம்.'' — வேர்ச். கட். 27.
   2 குண்டி குத்துதல் = குத்தவைத்தல் (நாகூர் மரைக்காயர் வழக்கு) — வேர்ச். கட். 175.
   3 ''தொண்டை நாட்டின் தென்பாகத்தில் சுற்றுக்கவலை ஆடுதல் காண்க'' — வேர்ச். கட். 74.

8. ஒண்டு — ஒண்டி = தனிமை. ஒண்டியான், ஒண்டிக்காரன், ஒண்டிக்கடை, ஒண்டிசண்டி முதலிய வழக்குகளை நோக்குக.
— வேர்ச். கட். 110.

9. ஆசிரியராகப் பணி செய்த முதல் இடம் இதுவே.

மும் அவர்க்கு மணிவிழாக் கண்டு மகிழ்வுறுத்தியது;[1] தஞ்சை மாவட்டத்து மன்னார் குடி 'பின்லே' கல்லூரியில் சில ஆண்டுகள் பணி புரிந்தார்; திருச்சி பிசப்பு ஈபர் உயர்நிலைப் பள்ளியில் பணி யாற்றினார்; வடார்க்காடு சார்ந்த ஆம்பூர் உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றிய செய்தியை முன்னரே அறிந்துள்ளோம்; அவ்வார்க் காட்டு வேலூரைச் சார்ந்த காட்டுப் பாடியில், அண்ணாமலைப் பல்கலைக் கழக வாசகர் பதவியின் ஓய்வின்பின் குடிபுகுந்து பல ஆண்டுகள் வாழ்ந்தார்; தென்னார்க்காடு சார்ந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகவும், வாசகராகவும் பணி யமர்த்தம் பெற்றிருந்தார்; சேலம் நகராண்மைக் கல்லூரியில் பணி செய்த சில ஆண்டுகள் அவர் வாழ்வில் பசுஞ்சோலையாய் அமைந் தவை; சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப்பள்ளியிலும், சென்னை கிறித்தவ கலா சாலையிலும் தொடக்கக்காலத்தில் பணி புரிந்தார்; வாழ்வின் நிறைவில் பணியாற்றிய, செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலி இயக்கப் பணி நிகழ்ந்தது சென்னையிலே யேயாம்.

3.3. பாவாணர் ஓரிடத்துப் பணி செய்தாரோ? ஒரு நிலைப் பணி செய்தாரோ? எங்கும் அலைவு! எப்பொழுதும் அலைவு! தமிழ் நிலப் பரப்பெல்லாம் அலைந்து குலைந்து பணிசெய்ய நேர்ந்த நேர்வு அவர்தம் பொருளியல் வாழ்வுக்கும், மனையியல் வாழ்வுக்கும்-ஏன்?- மனநிலை வாழ்வுக்கும் இடரும் தடையும் இடையறாது தந்தவண் ணமாகவே இருந்திருந்தால் கூட, தமிழ் நல வாழ்வுக்குப் பெரு வளமாகவே அமைந்ததாம். இல்லையேல், இத்துணை வழிகளில் வட்டார வழக்குகளைத் தமிழ் வைப்பாக வைத்துச் செல்லும் பட் டறிவு அவர்க்கு வாய்த்திருக்க முடியுமோ?

**மலைவாழ்நர் வழக்கு:**

4. இம்மட்டோ! மலைவாழ் மக்களைத் தேடிச் சென்றும் அரிய சொற்களையும் பழக்க வழக்கங்களையும் பாவாணர் தொகுத்துள் ளார்:

''நீல மலையில் தொதுவர், கோத்தர், படகர், இருளர், குறும்பர் ஆகிய வகுப்பாரிடைப் பல அரிய தமிழ்ச் சொற்கள் வழங் குகின்றன.....வருகிற வேனில் விடுமுறையில் அவர்கள் பழக்க வழக்கங்களோடு தொகுத்துத் தருகிறேன்'' என்று எழுதியுள்ளார்[2] பாவாணர்.

---

1. பாவாணர் மணிவிழாக் குழு. தமிழ்ப்பாவை 3.3. பக். 5. (7.3. 64) மணிவிழா நிகழ்வு தமிழ்ப்பாவை 7:10.

2. 9. 2. '59 கடிதம் (திரு. வ. சு)

4.1. இத் தொகுப்பின்பயனே, ''சோழ பாண்டி நாட்டின் நில மட்டம் நோக்கி, பள்ளமான திசை கிழக்கு (கீழ்-கீழ்க்கு-கிழக்கு) என்றும் மேடான திசை மேற்கு (மேல்-மேற்கு) என்றும் பெயர் பெற்றன. நீலமலை யுச்சியில் வாழும் துடவரும் மேற்றிசையை மேக் (மேற்கு) என்கின்றனர். இத்தகைய சொல் ஒன்றிரண்டே அவரின் முன்னோர் கீழிருந்து சென்றனர் என்று காட்டவும் நாட்டவும் போதுமாயினும் எவரும் எளிதில் ஐயந்திரிபற அறிதற் பொருட்டுப் பல்வேறு சொல் வரிசைகள் கீழ்க்காட்டப்படுகின்றன'' என்று முறைப் பெயர், மூவிடப் பெயர், வினாப் பெயர், உயரிகளின் பெயர், சினைப் பெயர், நிறப் பெயர், எண்ணுப்பெயர், வினைச் சொற்கள், தொடர்ச் சொற்கள் என்னும் பகுப்பில் 156 சொற்களை அவர் எடுத்துக் காட்டி நிலை நாட்ட உதவியதாம்.[1]

**செய்யுள் வழக்கில் சீர்த்தி:**

5. செய்யுள் வழக்கில் பாவாணர் பெற்றிருந்த தேர்ச்சி இறும்பூது பயப்பதாம்:

''1924 ஆம் ஆண்டு மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வெழுதித் தேறினேன். அதனால் எழுந்த செருக்கினாலும் தமிழ் வெறியினாலும் ஆங்கிலத்தை அறவே புறக்கணித்து நான் ஆங்கிலம் பேசக்கூடாதென்றும் பிறர் பேசின் செவிமடுக்கக் கூடாதென்றும், சூளிட்டுக் கொண்டேன். அம்மயக்குப் பத்தாண்டு தொடர்ந்தது. அதனால் தமிழாராய்ச்சியில் ஆழ முழுகித் தமிழின் அடிமட்டத்தைக் கண்டேனாயினும் ஆங்கிலப் பேச்சாற்றலை இழந்து விட்டதினால் ஆங்கிலப்பட்டம் பெறும் வரை கல்லூரியுட் கால்வைக்க முடியாது போயிற்று. அதனால் பதவியுயர்வும் பொருளியல் முன்னேற்றமும் இல்லாது போயின''[2] என்று பாவாணர் எழுதும் பகுதியால் அவர் தமிழாராய்ச்சியில் ஆழமுழுகித் தமிழின் அடிமட்டம் கண்ட அருமை தெள்ளிதின் விளங்கும்.

5.1. ''இம்மாதம் 15ஆம் உக்குள் 10ரூ அனுப்பமுடியுமானால் அனுப்புக. கடன் கழுத்தை நெருக்குகிறது. இன்னும் 3மாதத்திற்குள் என் 100ரூக் கடனையும் தொலைப்பீர்களாயின் அதுவே எனக்குப் பேருபகாரமாக இருக்கும்''[3] என்று எழுதும் கையோடேயே, முத்துவீரியமும், தேம்பாவணியும் வாங்கி வைத்திருக்க வேண்டுகிறார்.

---

1. தமிழ் வரலாறு; முன்னுரை பக். 10-13.
2. என் தமிழ்த் தொண்டு இயன்றது எங்ஙனம்? - செந்தமிழ்ச் செல்வி 44:217.
3. 10.7.31 பின்லே கல்லூரி, மன்னார் குடியில் இருந்து எழுதிய கடிதம் (திரு. வ. சு)

5.2. ''வருண சிந்தாமணி ஒருபடி உங்கள் புத்தக சாலையிற் கண்டேன். அதை எனக்கு வைத்திருங்கள்''[1] என்றெழுதுகிறார்.

5.3. ''தயை செய்து கீழ்க் கண்ட இலக்கண நூல்களை ஒரு வாரத்திற்குள் அனுப்பி வைக்க. அவை என் நூலாராய்ச்சிக்கு இன்றியமையாது வேண்டுவனவாய் இருக்கின்றன.''

5.4. ''என் புத்தகங்களை அச்சிடாவிட்டாலும் 3 மாதத்திற்குள் பணங்கட்டி விடுகிறேன்''.

1. இறையனார் அகப்பொருள்
2. தொல்காப்பியம் (நமச்சிவாய முதலியார்) மூலம்.
3. தொல்காப்பியம் பொருளதிகாரம் 4 vol. நச்சினார்க்கினியம், பேராசிரியம் (பவானந்தர் கழகம்)
4. நன்னூல் மூலம் 2
5. நன்னூல் விருத்தி சங்கரநமசிவாயர்
6. சிதம்பரப் பாட்டியல்
7. தண்டியலங்காரம் அ. குமாரசாமிப்பிள்ளை
8. முத்துவீரியம்
9. பன்னிரு பாட்டியல்[2] -என்று பட்டியலிட்டுச் சுட்டுகிறார்.

5.5 ''ஒன்பது இலக்கண நூல்கள் அனுப்பும்படி வேண்டியிருக்கிறேன். தயவுசெய்து ஜூலை 15ம்வக்குள் அவற்றை அனுப்பி வைக்க[3] என்கிறார்.

5.6 ''இலக்கண நூல்களில் எனக்கு எல்லையில்லாத பைத்திய முண்டு''[4] என்றும், ''குமாரசாமி நாயுடு கம்பெனியில் தொல்காப்பியச் சொல்லதிகாரமும் பேராசிரியரும் கல்லாடமும் மூன்றாண்டுகட்கு முன்னமே அச்சில் இருந்தன. அவை வெளியேறியிருப்பின் அவற்றிலும் ஒவ்வொன்று வாங்கி உடன் சேர்த்து அனுப்புக''[5] என்றும் வரைகின்றார்.

**வழக்கற்ற சொற்கள் :**

6. வறுமை வாட்டி வதைத்தாலும் வளவாழ்வினர் போலவே நூல்களை வாழ்நாளெல்லாம் வாங்கிக் கொண்டிருந்தார். இலக்கண

---

1. 24.7.31 ஷை ஷை.
2. 28.7.31; பின்லே கல்லூரி, மன்னார்குடி. கடிதம் திரு வ. சு.
3. 29.7.31; பின்லே கல்லூரி, மன்னார்குடி. கடிதம் திரு. வ. சு.

4,5. 29.7.31 பின்லே கல்லூரி, மன்னார்குடி. கடிதம் திரு. வ. சு.

நூல்களில் எனக்கு எல்லை இல்லாத பைத்தியமுண்டு என்பது ஒரு காலத்தின் இயல்பாக இன்றி இறுதி நாள்வரை உயிர்ப்பாக இருந்தது. பாவாணர், ''கடன் கொண்டும் செய்வர் கடன்'' என்பதை மெய்ப் பிக்கும் சான்றோராகவே என்றும் நூல் வாங்குதலில் விளங்கினார். இந்நூல்வேட்கை சொல்லாய்வுக்கு ஏந்தாக இருந்ததாகலின் சுட்டிக் காட்ட வேண்டிய தாயிற்றாம்.

இருவகை வழக்குகளிலும் இவர் பெற்றிருந்த புலமை சொல்லா ராய்ச்சிக் கட்டுரைகள் என்னும் பொத்தகத்தில் 'வழக்கற்ற சொற்கள்[1]' என்று வரையும் பகுதியால் புலப்படும்.

**இசைத் தமிழ்ப் புலமை:**

7. இனி, இயற்றமிழுடன் இசைத் தமிழிலும் இவர் பெற்றிருந்த புலமை அருமைக் குரியதாம்.

இசைத்தமிழ் தொடர்பாக எழுந்த மறுப்புக் கட்டுரை[2] ஒன்றில், ''சென்ற பன்னீராண்டுகளாக[3] என்னால் இயன்றவரை இசைத் தமிழையும் ஆராய்ந்து வருகிறேன்' என்பதையும் 'நால்வகை இசைக் கருவிகளும் என்னிடமுள' என்பதையும், 'ஒவ்வொரு வகையிலும் ஒன்றேனும் ஓரளவு இயக்குவேன்' என்பதையும், 'அச்சில் முடிகல (கிரௌன்) அளவில் 200-பக்கம் வரும் இசைத் தமிழ்ச் சரித்திரம் என்னும் நூலையும் சென்ற ஆண்டிலேயே எழுதி முடித்தேன்' என்பதையும், நம் நண்பர் அறியக்கடவர்.'' என்று எழுதுகின்றார் பாவாணர்.

7.1. அம் மறுப்பிலேயே, ''இயல்நூற்பயிற்சி இசைப்பயிற்சி ஆகிய இவ்விரு பயிற்சியோடு சொல்லாராய்ச்சியும் இன்றியமையாதது''[4] என்றும் சுட்டுகின்றார். ஆகலின் சொல்லாய்வுக்கு வரைதுறையற்ற புலமையும் தொகுப்பும் ஆய்வும் வேண்டும் என்பது விளக்கமாம்.

---

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 78-89.
   பட்டியிலிட்டுக் காட்டும் சொற்கள் மட்டும் 150. ''வழக்கற்ற சொற்களை யெல்லாம் ஒரு தனிச் சுவடியாக வெளியிட இந் நூலாசிரியன் கருதுதலின், ஈண்டு மிக வேண்டிய சொற்களே காட்டப்பெறும்'' என்பது நூலாசிரியர் குறிப்பு. பக். 83.
2. குரல் சட்சமே; மத்திம மன்று என்பது கட்டுரை. செந். செல். 20: 465.
3. கட்டுரை வரைந்த யாண்டு- 1943; சென்ற பன்னீராண்டு என்பது 1931. இக்காலம், பாவாணர் மன்னார்குடியில் பணியாற்றினார். இவர்தம் இசையாசிரியர் ''யாழ்ப்புலவர் இராசகோபால ஐயரவர்கள்''.
4. இக்கட்டுரையில், ''வீணை என்னும் பெயர் வேறுபாட்டானேயே

## 3. தொகுப்புக் கலைத் தோன்றல்

**தொகுத்தலும் வழங்கலும்:**

1. கருமி ஒருவன் செல்வத்தைத் தொகுப்பது போலச்சொல் தொகுத்தல் வேண்டும்; அப்படித் தொகுக்க வல்லவரே, சொல்லாய் வின் அடித்தளம் அமைத்துக் கொண்டவர்.

1.1. வள்ளல் ஒருவன் தான்தேடிவைத்த வளச் செல்வத்தைத் தட்டுத் தடையற வாரி வழங்குவது போலத், தொகுத்த சொல் வளத்தை உரிய உரிய வகைகளில் எல்லாம் வழங்குதல்வேண்டும்; நாட்டு வைப்பாக வைத்துச் செல்லுதலும் வேண்டும்!

1.2. கருமிச் செல்வன் போலக், காலமெல்லாம் பாவாணர் சொல் வழக்காறுகளைத் தொகுத்தார்; வள்ளல் செல்வன் போலவே கட்டுரைகளிலும் நூல்களிலும் உரையாடலிலும் கடிதங்களிலும் தொகுத்த சொற் செல்வத்தை வாரி வாரி வழங்கினார்!

**பழமொழிகள் பதின் மூவாயிரம்:**

2. வழக்குகளைத் தொகுத்து வழங்கியதைக் கண்டோம்; 1939 ஆம் ஆண்டிலேயே பழமொழிகள் பல்லாயிரம் தொகுத்தார் பாவாணர். மேலும் மேலும் தொகுத்துக் கொண்டிருந்தார். அக்காலையில் தவத்திரு மறைமலையடிகளாரின் தவச் செல்வியாரும், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக அமைச்சர் திருவரங்கனார் வாழ்க்கைத் துணைவி யாருமாகிய நீலாம்பிகையார், பழமொழிகளைத் தொகுத்து நூல் வெளியிடும் முயற்சியில் ஊன்றினார். அச்செய்தியை அறிந்த் பாவாணர் அந்நாள் கழக முகவர் திரு. வ. சுப்பையாபிள்ளைக்கு எழுதினார்:

2.1. "தமிழ் நாட்டில் வழங்கும் பழமொழிகளையெல்லாம் தொகுத்து அண்மையில் வெளியிடப் போகிறேன். ஆகையால் விரிவான முறையில் பழமொழிப் புத்தகம் உங்கள் அண்ணியார் வெளியிடின் அவர்களுக்குத்தான் இழப்பாகும். இதை முன்னரே தெரிவிக்க"[1] என்பது அது.

---

யாழ் வேறென்று கொள்வது, விருத்தாசலத்தின் வேறு பழமலை (முதுகுன்றம்)என்று கொள்வதேயாம்" என்பது சொல்லாய்வு வழி வந்ததாம். பாவாணர், 'வீணை' என்பதும் தமிழே எனப் பின்னே கண்டார். இது வடமொழி எனக் கொண்டு சொல்லிய உவமை யாம்.

1. 10. 11. '39 கடிதம் (வ.சு)

2.2 பாவாணர் திரட்டிய பழமொழிகள் ஓராயிரம் ஈராயிரம் அல்ல; பதின் மூவாயிரம் பழமொழிகள். அதனால், ''பழமொழி பதின் மூவாயிரம்'' எனப் பெயர் சூட்டியிருந்தார். அதற்கு ஆராய்ச்சி முன்னுரைமட்டும் ஐம்பது பக்க அளவில்[1] வரைந்திருந்தார். சேலம் திரு. சு. கு. அருணாசலம் என்பார் வெளியீட்டுப் பொறுப்பை ஏற்றிருந்தார். அதனை அவர் வெளியிடாமை மட்டுமன்றி அந்நூற் கைப்படி தானும் பாவாணர்க்கு வாராமலே ஒழிந்தது.[2] பாவாணர் எழுதி அச்சுக்கு வராமலும் மூலப்படியாகக் கைவயம் இல்லாமலும் ஒழிந்த நூல்களுள் பழமொழி பதின்மூவாயிரம்[3] என்பதும் ஒன்றாம்.

2.3. 'பழமொழி பதின் மூவாயிரம்' கிடையாது ஒழிந்தது பேரிழப்பு என்பதற்கு ஐயமில்லை. எனினும், பாவாணர் அவற்றைத் தொகுக்க எடுத்துக் கொண்ட முயற்சியும், தொகுத்து நூலாக்கிய பயனும் வறிதே ஒழிந்து விடவில்லை. பிறர் பிறர் தொகுத்து வெளி வந்துள்ள பழமொழித் தொகுப்புகளில் இதுகாறும் இடம் பெறாத பழமொழிகள் பல அவர்தம் நூல்களிலே ஆங்காங்குப் பயின்றிருத்தல் எவரும் பார்க்கக் கூடியதே. ஆகலின், நூலின் பயனீடு முற்றாக வாய்க்கப் பெறமுடியாமல் போயினும் ஓரளவு வாய்க்கப் பெற்றதென அமையலாம்.

**தொகுப்புச் சான்றுகள் :**

3. இவர்தம் தொகுப்பின் அருமையை 'உயர்தரக் கட்டுரை இலக்கணத்தில்' வரும் இணைமொழிகள் (Words in Pairs)[4],

---

1. பழமொழித் திரட்டு ஆராய்ச்சி முன்னுரை மட்டும் 50 பக்கம் உள்ளது. சேலம், புலவர் திரு.மி.மு. சின்னாண்டார்க்கு எழுதிய கடிதம் ; 22.11.65.
2. ''பழமொழி பதின்மூவாயிரத்தைப் பண்டாரகர் இராசமாணிக் கனாரிடம் ஒப்புவித்து விடவேண்டும் என்றும், புதிதாய்த் தொகுத்த பழமொழிகளுள் குறைந்த ஒவ்வொன்றிற்கும் ஒவ் வொரு உருபா குறைக்கப்படுமென்றும் சு.கு. அருணாசலத்திடம் கண்டிப்பாய்ச் சொல்லி விடுக'' —டியார்க்குக் கடிதம் 2.7.66
3. பழமொழி பன்னீராயிரம் தொகுத்தார். சிற்றூர்களிலிருந்து வரும் மாணவர்கள் மூலம் வழக்கிலுள்ள பழமொழிகளையும் திரட்டினார். அவர்களுக்குக் காசு கொடுத்தார். பழமொழிகள் பன்னீராயிரத்தையும் கடந்தன'' திரு. சு. பொன்னுசாமி. செந். செல்வி. 55 : 272.
4. பக். 25; அகர முதலி முறையில் 403 இணை மொழிகளை இப் பகுதியில் எடுத்துக் காட்டியுள்ளார்.

'கட்டுரை வரைவியல்' என்னும் உரைநடை இலக்கணத்தில் வரும் தொடர்மொழிகள் (Idiomatic Phrases and Expressions)[1] என்னும் பகுதிகளால் அறியலாம்.

3.1 தமிழ் நாட்டு விளையாட்டுகள் என்னும் பொத்தகத்தில் வழக்கத்தில் உள்ள ஆட்டங்கள் ஐம்பத் தெட்டனைக் காட்டி அவற்றை ஆடும் முறையை அருமையாக விளக்குவதைக் காண்பவர் பாவாணர் தொகுப்பாற்றலை வியவாது இரார்.

3.2. விளையாட்டுத் தொகுப்பு என்றாலும், விளையாட்டு அளவிலா நிற்கிறது ? எத்தனை எத்தனை, அரிய சொல்லாய்வுகள் ! வழக்க ஆய்வுகள் ! வரலாற்று ஆய்வுகள் !

3.3 விளையாட்டு ஆய்விலே இருந்து பெறும் சொற்பொருள் விளக்கத்திற்கு ஒரு சான்று ;

''இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்''

என்பது குறள்.[2] இக் குறளில் வரும் 'அடுத்தூர்வது' என்னும் தொடருக்கு 'மேன்மேல் அடரவல்லது'[3] என்றும், 'மேன்மேலும் அடர்க்க வல்லது'[4] என்றும் 'அடர்த்து மேற்பட்டு நின்று'[5] என்றும் 'நெருக்கி மீது போய் நிற்க வல்லது'[6] என்றும் பண்டை உரையாசிரியர்கள் உரை கண்டனர். ஆனால், தெளிவு பிறக்குமாறு இல்லை. பாவாணர் விளையாட்டு வெற்றியைக் காட்டி எளிமையாக அதே பொழுதில் அருமையாகத் தெளிவாக்கி விடுகிறார். [7]

3.4. ''அடுத்தூர்வது' என்னுந் தொடர், விளையாட்டில் வென்றவர், தோற்றவர் மேற் குதிரை யேறும் வழக்கத்தைக் குறிப்பான் உணர்த்துவதாகும்'' என்பது அது.

3.5. விளையாட்டு என்னும் சொல்லை எடுத்துக் கூறும் பாவாணர் ''விளையாட்டாவது விரும்பியாடும் ஆட்டு. (விளை : விருப்பம். ஆட்டு : ஆட்டம்) என்கிறார். மேலும், ''விரும்பப் படுதல்,

---

1. பக். 99. இப்பகுதியில் 221 தொடர் மொழிகளை அகர முதலி முறையில் எடுத்துக் காட்டியுள்ளார்.

2. திருக்குறள் 621.

3. பரிமேலழகர்

4. மணக்குடவர்

5,6. காலிங்கர்.

7. தமிழ் நாட்டு விளையாட்டுகள் பக். 14.

செயற்கெளிமை, இன்பந்தரல் ஆகிய மூன்றும் விளையாட்டின் இயல் பாகும். ஒருவன் ஓர் அருவினையை எளிதாகச் செய்துவிடின், அவன் அதை ஒரு விளையாட்டுப் போற் செய்து விட்டான் என்பர். விளை யாட்டு இன்பந்தருவது பற்றியே,

''செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்
றல்லல் நீத்த உவகை நான்கே''

என (1205), அதை இன்பவழி நான்கனுள் ஒன்றாகக் கூறியதோடு இன்ப நுகர்ச்சியையே 'பண்ணை' (1195) என்னுஞ் சொல்லாற் குறித்தனர் தொல்காப்பியர். அப்பண்ணை என்னுஞ் சொற்கு, 'முடியுடை மூவேந்தருங் குறுநில மன்னரு முதலாயினோர் நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமநுகரும் இன்ப விளை யாட்டு' என்று பேராசிரியர் உரை கூறியிருத்தல் காண்க'' என விளக்குகிறார்.

3.6 மேலும், ''உழவர் செய்யும் பயிர்த் தொழிலைச் சிறுவர் நடித்தாடும் ஆட்டு 'பண்ணை' யென்றும், ஓர் இளங் கன்னிக்குக் களிறு புலி முதலிய விலங்குகளாலும் ஆழ் நீராலும் நேர விருந்த கேட்டைத், தற்செயலாக அவ்வழி வந்த காளைப் பருவத்தானொரு வன் நீக்கிய செய்தியைச் சிறார் நடித்தாடுவது 'கெடவரல்' என்றும் பெயர் பெற்றதாக ஊகிக்க இடமுண்டு. (பண்ணை = வயல்)

3.7. 'கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு' (தொல். உரி. 21) பிற்காலத்தில் அவ்விரு பெயர்களின் சிறப்புப் பொருளையும் அறியாதார், அவற்றை விளையாட்டு என்னும் பொதுப் பொருளி லேயே வழங்கினர் போலும்!''[1] எனப் பழஞ்சொற்களுக்குப் புது விளக்கம் புரிகிறார். இவை வாளா தொகுத்து வைப்பாரிடத்தே காணக் கூடிய வளங்களாமோ?

## 4. அகர முதலி ஆய்வு

**அகர முதலித் தொகுப்பு:**

1. தொகுப்புக் கலைத் தோன்றலாகிய பாவாணர் அகர முதலி களைத் தொகுப்பதில் பேரார்வம் கொண்டிருந்தார். அத்தொகுப்பு நாளும் நாளும் வளர்ந்ததை அல்லாமல், ஒய்ந்ததே இல்லை. அவர் தம் மூச்சின் ஓய்வில்தான், அகர முதலித் தொகுப்பும் ஓய்ந்தது என்பதை அவரொடு அணுக்கமாயினார் அனைவரும் அறிவர்.

**ஈட்டிய செல்வம்:**

2. சென்னை மூர் அங்காடியில் புகழ் வாய்ந்த அன்பர் ஒருவர்;

1. தமிழ் நாட்டு விளையாட்டுகள்: முகவுரை.

இராசவேல் என்பார்; பழைய பொத்தக வாணிகர்; கிடையாத நூல்களையும், கிடைக்க வாய்ப்புச் செய்பவர்; அவர் பாவாணர் மேல் மட்டற்ற அன்பாளர். அவரிடம் மராட்டி மொழி அகர முதலி ஒன்றிருந்தது. அதனை வெளிநாட்டவர் உருபா 600-க்குக் குறையாமல் வாங்கிக் கொள்ள உறுதி இருந்தும் பாவாணர்க்கு உருபா 480-க்குத் தந்தார். பாவாணர் தம் ஆய்வை முடித்து அவ்வகரமுதலியைத் திருப்பித் தந்தால் அத்தொகையை மகிழ்வோடு திருப்பித் தருவதாக உறுதியும் மொழிந்தார். 1974 இல் செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலி இயக்குநராக இருந்த காலையில் நிகழ்ந்தது இது! அரசுப் பணம் கொண்டு வாங்கப்பட்டதன்று, அவ்வகர முதலி! தம் பணத்தைக் கொண்டே வாங்கப் பட்டதாம்.

2.1. ''ஆக்கசுப் போர்டு ஆங்கிலப் பேரகர முதலியை—14 மடலம்—உடனே வாங்கும் படி திரு. சுப்பையா பிள்ளைக்கு எழுதி விட்டேன். ஆதலால் 1300 உருபாவிற்குக் காசோலை **உடனே** அவருக்கு அனுப்பி விடுக'' என 9-5-70இல் சேலம் மி. மு. சின்னாண்டார்க்குக் கடிதம் எழுதினார் பாவாணர்.

2.2. ''27—11—'80 இல் சங்கத் தமிழகர முதலி ஏனையிரு பகுதிகளும் கிடைப்பின் மிக நன்றாம். பன்மடங்கு விலையேற்றினும் கொடுத்து விடுவேன்'' எனக் குறிப்பிட்டு[1] எழுதினார்.

2.3. கன்னட அகர முதலி ஐந்து மடலங்களையும் வாங்கியனுப்புதற்குப் பேரா. கு. பூங்காவனம் அவர்களுக்கு 1—11—78 இல் அஞ்சல் வரைந்தார்.

**அகரமுதலிப் பெருக்கம்**

3. இவ்வாறு தொகுத்த அகர முதலிகள் ஒன்றா? இரண்டா? ''பன்மொழிப் புலவர் திரு. தேவநேயப் பாவாணர் அவர்கள் வீட்டில் எட்டு அலமாரிகளில் (நிலைப் பேழைகளில்) உலக மொழிகளிலுள்ள அகராதித் தொகுப்புகள் உள்ளன. அனைத்தும் அவர் சொந்தமாக வாங்கிய நூல்கள். அகராதிக் கலைக்கு ஆணிவேர் போன்று அமைந்தவர்கள் பாவாணர் அவர்கள்'' என்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் அவர்கள் உரைப்பதை[2] அறிந்தால் பாவாணர் தொகுத்துள்ள அகர முதலிப் பெருக்கம் நன்கு வெளிப்படும்.

3.1. அகர முதலியின் பொதுப் பயன் வேறு; ஆய்வுப் பயன் வேறு; பொதுப் பயன் கொள்ள விரும்புபவர்க்குச், செம்மையான ஓர்

1. கட்டுரையாளர்க்கு வரைந்த கடிதம்.
2. செந்தமிழ்ச் செல்வி 55: 275

அகரமுதலி போதும்; ஆனால், ஆய்வுப் பயன் கொள்ள விரும்புவார்க்கு எத்தனை எத்தனை அகர முதலிகள் கிடைக்க வாய்க்குமோ அத்தனையும் பயன் செய்தற்கு உரியவையேயாம்.

3.2. பொதுப் பார்வையில், அருஞ்சொல் பொருள் காணும் அளவே பயனீடாம். ஆனால், ஆய்வுப் பார்வையில், கொள்ளும் பயன்களோ, ஆய்வார் ஆய்வுத்திறமும் மூளைக் கூர்ப்பும் எடுத்துக் கொண்ட நோக்கும் ஏறும்படிமான அளவுக்குப் பயனும் ஏறுவதாம்! அதனால், ஈட்டியவெல்லாம் காட்டியதென்ன அகர முதலிகளை வாங்கினார் பாவாணர்.

**அகரமுதலி ஆய்ஞர்:**

4. அகர முதலியில் இல்லாத சொற்களை இணைத்தல், அகர முதலியில் இருக்கும் சொற்களுக்குரிய பொருள் விடுபாட்டைநிரப்புதல் சொல் வழுக்களைதல், பொருள் முரண் அகற்றுதல், வழக்கிடம் காட்டல், சொன் மூலமும் வேரும் ஆய்தல், இம் மொழிச்சொல்லெனத் தெளிவித்தல் இன்ன பிறவெல்லாம் அகர முதலி ஆய்வாளர் கடப்பாடாய் இயல்கின்றனவாம்.

4.1. ஓர் அகர முதலி தொகுத்தற்கோ திருத்தற்கோ நால்வகைத் திறன் வேண்டும் என்பார் பாவாணர்:

''ஒரு மொழியில் அகர முதலி தொகுத்தற்கோ திருத்தற்கோ இலக்கண அறிவு, சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, சொற்றொகுப்பு ஆகிய நாற்றிறன் வேண்டும்''[1] என்பது அது. இந் நாற்றிறனும் பெற்றவர் பாவாணர் என்பார்[2] பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார்.

4.2. பாவாணர்க்கு அவ்வீறு இருந்தமை, ''இவற்றை ஒருங்கே யுடையவர் தனிப்பட ஓர் அகர முதலியைத் தொகுக்கலாம் அல்லது திருத்தலாம்''[3] என்றும்,

4.3. ''சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலியின் பெருந் தொகையான பல்வகைக் கடும் பிழைகளை ஆங்கிலத்திலும் தமிழிலும் தெளிவாக நான் வெளியிட்டுக் காட்டிய பின்பும் அவ்வகர முதலியைத் திருத்தப் பலர் வேண்டும் என்பது போல் ஏராளமாகச் செலவாகும் என்று பொறுப்பு வாய்ந்த பதவியில் உள்ளத் தமிழ்ப் பேராசிரியர் சொல்லி வருகின்றனர்''[4] என்றும்,

1. வண்ணனை மொழி நூலின் வழுவியல், பக். 67
2. செந்தமிழ்ச் செல்வி 55: 275
3.—4. வண்ணனை மொழி நூலின் வழுவியல், பக். 67

4.4. அவ்வகர முதலியைத் திருத்தத் தகுதி வாய்ந்த ஒருவரே போதும்; மூவாண்டிற்குள் திருத்தி விடலாம். ஐம்பதினாயிரம் உருபா விற்கு மேற் செல்லாது''[1] என்றும் அவர் உறுதியுரைப்பது கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

**சென்னைப் பல்கலைக் கழக அகர முதலி:**

5. சென்னைப் பல்கலைக் கழக அகர முதலியின் சீர்கேடு பற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிய பொத்தகங்களையன்றிப் பாவாணர் இயற்றிய வடமொழி வரலாறு, தமிழ் வரலாறு முதலிய நூல்களிலும் ஆங்காங்குச் சுட்டுகின்றார்.

5.1. அவர்தம் ஆய்வின் முழுமுடிவாக, ''சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலியில், ஆயிரக்கணக்கான தென் சொற்கள் விட்டப் பட்டிருப்பதும், தமிழின் அடிப்படைச் சொற்களையெல்லாம் வடசொல்லென்று காட்டியிருப்பதும் தமிழ்ச் சொன்மறைப்பாம்''[2] என்று குறிப்பிடுவது கருதத்தக்கது. அகர முதலியின் செம்மை எத்துணை இன்றியமையாதது என்பதையும் இக் குறிப்புக் காட்டுவதாம்.

**அகர முதலியில் ஏறும் பிழைகள்:**

6. அகரமுதலியில் வரும் தவறு எப்படி நிலை பெற்றுவிடுகிறது என்பதையும், ஏற்கப்பட்டு விடுகிறது என்பதையும் சான்று ஒன்றால் அறியலாம்.

6.1. சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியில் 'ஆரித்தல்' என்றோர் சொல் சுட்டப்பட்டுள்ளது: அதற்கு 'ஒலித்தல்' என்னும் பொருளும் தரப்பட்டுள்ளது. இச் சொல்லும் பொருளும் இணைக்கப் பட்ட வகையை அதற்குக் காட்டப்பட்ட எடுத்துக் காட்டே விளக்கும்.

''பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்'' என்பது (சிலப். 29: வள்ளைப்பாட்டு) எடுத்துக்காட்டு.

6.2. சிலப்பதிகாரப்பதிப்பில், பெரும் பேராசிரியர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள், ''ஆரிக்கும் = ஒலிக்கும்'' எனப் பொருள் எழுதியுள்ளார்கள். ஆதலால் அச்சொல்லை அகரமுதலியில் சேர்த்து, அதன் பொருளையும் குறித்து, அவ்வெடுத்துக் காட்டையும் காட்ட நேர்ந்ததாம்.

6.3. சிலப்பதிகாரப் பதிப்பு முற்பட்டது[3]; அகரமுதலித்

---

1. வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக்கம். 67.
2. தமிழ் வரலாறு, பக். 290.
3. முதற்பதிப்பு.

தொகுப்பு அதற்குப் பிற்பட்டது.[1] ஆதலால் இலக்கிய ஆட்சியுடைய சொல்லும் அதன் பொருளும் இடம் பெற்றது முறைமையான தேயாம்.

6.4. அகரமுதலியில் ''ஆரிக்கும் = ஒலிக்கும்'' என்பது அச்சிடப் பெற்றபின்னர், அச்சொல்லில் பிழையுண்மை அகராதிப் பதிப்பாசிரியர் வையாபுரியார்க்குப் புலப்படுகின்றது. அச்சுப்படியை ஏட்டுப் படியுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதை வழக்கமாகக் கொண்ட அவர்க்கு, 'ஆரிக்கும்' என்னும் சொல் தவறு பட்டது என்றும், அஃது 'ஆரிரக்கும்' என்று இருக்க வேண்டும் என்றும் தெளிவாயிற்று.

6.5. வள்ளைப்பாட்டின் இரண்டாம் பாட்டு ''வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்'' என்று பாண்டியன் மாலையையும், மூன்றாம் பாட்டு, ''பனந்தோ டுளங்கவரும் பாடலே பாடல்'' என்று சேரன் மாலையையும் சுட்டுகின்றன. ஆனால், முதற்பாட்டோ, இன்ன மாலை என்று சொல்லாமல், மாலைக் குறிப்பும் இல்லாமல் ''ஆரிக்கும், பாடலே பாடல்'' என்று அமைகின்றது. இதனை ஐயுற்று ஏட்டுப்படியுடன் ஒப்பிட்டுப்பார்த்த போது, ''ஆரிரக்கும்'' என்னும் பாடம் அமைந்திருக்கக் கண்டார். 'ஆர்' என்பது 'ஆத்தி'; ஆத்தி மாலைக்குரியவன் சோழன் என்பது வெளிப்படை. சேரனையும் பாண்டியனையும் குறித்த அடிகள்,[2] சோழனைச் சுட்டினார் என்பதும் முறைமை. ''முடிகெழு வேந்தர் மூவர்க்கும்'' உரிய சிலம்பு பாடுபவர் அல்லரோ அடிகள்?

**பாடம் கண்டு திருத்துதல்:**

7. அறிஞர் வையாபுரியார் கண்ட பாடம் அகராதி நினைவுகளில்[3] இடம் பெற்றது. ஆனால் சிலம்பின் மறுபதிப்புகளில் இடம் பெறவில்லை. சிலம்புக்குப் புத்துரைகண்ட நாவலர்[4] பதிப்பிலும், பெருமழைப் புலவர்[5] பதிப்பிலும் 'ஆரிரக்கும்' என்னும் பாடம் இடம் பெறவில்லை. தவறாக அமைந்து விட்ட சொல்லும், அதற்குத் தரப்பட்ட பொருந்தாப் பொருளும் நிலைபெற்று இன்று வரை வாழ்வுறுகின்றன. அம்மட்டோ; இவ்வகர முதலிச் சொல்லாட்சி, ''ஆரித்தல் = ஒலித்தல்'' எனப் பாவாணரையும் ஏற்று எழுத[6] வைத்து விட்டது. ஆகலின், அகரமுதலியில் இடம் பெறும்

1. முதற்பதிப்பு.
2. இளங்கோவடிகள்
3. அகராதி—நினைவுகள் பக். 9-10
4. நாவலர் ந.மு. வேங்கடசாமிநாட்டார்
5. பெருமழைப்புலவர் ச. சோமசுந்தரனார்
6. தமிழ்வரலாறு. பக். 176.

சொல்லாட்சியின் செல்வாக்கை எடுத்துரைக்க வேண்டுவது இல்லையாம்.

7.1. இந்நிலையில் மொழி நூல் அறிஞராவோர்க்கு, அகர முதலியின் தொகுப்பும் ஆய்வும் எத்துணை இன்றியமையாது வேண்டும் என்பது சொல்லாமலே வெளிப்படும். இஃதுணர்ந்தமையால் தான் பாவாணர் தாமே அகரமுதலியாகவும், அகரமுதலியே தாமாகவும் விளங்கினார் என்க.

## 5. பன்மொழிப் பயிற்சி

**பன்மொழிப் புலமை:**

1. சொல்லாய்வில் சுடர்விட வல்லார்க்கு முற்கூறப்பட்ட திறங்களுடன், பன்மொழிப் புலமையும் இன்றியமையாததாம்.

1.1. பாவாணர் தம் ஆய்வுக்கு முன்னோடியாகக் கொண்டவர் தவத்திரு. மறைமலையடிகளார். அவர் மும்மொழிப் புலமை வல்லார். "உயர்தனிச் செம்மொழி" தமிழ் என்பதைக் காட்டும் ஒப்பிலக்கணம் இயற்றிய கால்டுவெல் பெருமகனார்[1] பன்மொழிப்புலவர். "சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி" இயற்றிய தவத்திரு. ஞானப்பிரகாச அடிகளாரும்[2] பன்மொழிப்புலவர். இம் முன்னோடிகளின் ஆய்வுக்கு அடிப்புலமாக இருந்த பன்மொழிப் புலமை, பாவாணரை ஆட்கொண்டது என்பது இயற்கையேயாம். அன்றியும், பன்மொழிப் புலமை எய்துதற்கு ஏற்ற மூளைக் கூர்மை இயற்கையில் வரப்பெற்றிருந்தமையால், இவ்வார்வக்கோள் உந்துதலாய் அமைந்து, தாமே முயன்று பன்மொழிப் புலமை நலம் எய்தவும், அதன் பயனைத் தமிழ் ஆய்வுக்கு இயைத்து முடிவு காணவும் வாய்த்ததாம். பாவாணர் படைத்த ஒவ்வொரு நூலும் என்பதென்ன, ஒவ்வொரு கட்டுரையும், ஒவ்வொரு பொழிவும், ஒவ்வொரு சொல்லைப் பற்றிய சிற்றாய்வும் கூட - அவர்தம் பன்மொழிப் புலமையைப் பாரித்துரைக்க வல்லவாம்.

---

1. "ஏறக்குறைய இருபதாண்டுகள், தென்னிந்திய மொழிகளான தமிழ், தெலுங்கு, மலையாளம், துளுவம், குடகு, துதம், கோதம், கோண்டு, கந்தம், இராசமகால், ஒராவோன் ஆகிய மொழிகளை ஆராய்ச்சி செய்தார்" தமிழ்ப்புலவர் வரிசை.6 பக், 124.

2. "தமிழ், சமக்கிருதம், ஆங்கிலம் இலத்தீன் முதலிய 20 மொழி வரையில் அறிந்தவர்"—தமிழ்ப்புலவர் அகராதி பக். 209.

**ஆங்கில மொழியில் திறம் :**

2. பாவாணர், தமிழ்ப் புலமை ஆழத்தை அகப்படுத்திக் கொண்ட திறத்தை முன்னரே கண்டுள்ளோம். ஆங்கிலமொழித் திறம் பெற்ற வகையையும், அதன் அழுத்தத்தையும் அவரே உரைக்கின்றார்:

2.1. 'அன்று ஆங்கிலப்பற்றாளனாகவும் பேச்சாளனாகவும் மாணவர் (ஆங்கில) இலக்கிய மன்றச் செயலாளனாகவும் இருந்த தனால், ஆங்கில இலக்கியத்தைக் கரைகாணவும். ஆக்கசுப்போர்டு (oxford) என்னும் எருதந்துறையில் பணி கொள்ளவும் விரும்பினேன்.'[1]

2.2. ஆங்கில நாட்டுப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலப் பேராசிரிய ராகப் பணி வாய்ப்புப் பெறும் வேணவாவுடன் ஆங்கிலம் கற்ற பயன், அன்னைத் தமிழ் வளர்ச்சிக்குத் திருப்பமாகியது திருவருட் செயலேயாம்.[2]

2.3. ஆங்கிலம் உலகளாவிய மொழி; உலகவர் அனைவரும் ஊட்டி வளர்த்து நாளும் நாளும் உரமேற்றி வரும்மொழி. அம்மொழி ஒன்றைக் கொண்டே உலகோர் அறிவுக் கொள்ளை எல்லாம் கூட்டுண்ண வாய்த்தல் கண்கூடு. அம்மொழி ஒன்றன் திறங்கொண்டே பன்மொழிப் புலமையயும் ஒருங்கு பெற வாய்ப்பிருந்தும், அம் மட்டில் நின்றாரல்லர் பாவாணர். பலப் பல மொழிகளை, வாணாள் அளவும் கற்றுக் கொண்டே இருந்தார்.

**பாவாணர் கற்றமொழிகள் :**

3. பாவாணர் கற்றறிந்த மொழிகள் எத்தனை?

''திரவிடமொழிகள், இந்திய மொழிகள், உலகமொழிகள் ஆகிய வற்றில் பெருமொழிகளாய் அமைந்த 23மொழிகளின் இலக்கண அறிவும் பெற்றவர்''[3] என்பர்.

3.1. பாவாணர் இயற்றிய நூல்களுள் ஒன்று தமிழ் வரலாறு. அந்நூல், அவர் சேலங் கல்லூரியில் பணிசெய்த காலத்திலேயே எழுதி

---

1. என் தமிழ்த் தொண்டு இயன்றது எங்ஙனம்? - செந்தமிழ்ச் செல்வி 44:217.

2. ''இறுதியில், தமிழ்கற்றதனாலும், இசைப்பாட்டும் செய்யுளும் இயற்றி வந்ததனாலும், இசைத்தமிழ்ப் பித்தனானதாலும் நான் அறியாவாறு என் மனப்பாங்கை மாற்றியதனாலும் நான் கற்ற ஆம்பூர்ப் பள்ளியிலேயே அது, உயர்நிலைப்பள்ளியாக வளர்ச்சியுற்றிருந்தபோது உதவித் தமிழாசிரியனாக 1921 ஆம் ஆண்டில் அமரநேர்ந்தது''—செந்தமிழ்ச் செல்வி 44:217

3. ஊற்று; பெங்களூர்த் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு 9:11

வெளியிடுமாறு மறைமலையடிகளாரால் பணிக்கப் பெற்ற[1] தகவு மிக்கது. ஆயினும், 1967 இல் 'நேசமணி பதிப்பக' வெளியீடாக வெளிப்பட்டது. அந்நூலில், குறிக்கப்படும் தமிழ்க் குறுக்க விளக்க மொழிப்பட்டியில்[2] மொழிப்பெயர்கள் ஐம்பத் தெட்டும், ஆங்கிலக் குறுக்க விளக்க மொழிப்பட்டியில்[3] மொழிப்பெயர்கள் பதினேழும் ஆக எழுபத்தைந்து மொழிகள் இடம்பெற்றுள. கருவிநூற் பட்டியில்[4] பதினாறு மொழிகளின் நூல்கள் குறிக்கப் பெற்றுள. இவற்றை மேல்வாரியாகப் பார்ப்பினும் பாவாணரின் பன்மொழிப் புலமை தெள்ளிதின் விளங்கும்.

3.2. இனித், தமிழ் வரலாற்றின் உள்ளடக்கப்பகுதியில் வரும் திரிநிலைப் படலச் செய்திகள் தெலுங்குத் திரிபு[5], பிராகுவித் திரிபு[6] முதலியவற்றையும், சிதை நிலைப்படலச் செய்திகள் வேதத் தமிழ்ச் சொற்கள்[7] சமற்கிருதவாக்கம்[8] முதலியவற்றையும் விரித்துக் கூறுதலை அறிவார் பாவாணர் தம் பன்மொழிப் புலமையைக் கையிற் கனியெனக் காண்பர்.

3.3. 'ஆங்கிலப் புலமை கொண்டே, பன்மொழிப் புலமையையும் பெற்றிருக்கும் வாய்ப்பு உண்டே' என்பார் உளராயின், பாவாணர் பன்மொழிக் கல்விப்பேற்றை அவர் காலந்தோறும் எழுதிய 'தீராக் காதல்' திருமுகங்கள் தெள்ளிதின் விளக்குகின்றனவாம்,

**பன்மொழி நூல்கள் தொகுத்தல் :**

4. "C. 477, மருத வீரன் கோயில் தெரு, புத்தூர், திருச்சி" என்ற முகவரியில் பாவாணர் வாழ்ந்த நாளில், மலையாள இலக்கணப் புத்தகமும், Arabic English vocobulary யும் மூர் அங்காடியில் வாங்கி

---

பாவாணர் மொழியாராச்சிக் கோட்பாடுகள் பேரா. கு. பூங்காவனம் க.மு.

1. முகவுரை. vi
2. பக். XIX
3. பக். XIX
4. பக். XXI-XXIII
5. பக் 251.
6. பக். 253.
7. பக். 276.
8. பக். 279.

அனுப்பக்''[1] கோருகிறார். அது, 4.10-'34 ஆம் நாள் ஆகும்.

4.1 ''ஹிந்தி பயில்கின்றேன்''[2] என்பதை 13.11.' 35 இல் குறிப்பிடுகிறார்.

4.2. 23.8.37 இல், Arabic grammer, Hebrew grammer, Chinese self-taught & grammer ஆகியவற்றை Higgin bothams வாயிலாய் வருவித்துத் தருமாறு''[3] வரைகின்றார்.

4.3. 23.8.39 இல், ''French grammer, German grammer ஆகிய இரண்டையும் மூர்அங்காடியில் வாங்கியனுப்பக்''[4] கேட்கிறார்.

4.4. இனி இந்தியில் 'விசாரத்' பட்டம் பெற்றவர் என்பதும், வடமொழி வரலாறு எழுதும் அளவுக்கு வடமொழிப் புலமை மிக்கவர் என்பதும், தெலுங்கு, கன்னடம், துளுவம், துடவம், மராட்டியம் முதலாய மொழிகளைத் தெளிந்தவர் என்பதும் அவரொடு தொடர்புடையார் நன்கனம் அறிந்தவை.

4.5. 1931 ஆம் ஆண்டு முதலே ஆங்கிலத் தமிழ்ச் சொற்கள் அறுநூறு[5] என்றும், வடமொழித் தென் சொற்கள்[6] என்றும், வடமொழிச்சென்ற தென்சொற்கள்[7] என்றும் கட்டுரை எழுதத் தொடங்கி விட்டார் பாவாணர். அக்கால உழைப்பின் அரும் பயனாகவே ''ஒப்பியன் மொழிநூல் முதன்மடலம்; திராவிடம் முதற்பாகம்''[8] வெளிப்பட்டதாம்.

**ஒப்பியன் மொழிப் புலமை :**

5. மொழிநூல் நெறிமுறைகள் இவையென விளக்கும் பாவாணர் அதன் இரண்டாம் நெறிமுறையாக, ''மொழிநூல் என்றும் ஒப்பியல் தன்மையுள்ளது''[9] என்கிறார்.

அதில், ''அட்டையாடல் என்பதன் பொருள் உணர்தற்குத் தெலுங்கறிவும் கன்னட அறிவும் வேண்டியதாயிருக்கின்றது. அட்ட அல்லது அட்டெ = முண்டம் (தெ.க).

---

1-4. திரு. வ. சு. வுக்கு எழுதிய கடிதங்கள்.

5. ''ஆங்கிலத் தமிழ்ச் சொல் அறுநூறு எந்தமாத வெளியீட்டில் வருகிறது'' 24.7.31 கடிதம் (வ.சு.)

6. செந்தமிழ்ச் செல்வி 13; 253, 299, 363, 418, 501, 577.

7. செந்தமிழ்ச் செல்வி 9:295; 14:28, 79.

8. பண்டித புலவ வித்துவ கீழ் கலைத் தேர்ச்சியாளன் ஞா. தேவநேசன் எழுதியது. 1940.

9. ஒப்பியன் மொழிநூல்-மொழிநூல் நெறிமுறைகள். பக். 13.

''அம்பு (வளையல்), அம்பி (படகு, காளான்), ஆம்பி (காளான்) என்னும் சொற்களின் வேர்க்கருத்தை லத்தீனிலுள்ள Ambi என்னுஞ் சொல்லும், கிரேக்கிலுள்ள Amphi என்னும் சொல்லும் உணர்த்து கின்றன. ''Amphi = round; (amphitheatre என்னும் தொகைச் சொல்லை நோக்குக)''[1] என விளக்குகிறார்.

5.1. ஒப்பியன் மொழிநூல் வெளிவந்தது 1940 ஆம் ஆண்டு ஆகும். ஆனால், அந்நூல் ஆய்வு, அதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்னரே பாவாணர் கவனத்தை ஈர்த்துள்ளமையை அறிய வரு கின்றது.[2] ஆகலின், 1930 ஆம் ஆண்டுக்கு முன்னரே பிறமொழி களைக் கற்பதில் ஆர்வங்கொண்டு விட்டார் என்பது தெளிவாகும். 1931 ஆம் ஆண்டிலேயே வடமொழித் தென் சொற்களை வரை கின்றாரே![3]

## 6. சொல்லாய்வுத் தூண்டல்

**தூண்டலும் துலங்கலும் :**

1. 'ஒவ்வொரு துலங்கலின் மறைவிலும் ஒரு தூண்டல் உள்ளது' என்பது உலகறிந்த செய்தி. மண முண்மையால், மலருண்மை அறியப் படுவது போலத், துலங்கல் உண்மையால் தூண்டல் உண்மை அறியப்படும்.

1.1. மராத்திய மன்னர் சிவாசியின் வழிமுறையில் வந்தவர்கள் தஞ்சைப் பகுதியைக் கி.பி. 1676 முதல் 1855 வரையிலும் ஆட்சி செய்துள்ளனர். அவ்வேந்தர்களுள் சரபோசி ஒருவர்.

---

1. ஷை. ஷை 13-14

2. ''பல தூய தென் சொற்களையும் வடசொற்களாகத் தமது உரை களிற் காட்டிவருவது பத்தாண்டுகட்கு முன் என் கவனத்தை இழுத்தது. உடனே அச்சொற்களை ஆராயத் தொடங்கினேன்'' ஒப்பியன் மொழிநூல்-முகவுரை-iii.

3. 1932இல் 'தொல்காப்பியச் சூத்திரக் குறிப்புரை' எனக் கட்டுரை வரைந்துள்ள பாவாணர் 'வடசொல்லாகாத் தென்சொற்கள்' சிலவற்றைச் சுட்டி இறுதியில், ''இவற்றின் விரிவையெல்லாம் எமது முதற்றாய் மொழியிற் கண்டு கொள்க'' என்றெழுதுகிறார். இதனால் அப்பொழுதே முதற்றாய் மொழி என்னும் நூல் உரு வாக்கத்தில் இருந்த தென்றும், பின்னர் 1940 இல் வெளியா யிற்று என்றும் கொள்ள முடிகின்றது. செந். செல்வி 9 : 510.

1.2. சரபோசி மன்னர் ஒருமுறை காசிக்குச் சென்றார். சென்றவர், கல்கத்தாவில் இருந்த ஆங்கில அரசின் அரசப் பேராளரைக் கண்டு உரையாடினார். அரசப்பேராளர் திருக்குறளை ஆங்கிலத்தில் கற்று, அதன்மேல் ஆர்வம் கொண்டிருந்தார். தமிழ் நாட்டுப் பகுதியில் வாழும் அரசர் சரபோசி, திருக்குறளை அறிந்திருப்பார் என்று எண்ணினார். தமிழில், அதனைக் கேட்க விரும்பினார். ஆனால், அரசர் சரபோசி அதுகாறும் திருக்குறளைப் பற்றி அறிந்ததில்லை. தமிழ்மொழி பற்றி அக்கறை காட்டியதும் இல்லை. வடமொழி, மராத்தி மொழிப் புலவர்களையே உடனழைத்தும் சென்றிருந்தார். ஆகலின், அரசப் பேராளர் வினாவுதல் அவர் நெஞ்சில் ஆழத் தைத்தது. தாம் ஆட்சி செய்துவரும் மண்ணில் வழங்கும் மொழியைப் பற்றி எண்ணிப் பாராத தவற்றை உணர்ந்தார். எனினும், திறமையாக, ''என்னுடைய புத்தக சாலையில் இதைப்போல ஆயிரக் கணக்கான தமிழ் நூல்கள் இருக்கின்றன. ஆனால், எல்லாவற்றையும் நான் தெரிந்து வைப்பது முடியாத செயல். நான் ஊர்போய்ச் சேர்ந்ததும் அப்புத்தகத்தை அனுப்புகிறேன்'' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டார்.

1.3. தஞ்சைக்கு வந்ததும் அரசர் சரபோசிக்குத் தமிழ்ச் சுவடித் தொகுப்பில் அக்கறை ஏற்பட்டது. மற்றை மற்றை மொழிச் சுவடிகளின் மேலும் ஆர்வம் உண்டாயது. 'சரசுவதி மால்' என்னும் பெருமை மிக்க சுவடிச் சாலையாக இப்பொழுது தஞ்சையில் விளங்கும் நிலையம் உருவாகிய வகை ஈதேயாம்[1] அரசப் பேராளர் தூண்டல் இல்லையானால் இத் துலங்கல் வாய்த்திராதாம்.

**மடலும் மடலமும் :**

2. மாகறல் கார்த்திகேய முதலியார் பாலாற்றங்கரையில் நடந்து கொண்டிருந்தார். ஆங்கே, 'மடல்' என்னும் சொல்லைக் கேட்டார். அச் சொல், அவரைத் தூண்டியது. சொல்லாய்வில் ஈடுபட்டார். 'மொழிநூல்' என ஒரு நூலைப் படைக்க அஃதேவிற்று. 'மொழி நூல்' என்னும் பெயர்ாட்சியைத் தமிழில் முதற்கண் தந்தவர் மாகறல் கார்த்திகேயரே[2] ஆவர். மடல் என்னும் ஒரு சொல்லின் தூண்டல் எத்தனை மடல்களில் மடலம் மடலமாக எழுத வைத்தது!

**உரை நூல்களால் வந்த உறைப்பு :**

3. பாவாணரின் சொல்லாய்வுக்கும் இத்தகு தூண்டல் உண்டு. அத்தூண்டலை அவரே குறிப்பிடுகின்றார் :

---

1. புதியதும் பழையதும், உ.வே.சா.
2. ''மட்டைவாய் ஒருவன் மடுத்தனன் கூழினை, மட்டைச் சொற்

''பள்ளியிறுதி (School Final), இடை நடுவு (Intermediate), கலையிளைஞர் (B.A.) முதலிய பல்வகைத் தேர்வு(பரீட்சை)கட்கும் உரிய தமிழ்ச் செய்யுட் பாடங்கட்கு, தொடர்ந்து உரை அச்சிட்டு வரும் சில உரையாசிரியர்கள், தமது வரையிறந்த வடமொழிப்பற்றுக் காரணமாக, தென்சொற்களையெல்லாம் வடசொற்களாகக் காட்டவே இவ்வுரை யெழுந்தனவோ என்று தனித்தமிழர் ஐயுறுமாறு, கலை—கலா; ஆவிறு ஐயான வடசொல்; கற்பு-கற்ப என்னும் வடசொல்; சேறு-ஸாரம் என்னும் வடமொழியின் சிதைவு; உலகு-லோகமென்னும் வடசொல்லின் திரிபு; முனிவன்-மோனம் என்னும் வடசொல்லடியாய்ப் பிறந்தது; முகம்-வடசொல்; காகம்-காக என்னும் வடசொல்; விலங்கு—திரியக்ஸ் என்னும் வட சொல்லின் மொழிபெயர்ப்பு எனப் பல தூய தென் சொற்களையும் வடசொற்களாகத் தமது உரைகளில் காட்டி வருவது பத்தாண்டுகட்கு முன் என் கவனத்தை இழுத்தது. உடனே அச் சொற்களை ஆராயத் தொடங்கினேன்.[1]''

**சொல்லாய்ந்த முறை:**

4. சொற்களை ஆராய்ந்த முறையையும் பாவாணர் விளக்கு கின்றார்.

''அவற்றின் வேர்களையும் வேர்ப் பொருள்களையும் ஆராய்ந்த போது, அவையாவும் தென் சொல்லென்றே பட்டன. அவற்றை முதலாவது வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொதுச் சொற்களாக வும், போலிப் பொதுச் சொற்களாகவும் கொண்டு, இவ்வுண்மையை வேறொரு மொழியினின்றும் ஒருபோகு முறையான் உணர்த்துமாறு, ஆங்கிலத்திற்கும் தமிழுக்குமுள்ள பொதுச் சொற்களை ஆராயத் தொடங்கினேன்.''[2]

4.1. ''சேம்பர்ஸ்(Chambers), ஸ்கீற்று(Skeat) என்பவர்களின் ஆங்கிலச் சொல்லியலகராதி (Etymological Dictionary) களைப் பார்த்தபோது, ஆங்கிலத்திற்கும் தமிழிற்கும் பொதுவான சில ஆங்கிலச் சொற்கள் அகப்பட்டதுடன் அவற்றின் வாயிலாகவே, அவற்றின் மூலமாகவோ இனமாகவோ உள்ள சில இலத்தீன் (Latin) கிரேக்கு(Greek)ச் சொற்களும் அகப்பட்டன. பின்பு இலத்தீன் கிரேக்கு அகராதிகளைத் துருவினேன். வேறுசில சொற்களும் எனக்குத் துணையாயின.[3]

---

காரணம் வந்தது மனக்கண், மடை முதலாய வழக்கும் விளங்கின, இடைவிடா திங்ஙனம் எல்லாச் சொல்லையும், அறிவுறவேண்டு மென் றகத்துக் கொளீஇப், பொறிமிகு நாமகட் போற்றெடுத் தனமே''—நூலின் தோற்றம். மொழிநூல், பாயிரவியல்.

1—3. ஒப்பியன் மொழி நூல்; முகவுரை.

4.2. ''அவற்றுள் navis (நாவாய்), amor (அமர்-அன்பு கூர்) முதலிய இலத்தீன் சொற்களும் telos(தொலை-தூரம்) Palios(பழைய) முதலிய கிரேக்குச் சொற்களும் எனக்குப் பெரிதும் வியப்பை யூட்டின. இவற்றுடன், தமிழ் இந்திய—ஐரோப்பிய மூலமொழிக்கு மிக நெருங்கியதென்று, கால்டுவெல் (Caldwell) கூறியிருப்பதையும், அவரும் குண்டட்டும் (Gundert) வடமொழியிலுள்ள திராவிடச்சொற்கள் சிலவற்றை எடுத்துக் காட்டியிருப்பதையும், பண்டைத் தமிழகம் தென்பெருங் கடலில் அமிழ்ந்துபோன குமரி நாடென்றும், அந்நாட்டிலேயே தமிழர் தலைசிறந்த நாகரிகத்தை அடைந்திருந்தனரென்றும் தமிழ்த் தொன்னூல்கள் கூறுவதையும், மாந்தன் முதல் முதல் தோன்றினனது இலமுரியா (Lemuria - குமரிநாடு) என்று வியன்புலவர் ஹெக்கேல் (Haeckel) கூறியிருப்பதையும், தமிழ் உலக மொழிகள் எல்லாவற்றிலும் எளிய வொலிகளைக் கொண்டு இயற்கைத் தன்மையுள்ள தாய், அதன் சிலபல சொற்கள் பல மொழிகளிலும் கலந்து கிடப்பதையும் சேர நோக்கினபோது, தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை முதலிய தனிப் பண்புகள் புலனாயின. பின்பு மொழிநூற் றுறையில் ஆழ இறங்கினேன்''[1] என்கிறார்.

**தமிழகத்தில் ஒரு விழிப்புநிலை:**

5. மொழி நூற்றுறையில் பாவாணர் ஆழ இறங்கிய சூழலில் தமிழகத்தில் சில விழிப்புணர்வுகள் தோன்றியிருந்தன.

5.1. ''இந்திய வரலாற்றைத் தெற்கில் இருந்துதான் தொடங்க வேண்டும்'' என்ற கருத்தைப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை வலியுறுத்தியிருத்தார்.[2]

5.2. பேரா. சுந்தரம்பிள்ளையின் கருத்தை வின்செந்து சிமிது சுட்டிக் காட்டி மேலும் வலியுறுத்தியிருந்தார்.[3]

5.3. திரு. பி. தி. சீனிவாசையங்காரும் திரு. வி. ஆர். இராமச் சந்திர தீட்சிதரும் இம்முறையைக் கடைப்பிடித்துத் தமிழர் வரலாறும் தென்னாட்டு வரலாறும் எழுதியிருந்தனர்.[4]

5.4. சூரியநாராயண சாத்திரியார் தம்பெயரைப் பரிதிமாற் கலைஞர் என்று மாற்றித் தனித்தமிழ் நினைவை யூட்டினார்[5]

1. ஒப்பியன் மொழி நூல்: முகவுரை.

2. தமிழ்வரலாறு - முன்னுரை பக். 21-22.

3,4. ஷை ஷை ஷை.

5. தமிழ் வரலாறு, கிளர்நிலைப்படலம் பக். 293.

5.5. பாம்பன் குமர குருதாச அடிகள், சேந்தன் செந்தமிழ் என்னும் ஐம்பான் வெண்பாத் தனித்தமிழ் நூலியற்றி, நூற்றுக் கணக்கான வடசொற்கட்கு நேர்த் தென் சொற்களும், மொழி பெயர்த்தும் ஆக்கியும் வைத்தார்.[1]

5.6. பா.வே. மாணிக்க நாயகர் தமிழ் நெடுங்கணக்கை ஆழ்ந் தாய்ந்து தமிழே உலக முதன்மொழி எனக் கண்டும், அதை அஞ் சாது எங்கும் எடுத்துரைத்தும் வீறு காட்டினார்.[2]

5.7. நெல்லைப் பால்வண்ண முதலியார் சொற்பொழிவாற்றுப் படை என்னும் பெயரிய தனித்தமிழ் உரை நடை நூல் ஒன்றனை உலாக் கொள விடுத்திருந்தார்.[3]

5.8. பேரா. கா. சு. பிள்ளை ''தமிழ் மொழியமைப்பும் நூற் கொள்கையும்''[4] ''திருநான்மறைவிளக்கம்''[5] முதலிய நூல்களை இயற்றியிருந்தார். தொல்காப்பியத்திற்கு ஆராய்ச்சி முன்னுரையும்[6] வரைந்திருந்தார்.

5.9. அருட்டிரு ஞானப்பிரகாச அடிகளாரும்,[7] மாகறல் கார்த் திகேய முதலியாரும்[8] சொற்பிறப்பாராய்ச்சி செய்து நூல்களை உலவ விட்டிருந்தனர்.

5.10 இவ்வெல்லாவற்றிற்கும் மேலாகத் தவத்திரு. மறைமலை அடிகளாரால் தனித்தமிழ் இயக்கம் தொடங்கப் பெற்றதுடன், கடந்த மூவாயிரம் ஆண்டாக மறைந்து கிடந்த தனித்தமிழை மீட்டு, எப் பொருள் பற்றியும் செந்தமிழில் எழுத இயலும் என்னும் உண்மை நிலை நாட்டப்பட்டிருந்தது.[9]

---

1. தமிழிலக்கியவரலாறு பக். 229.
2. தமிழ்வரலாறு. கிளர் நிலைப்படலம் பக். 293.
3. தமிழ் இலக்கியவரலாறு பக். 228.
4. தமிழ் இலக்கியவரலாறு பக். 231.

5—6. தமிழ் வரலாறு பக். 295. திருநான்மறைவிளக்கம், செந். செல். சிலம்பு 1

7. செந்தமிழ்ச் செல்வி 44:172-3.
8. தமிழ் இலக்கியவரலாறு பக். 229.
9. தமிழ் வரலாறு பக். 294-5; மறைமலையடிகள் வரலாறு பக். 297, ஆண்டு 1916.

**சொல்லாய்வை எள்ளுநர்:**

6. இவ்வாறு சொல்லாய்வு மொழியாய்வுக் கருத்துகள் வெளிப் பட்டுக் கொண்டிருந்த சூழ்நிலையிலே இவற்றை எள்ளி நகையாடி யும் எதிருரையாடியும் நூல்களும் கட்டுரைகளும் கிளர்ந்தன.

6.1. ''ஓர் ஆங்கில ஆசிரியர் தமது நாட்டில் சொல்லாராய்ச்சி யாளர் என்பது ஒரு நிந்தைச் சொல் ஆகிவிட்டதென வருந்துகி றார். பலதுறைகளிலும் அறிவுமிகுந்து சொல்வரலாற்றுத் துறையி லும் நீண்ட காலப் பயிற்சியுடைய மேனாட்டில் இவ்வாராய்ச்சி இங்ஙனம் கூறப்படுமானால், நமது நாட்டில் நிகழும் ஆராய்ச்சி களைக் குறித்து யாது புகல்வது? பல அறிஞர்களும் சொல்லாராய்ச்சி என்றால் எள்ளி நகையாடுகின்றனர். அவ்வாராய்ச்சியில் தலையிடு வோரது தொகுதியில் எண்ணப்படுதற்கும் நாணுகின்றனர். 'அற் றாரைத் தாங்கும் வைவேல் அசதி' என்றபடி, இவ்வகை ஆராய்ச்சி யாளரை ஆதரிப்பதற்கெனவே சில பத்திரிகைகளும் கழகங்களும் தோன்றியுள்ளன! இவர்களைப்போற்றிப் புகழ்வதற்கென்றே சில அறிஞர்களும் உள்ளார்கள்.''[1]

அங்கதச்சுவைக்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளத் தக்கவற்றுள் ஈதொன்று என்னுமாறு சொல்லாய்வு சுட்டப்பட்டுள்ளதறிக.

6.2. ''மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா'' (877) எனவரும் தொல்காப்பியக் கருத்து, ''பார்த்த பார்வையில் பொருள் அறிதற்கு இயலாது; நுண்ணிதிற் பார்த்துக்காரணம் கொள்ள வேண்டும்'' என்பதாக இருக்க, ''மொழிப்பொருட் காரணம் ஆராய்ந்து பார்த்தால் ஒன்றுமே தோன்றாது; எல்லாம் இடுகுறியே'' என்று பொருள் கண்ட புலமையாளர்களும் தந்திரம் காட்டினர்.[2]

6.3. ''மக்களின் பேச்சுச் சொற்கள் அவர்கள் கருத்தை வெளி யிடுதற்கு அமைந்த சங்கேதக் கருவியே. நாம் நாற்காலி என்று குறிக்கிற பொருளை ஆங்கிலேயன் 'செயர்' என்றும் பிரஞ்சுக்காரன் 'செயிஸ்' என்றும், ஜெர்மானியன் 'ஸ்டூல்' என்றும் கூறுவான். இச் சொற்களுக்கும் பொருளுக்கும் எவ்விதமான தொடர்பும் கிடை யாது. எல்லாச் சொற்களும் இப்படியே. சொற்கள் குறியீடுகளே யன்றி வேறொன்று மல்ல. இக்குறியீடுகளை அமைப்பதற்கு மக்

1. சொற்கலை விருந்து. பக். 79.

2. ஷை பக். 78.

களின் அறிவு துணையாதல் வேண்டும்.''[1] இத்தகைய கருத்துகளை அப்புலமையாளர்கள் செல்வாக்குடன் உலவ விட்டனர்.

6.4. ''திருக்குறளிற் கூட நூற்றுக்கு மேற்பட்ட சொற்கள் வட மொழிக்குரியன''[2] என்றும், ''இன்றையத் தமிழில் சுமார் நூற்றுக்கு ஐம்பது விழுக்காடு வடமொழிச் சொற்கள் என்னலாம்''[3] என்றும் எடுத்துரைத்தனர். ''பாண்டவர் வழிவந்தவரே பாண்டியர்''[4] என்று பெருமித முற்றவரும் இருந்தனர்.

6.5. நமது நாட்டில் ஆழ்ந்த தமிழறிவுடையாரைக் காணுதல் அருமையாகி விட்டது. அபிமானமும் அகங்காரமுமே தலைவிரித் தாடுகின்றது.''[5] என்னும் இரங்கன்மாலைக் கடுமொழியும் கிளர்ந்தது.

**பாவாணர் துணிவு :**

7. அரணும் முரணுமாகிய இவ்விரண்டற்கும் இடையே இருகளிறுகள் இகலி இழுக்கும் தேய் புரிப் பழங்கயிறு''[6] ஆகாது துணிந்து ஆய்ந்து, துணிந்து எடுத்துரைத்து ஒப்பாரும் மிக்காரும் இல்லா வகையில் சொல்லாய்வில் பாவாணர் திகழ்ந்தார்.

7.1. பாவாணர் சொல்லாய்வில் புகுந்த தொடக்க நாளிலேயே-ஐம்பான் ஆண்டு ஆய்வில் முதல் இருபது ஆண்டுகளின் ஆய்விலேயே-மறைமலையடிகளார் உள்ளங்கவர்ந்த பாராட்டுக்கு உரிமை பூண்டார்.

7.2. பண்டித ஞா. தேவநேயனார் பி. ஒ. எல். பொதுவாக மொழிநூல் ஆய்வு முறைகளைப் பின்பற்றித், தமிழ்ச்சொல் ஆராய்ச்சி பற்றி எழுதியநூல்கள் தமிழ் மொழிக்கு நீண்ட காலத்தேவையினை நிறைவு செய்தன. எம்முடைய இளந்தைக் காலத்திலே தலைமைக் கண்காணியார் தவத்திரு திரஞ்சு (Trench) எழுதிய சொல்லாராய்ச்சி, போரசிரியர் மாக்சுமூலர் எழுதியமொழியறிவியல், போராசிரியர்சாய்சு எழுதிய 'ஒப்பியல் மொழிநூல்' முதலிய ஆங்கில நூல்களை யாமே பெருவிருப்புடன் படித்துக் கொண்டிருக்கும் போது, அந்த முறையில் தமிழ்ச் சொற்களை ஆராய வேண்டும் என்று விரும்பினோம். தமிழ்ப் பேரறிஞர்கட்குப் புலப்படாமல் மறைந்து கிடந்த விரிவாகவும்

1. சொற்கலை விருந்து பக். 6.
2. தமிழின் மறுமலர்ச்சி பக். 70.
3. சொற்கலை விருந்து பக். 98.
4. ஆராய்ச்சித் தொகுதி; அருச்சுனனும் பாண்டிய மரபும் பக். 70-78.
5. ஆராய்ச்சித் தொகுதி பக். 92.
6. நற்றிணை : 284.

வியப்பாகவும் உள்ள தமிழ் மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் கால்டுவெல் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்வு நூலால் புலப்படலாயிற்று. எனினும் பண்டாரகர் கால்டுவெல் அறியப் படாத வட்டாரத்தில் செய்ததொரு முயற்சி யாதலால் தமிழ்ச் சொற்களையெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந்துள்ளார் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. இதுவே மொழியியலை ஆராய வேண்டுமென்று எம்மைத் தூண்டியது.

''எனவே, ஞானசாகரம் (அறிவுக் கடல்) என்னும் எம்முடைய இதழின் முதல் தொகுதியில் அத்துறையில் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதி வெளியிட்டேம். ஆனால் அப்போது சமயம் மெய்ப்பொருளியல் இலக்கிய வரலாறு ஆகிய துறைகளில் எம்முடைய முழுக்கவனத்தையும் செலுத்த வேண்டி ஏற்பட்டமையால் மொழியாராய்ச்சித் துறையில் தொடர்ந்து ஈடுபடக் கூடவில்லை. ஆயினும் தகுதியுடைய அறிஞர் யாராவது இத்துறையில் ஆராய்வதற்கு முன்வரக் கூடுமா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேம். அப்போது யாழ்ப்பாணம் திருத்தந்தை ஞானப் பிரகாசர் தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது. எனினும் மொழியியல் ஆராய்ச்சித் துறை மிகவும் விரிவும் ஆழமுமுடையாதாதலால் பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக் கொண்டு நன்கு புரிந்து கொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினேம். அந்த நேரத்தில் திருதேவநேயனார் யாம் எதிர்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியது கண்டு பெருமகிழ்வுற்றேம். அத்துறையில் அவர் மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து எழுதியிருப்பவற்றைத் தமிழ் அறிஞர்கள் நன்றாக நம்பலாம்.

''சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனார் ஒப்பற்ற தனித் திறமையுடையவர் என்றும், அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருகின்றேம்''[1]

இக்குறிப்புகள் 1949 இல் மறைமலையடிகளார் பாவாணர்க்கு வழங்கிய சான்றிதழின் கண் பொதுளியுள்ளவையாம்.

7.3. தமிழாய்வில் ஆழ்ந்து ஆழங்கண்டவரும் சொல்லாய்வே தம் ஆய்வுப்பணியாக்கிக் கொண்டவருமாகிய பாவாணர்க்குத்தமிழ், வடமொழி, ஆங்கிலம் என்னும் மும்மொழிப் புலமை சான்றவரும் தேனும் பாலும் போலும் தனித்தமிழ் நடையில் நூல்கள் இயற்றியவரும் ஆகிய அடிகளார் மெய்ம்மை சான்ற பாராட்டுதல் வாய்த்தது மேலும் மேலும் தாம் மேற்கொண்ட ஆய்வுப்புலத்திலேயே ஆழப் பதிந்து அருமணிக் குவைகளை வைப்பகப் பொருளாய் வைத்துச் செல்ல உதவியதாம்.

1. செந்தமிழ்ச் செல்வி 44 ; 172-174.

## 7. சொல்லாய்வு - பொது.

### வடமொழிக்குச் செல்வாக்கு :

1. வடமொழி 'தெய்வமொழி' என்றும்; அதற்கு உரியவர் 'நிலத்தேவர்' (பூசுரர்) என்றும் வடமொழியாளர் பரப்பினர். அக்கருத்தைத் தமிழரும் ஏற்றுக் கொண்டு, வரைகடந்த உரிமை வழங்கினர். அதனால் வடமொழிச் செல்வாக்கு தமிழ் மண்ணில் பெருகியது: வேந்தர்கள் வடமொழியை வளர்த்தற்குப் பல்லாற்றானும் உதவினர்; இப்புது வெள்ளத்தில் தமிழ் முற்றிலும் அடித்துச் செல்லாவண்ணம் காப்பதற்கு அவ்வக்கால அறிஞர்கள் முயன்றனர்.

### தொல்காப்பிய வரம்பு :

2. ஆசிரியர் தொல்காப்பியனார் வடமொழிச் சொல் தமிழில் புகுவதாயின் வடமொழி எழுத்தை விடுத்துத் தமிழ் மரபுக்கு ஏற்ற அமைதியில் புகவேண்டும் என ஓர் வரம்பு அமைத்தார்.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே."

என்பது அவர் வகுத்துத் தந்த நெறி [1]

வடமொழி தெய்வமொழி என்னும் மயக்கு நாட்டில் இருந்தமையால் தமிழுக்கும் அப்பெருமையைத் தரவேண்டி இறைவன் அருளியதாக 'இறையனார் களவியல் வரலாறு' பின்னிவிடப் பட்டது! 'இறைவன்' என்னும் சொல்லுக்கும் 'இறையன்' என்னும் சொல்லுக்கும் உள்ள வேறுபாடு கூட ஆர்வத்தில் புலப் படாமல் அறையப் பட்ட பறையாய்ப் பெருவழக்காக முழங்கியது.[2] இறையனார் பாடிய குறுந்தொகைக் 'கொங்கு தேர் வாழ்க்கைப்' பாட்டொடும் படுமுடிப்புப் போட்டது.

### தெய்வத் தமிழ்க் கொள்கை:

3. தென்மொழியாம் தமிழ் மொழிக்கும் தெய்வத் தன்மை ஏற்ற வேண்டி, இருமொழிப் புலமையும் சான்ற[3] சிவஞான முனிவர் காஞ்சிப் புராணத்தில் ஒரு கருத்தை வைத்தார்.

---

1. தொல். 884.
2. சிறுவனுக்கும் சிறியனுக்கும் உள்ளவேறுபாடு காண்க.
3. "இருமொழிக் கடலும் நிலை கண்டுணர்ந்தவர் சிவஞான முனிவர்" என்பர்.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியைஉலக மெலாம் தொழுதேத்தும்
குட முனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பில் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்"

"இரு மொழிக்கும் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீஇயினார் என்றாலிவ்
விருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ?"

-என்பவை இருமொழியும்நிகரென்பதற்கு அவர்பாடும் பாடல்கள்.[1]

3·1· இக்கருத்து வடமொழியாளர், தமிழர் என்பவர்க்கு மட்டும் ஏற்பட்டது அன்று. தம் மொழியே தெய்வ மொழி என்றும், தம் மொழியிலேயே தெய்வம் உரையாடியது என்றும் பல்பல மொழியினர் உரைத்தும் நம்பியும் வந்தனர். ஆனால் ஒருமொழியின் உண்மைத் தோற்றம் என்ன? தெய்வம் படைத்ததா? மாந்தருள்ளும் எவரோ ஒருவர் ஒருநாளில் ஓரிடத்தில் இருந்து படைத்து விட்டாரா? மொழியியல் ஆய்வாளர் தெய்வமொழிக் கொள்கையை ஏற்பது இல்லை![2]. ஏற்காது மறுப்பது மட்டுமின்றி, மொழி தோன்றிய வகையையும் விளக்குகின்றனர்.

**மொழியின் இயற்கை :**

4. "மொழி எளிய நிலையில் தோன்றிப் படிப்படியாக வளர்ந்த மாந்தன் அமைப்பே யன்றி, இறைவனாற் படைக்கப்பெற்று இயற்கையாக அறியப்பட்டதன்று" என்பார் பாவாணர். மேலும் அவர்,

4.1. "மொழி இயற்கையான தாயின் எல்லா மக்களும் கல்லாமலே ஒரேமொழி பேசுதல் வேண்டும். அங்ஙனமில்லை. மக்கட் கூட்டங்களின் நாகரிக நிலைக்குத் தக்கவாறு மொழிகள்

---

1. தழுவக்குழைந்த படலம். 248-9.

2. "மொழிகள் கடவுளாலும் முனிவர்களாலும் படைக்கப்பட்டன என்று கருதுதல் நமது தெய்வ பக்தியைக் காட்டுமே தவிர, உண்மையை உணர்த்துவ தாகாது. 'இரு மொழிக்கும் கண்ணுதலார் முதற்குரவர்' எனவும், 'அகத்தியன் பயந்த செஞ்சொல் ஆரணங்கு' எனவும் தமிழ்மொழியின் தோற்றத்தைப் பற்றி வருவன உபசார வாசகம் என்றே கொள்ளத் தக்கன. இவை போன்ற கூற்றுக்களாலும் கொள்கைகளாலும் விளைந் துள்ள தீமைகள் மிகப் பல. ஹீப்ரு மொழியைத்தான் கடவுள்

வெவ்வேறு வகைப்பட்டும் நிலைப்பட்டும் அமைப்புக் கொண்டும் உள்ளன. சில அநாகரிக மாந்தர் மொழிகள் பறவை விலங்கொலிகளினும் சற்றே உயர்ந்தவையாகும். எத்துணை உயர் தனிச் செம்மொழியாயினும் தலை சிறந்த அறிவியல் வளர்ச்சி பெற்ற மக்களாயினும் ஒவ்வொரு சொல்லாய் மெல்ல மெல்லக் கற்றாலன்றி ஒருவரும் தம் தாய் மொழியைப் பேச இயலாது''[1] என மொழி தோற்றமுள்ள வகையை விளக்குவார்.

**மொழியின்றியும் கருத்து நிகழல் :**

5. 'மொழியின்றிக் கருத்து நிகழாது' என்னும் கருத்தைப் பாவாணர் மறுப்பார் :

''மொழித் துணையின்றியும் மாந்தர்க்குக் கருத்து நிகழும். ஊமையர் நிலை இதற்குத் தலை சிறந்த எடுத்துக் காட்டாம். அஃறிணையுயிரிகளின் வாழ்க்கையும் இதற்கு ஒருவகைச் சான்றாம். உணர்ச்சி, வேட்கை, நினைப்பு, சூழ்வு, தீர்மானம், இன்பம் (உவகை) துன்பம் (அழுகை) முதலிய எண் அல்லது தொண் (ஒன்பான்) சுவைநிலை, ஐயம் (சந்தேகம்) தெளிவு ஆகியவையே மனத் தொழில்கள். இவற்றிற்கு மொழித் துணை தேவையில்லை. காட்சிப் பொருள்கள் எல்லாம் மனத்திலும் தோன்றுமாதலால் நினைப்பும் சூழ்வும் உருவலிப்பாகவே (Imagination) நிகழும்.[2]

---

ஆதியில் படைத்தனர் என்று கொண்டு ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலுமுள்ள சொற்களை ஹீப்ரு மொழிச் சொற்களோடு தொடர்பு படுத்த முயன்றனர் சில மொழி ஆராய்ச்சியாளர்கள். நமது தேசத்தில் 'தேவபாஷை' என்று வழங்குகிற வடமொழிதான் ஆதியில் கடவுளால் படைக்கப்பட்டது என்று கொண்டு, உலகத்திலுள்ள அனைத்து மொழிச் சொற்களும் வடசொற்களினின்றும் பிறந்தன என்று காட்டுதற்கு முன்வந்த பேரறிஞர்களும் உளர்! டச்சு மொழியாளர் ஒருவர் ஆதாமும் ஏவாளும் பேசுவதற்குக் கடவுள் தந்த மொழி டச்சு மொழிதான் என்று நிரூபித்தனர்! டச்சு மொழி அன்று என்பதை ஸர். வால்டர்ராலே தமது 'உலக சரித்திரம்' என்னும் நூலில் நூற்றுக் கணக்கான பக்கங்களில் கண்டனவுரையால் துணிந்தனர்! இவைகளெல்லாம் மொழியாராய்ச்சிக்குப் பெருந்தடைகளாய் அமைந்து விட்டன.''

சொற்கலை விருந்து பக். 16

1. தமிழ் வரலாறு பக். 59.

2. தமிழ் வரலாறு பக். 59-60.

**மொழியின் வளர்ச்சிப் படிகள் :**

6. மொழி வரலாற்றில் சைகைக்காலம், குறிப்பொலிக்காலம், சுட்டொலிக்காலம் என்னும் முதன்மையான முக்கால நிலைகளைக் குறிப்பார் பாவாணர்.

6. 1. விலங்கும் பறவையும் போல உணர்வொலிகளை மட்டும் கொண்டு அவற்றால் உணர்த்த முடியாத பிற கருத்துகளை எல்லாம், சைகைகளைக் கொண்டே உணர்த்திய காலம் சைகைக் காலம். இச்சைகை முறை சைகை மொழியாம் (Gesture-Language).

6. 2. சிறுபான்மை சைகைகளைத் துணைக் கொண்டு உணர்வொலி முதலிய ஐவகைக் குறிப்பொலிகளையும்[1] கையாண்ட காலம் குறிப்பொலிக் காலம். இக்குறிப்பொலி மொழி, இயற்கை மொழியாம் (Natural Language).

6. 3. குறிப்பொலிகளுடன் சுட்டொலிகளையும் கையாண்டு அவற்றினின்று பல்லாயிரக் கணக்கான சொற்களைத் திரித்துக் கொண்ட காலம் சுட்டொலிக் காலம். சுட்டொலிகள் தோன்றிய பின்னரே மொழி வளர்ச்சியடையத் தொடங்கிற்று.

6. 4. இக்கருத்துகளைச் சுட்டும் பாவாணர், இவற்றை விளக்கும் முகத்தான் முதல் தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம் என்னும் நூல்யாத்தார். மூவகைச் சுட்டொலிகளினின்று சொற்கள் தோன்றியதே தமிழ்த் தோற்றம் எனினும், அவற்றுள் ஊகாரச் சுட்டின் பங்கே பெரிது என்பது அதன் விரிவால்[2] அறியலாம்.

---

1. உணர்வொலி : மகிழ்ச்சி - ஆ, ஊ, ஏ, ஐ, ஆய், ஓ.
நோவு - ஆ, ஈ, ஊ.
ஒப்பொலி : சப் (பு) - சப்பு-சப்பிடு-சாப்பிடு-(சாப்பீடு)
ஏவ் - ஏப்பம்
குறட்டு - குறட்டை
குர் - குரங்கு
குறியொலி : 'ச்சு' - உச்சுக் கொட்டல்
ஊம் - உம்மெனல், ஊங்கொட்டல்
வாய்ச் செய்கை ஒலி : வாய்திறத்தல் அ, ஆ - அங்கா
வாய்திறத்தல் ஆ - ஆவி (கொட்டாவி)
வாய்பற்றுதல் அவ் - அவ்வு-வவ்வு-கவ்வு
குழவிவளர்ப்பொலி : இங்கா : பால் (உள்ளாவொலி)
மிய்யா : பூனை (உள்ளிவொலி)
- முதல் தாய்மொழி பக். 1-16.

2. ஊகாரச் சுட்டுப் படலம் மட்டும் பக்கம் 31 முதல் 323 வரை. ஏனைய ஈகார ஆகாரச் சுட்டுப் படலங்கள் 323 முதல் 331 முடிய எட்டுப் பக்கங்கள் மட்டுமே.

**சொல்லுறுப்புகள் தோன்றியவகை :**

7. ''மொழி வளர்ச்சியடைந்த நிலையிலும் கூட, சொற்றொடரி லுள்ள எல்லா இலக்கணக் கூறுகட்கும் ஒத்த பகுதிகள் உள்ளக் கருத்தில் இல்லை'' என்று கூறும் பாவாணர், அதனை விளக்கு முகத்தான் : ''பாற்குடம் என்பதைப் பாலையுடைய குடம் என விரிப்பர் இலக்கணியர். அவ்விரிப்பிலுள்ள ஐகார வேற்றுமை உருபும் உடையவென்னும் குறிப்புப் பெயரெச்சமும் உள்ளக் கருத்தில் இல்லை, அதிலுள்ளவை யெல்லாம் பாலும் அதைக் கொண்ட குடமுமே''[1] என்பார்.

7. 1. சொல்லுறுப்புகள் தோன்றிய வகையை, ''வினை முற்றி லுள்ள அறுவகையுறுப்புகளுள் முதனிலை யிடைநிலை இறுதி நிலைக் குரிய கருத்துக்களே உள்ளத்திலுண்டு. அவையும் மொழியில் ஒருங்கே தோன்றவில்லை. முதலில் முதனிலையே இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்குரிய எல்லா வினை வடிவிற்கும் பொதுவாயிருந்தது; பின்பு பாலீறும் கால இடைநிலையும் எச்ச முற்று வேறுபாடும் முறையே தோன்றின. இவ்வுண்மை யெல்லாம் தமிழ் போன்ற இயன்மொழி வாயிலாகவே அறிய முடியும். சமற்கிருதம் போன்ற திரிமொழியையும் செயற்கை மொழியையும் அடிப்படையாய் வைத்தா ராயின் ஐரோப்பியராயினும், அமெரிக்கராயினும் காரிருளிற் காட்டு வழிச் செல்வார் போல் ஒன்றுங் கண்டறியார்''[2] என்று விளக்கினார்.

**சொல்லுஞ் சொற்றொடர் நிலையும் :**

8. சொல்லே சொற்றொடர்க்குரிய பல கருத்தைத் தெரிவிக்கு மாற்றை எடுத்துக் காட்டால் விளக்கினார் பாவாணர் :

---

1. தமிழ் வரலாறு பக்கம் 60.
2. ஷை பக்கம் 60.

''பர். பரோவும் பர். எமனேவும் மொழிநூல் வல்லாரும் தென் மொழி யாராய்ச்சித் திறவோருமேனும் தமிழ்ப் பற்றற்ற பிராமணத் தமிழ்ப் பண்டிதர் தொகுத்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலியையும் பர். சுப்பிரமணிய சாத்திரியாரின் தொல்காப்பியக் குறிப்புக்களையும் அடிப்படையாகக் கொண்டமையால் அன்றோ, அவர் தம் திரவிட ஒப்பியல் அகர முதலியில் மோள் (சிறு நீர் விடு) என்னும் தமிழ்ச் சொல்லை குறியாது விட்டதும், தகப்பன் (தம்+அப்பன்=தமப்பன்-தகப்பன்) என்னும் சொல்லைத் தகு+அப்பன் என்று தவறாகப் பிரித்ததும் ஆயிரம் என்னும் தூய தென் சொல்லை ஸகஸ்ர என்னும் வடசொல்லினின்று திரித்ததும் ?'' என்பது ஒப்பு நோக்கத் தக்கது. - வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக்கம் 105.

ஒரு குழந்தை அல்லது நோயாளி 'தண்ணீர்' என்றால் அது,

1) எனக்குத் தண்ணீர் வேண்டும்; 2) அதோ பார்! தண்ணீர்; 3) வெள்ளம் வீட்டிற்குள் வந்து விட்டது; 4) தண்ணீர் கொண்டு வா; 5) இந்தப் பால் தண்ணீர் கலந்தது; 6) இச் சொல் 'தண்ணீர்'; 7) இதன் பொருள் தண்ணீர்; 8) இவ் விடுகதை விடை தண்ணீர்; 9) இப்படத்திலுள்ளது தண்ணீர் 10) (Cold) water என்னும் ஆங்கிலச் சொற்கு நேர் தென் சொல் தண்ணீர்;[1]

என்று பலகருத்தைத் தெரிவிப்பதுடன், ''நீ குடிப்பதென்ன''? என்பது போன்ற வினாவிற்கு விடையாகவும் இருத்தலைத் தெளிவிப்பார். இவ் வெடுத்துக் காட்டைக் கொண்டு, ''நன்றாய்ப் பேசத் தெரியாத குழந்தையும், பேச்சு வலிமையற்ற நோயாளியும், தாய்மொழி யொன்றே தெரிந்த அயல் நாட்டானும் பெரும்பாலும் தனிச் சொற் களாலேயே தம் கருத்தைத் தெரிவித்தலைக் கூறி இந் நிலையிலேயே மொழி வளர்ச்சியுறாத முந்தியல் மாந்தனும் இருந்தான்[2] என்பதை நிலைப்படுத்துவார்.

### இயல்பு வெளிப்பாடு இயலே:

9. ''முந்தியல் மாந்தர் மொழி இசைப்பாட்டே'' என்பது அறி ஞர் எசுப்பெர்சன் கருத்து. அக்கருத்துத் தவறு என்பது பாவாணர் கருத்து.

''உணர்ச்சி விஞ்சிய காதல், இன்பம், வெற்றி, மகிழ்ச்சி, துன்பம் முதலிய மன நிலைகளிலேயே முந்தியல் மாந்தர்—அவருள் ளும் இசையுணர்ச்சியும் மொழியாற்றலும் மிக்கவரே — இசைமொழி வாயிலாய்த் தம் கருத்தை வெளியிட்டனர். இக்காலத்தும் இன்ப துன்ப வுணர்ச்சி விஞ்சிய போது தத்தம் அறிவு நிலைக்கேற்ப இசைப் பாட்டாகவும் செய்யுளாகவும் தம் கருத்தைச் சிலர் வெளியிடுதல் காண்க'' எனக் காட்டும் பாவாணர், ''பொருளும் ஒழுங்குமற்ற ஒரு சில இசையொலித் தொகுதிகளினின்று வெவ்வேறு பொருளும் இலக்கணவொழுங்குமுள்ள பெயர் வினை இடைச் சொற்களும் மூவிடப் பெயர்களும் அவற்றின் திரிபான இருதிணை ஐம்பால் மூவிட ஈறு களும் வேற்றுமை உருபுகளும் கால இடை நிலைகளும் பிறவும் அமைந்தன என்றல் உத்திக்குப் பொருந்தாத கூற்று''[3] என்று மறுத்துரைப்பார்.

---

1,2 : தமிழ் வரலாறு பக்கம் 59.

3. ஷ பக்கம் 58

**உரை நடையின் தோற்றம்:**

10. உரை, செய்யுள் (அல்லது பாட்டு) என்னும் இருவகை மொழி நடையுள் முதலில் தோன்றியது முன்னதே என்னும் பாவாணர் உரையும் தனித்தனிச் சொல்லாகவே தோன்றியது என்றும், மொழியின் அலகு (Unit of Speach) சொல்லேயாம்[1] என்றும் வலியுறுப் பார். ஏனெனின், சொற்றொடராகவே முதற்கண் தோன்றி அதன் பின் சொல்லும், அதில் இருந்து எழுத்தும் தோன்றியது என்னும் கருத்துடையவர்கள் உண்மையால் 'சொல்லே மொழி அலகு' என் பதை நிலை நாட்டினர்.

**அறிவால் காணும் காட்சி:**

11. மேனாட்டறிஞர்கள் சிறந்த அறிவியல் கருவி கொண்டு மொழிநூல் ஆராய்ச்சி செய்வதால், அவர் கண்டறிந்தவுண்மைகள் எல்லாம் அறிவியன் முற்பட்டவை எனறும், அவ்வாறு கருவி கொண்டு ஆராயாமை அறிவியற்பாற்படாது என்றும் கருதுவார் உண்மையைப் பாவாணர் அறிவார். அதனால், ''வயிரக் கற்களின் உயர்வு தாழ்வை மணிநோட்டகன் கண்ணே காண்பதுபோல், சொற்களின் வேரை யும் பொருட்கரணியத்தையும் மொழிநூல் வல்லான் அகக்கண்ணே காணும் என்றும், அறிவொடு உயிரும் அற்ற அஃறிணைக் கருவி கள் காணாவென்றும்''[2] அறிவுறுத்தினார்.

11.1. ''தோகை என்னும் சொற்குத்தொகு (தொங்கு) என்ப தும் விரல் என்னும் சொற்கு விரி என்பதும் வேரென்று கால்டு வெலார் கண்டுபிடித்ததும், borough என்னும் சொற்கு bergan (to protect) என்பதும், Snake என்னுஞ் சொற்கு Snican (to creep) என்பதும் மூலமென்று ஆங்கில அறிஞர் கண்டறிந்ததும் உயர் திணை மதியினாலா, அஃறிணைக் கருவியினாலா?''[3] என வின வினார். ''புல்-புள்-புழு-புழல்-புடல்-புடலை; மே-மேய்-வேய்-வேய்ந் தன்-வேந்தன்-வேந்து; என்னும் சொல் வரலாறுகளை எவர் மறுக்க வியலும்? இவை உண்மை நவிற்சியா, உன்னிப்பு நவிற்சியா?''[4] என்று வினாமேல் வினாத் தொடுத்தார்.

11.2. தொல்பொருள் ஆய்வாளன் ஒருவன் ஒருகல்லின் காலம் இன்னதெனக் கூறின் அப்படியே ஏற்றுக் கொள்ளும் உலகம், ஒரு முழுத்த சொல்லாய்வாளன் அதன் மூலவேரும் பொருளும் இன்ன

1. தமிழ் வரலாறு பக். 58.

2-4. வண்ணனை மொழிநூலின் வழுவியல் பக். 105.

தெனக் கூறின் ஏற்காமல் உன்னிப்பு என்று சொல்லுதல் உண்டாக்கிய வெதுப்பம் ''இவை உண்மைநவிற்சியா, உன்னிப்பு நவிற்சியா?'' என்னும் வினாவில் தொக்கிக் கிடக்கின்றதாம்.

**இடுகுறிச் சொல் தமிழில் இல்லை:**

12. தமிழ் இயன்மொழி ஆதலாலும் பொதுமக்கள் அமைத்த வழக்கு மொழியாதலாலும் அதன் எல்லா சொற்களும் கரணியக் குறிகளாகவே அமைந்துள்ளன. இடுகுறிப் பெயர் என்பதே தமிழில் இல்லை. எல்லாப் பெயரும் கரணியப் பெயரே[1] என்பது பாவாணர் கண்ட முடிவு. 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்னும் தொல்காப்பிய முடிவு முற்றும் சரியான முடிவே என்பதும் பாவாணர் கருத்து. இதனை நிலைநாட்டுதலே அவர் பணிவிளக்கம் எனின் தகும்.

**தமிழியல்பு போற்றல்:**

13. ''தமிழில் எச்சொல்லிலும் எவ்விடத்திலும் பிறமொழியெழுத்தும் எழுத்துமுறையும் வருதல் கூடாது''[2] என்பது பாவாணரின் திட்டவட்டமான முடிவாகும்.

13.1. ''பிறமொழிச் சொல் இன்றியமையாததும் மொழிபெயர்க்க முடியாததுமாயின் தமிழ்முறைக்கேற்பத்திரித் தெழுதப் பெறும். இங்ஙனம் வரம்பீடு செய்யாக்கால் தமிழ் நாளடைவில் வேறு மொழியாய் மாறிவிடும். இதனாலேயே, வடசொல்லைச் செய்யுட் சொல்வகை நான்கனுள் ஒன்றாகக் குறித்த தொல்காப்பியரும் முன்னோரிட்ட வரம்பை மீறாது,

''வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''

என நெறிவகுத்தார்''[3] என்று வற்புறுத்துகிறார்.

**13.2.** தமிழ் முறைக்கேற்பப் பிறமொழிச் சொற்களை எழுதுதற்குத்தக்க எடுத்துக் காட்டுகளையும் சுட்டினார் பாவாணர்.

**13.3.** சொன்முதல் வராவெழுத்தை முதலிற் கொண்ட பிறமொழிச் சொற்கள் தமிழில் எழுதப் பெறின், அவற்றின் முதலெழுத்து நீக்கப் பெறும்; அல்லது மாற்றப் பெறும், அல்லது (அதைமாற்றியோ மாற்றாதோ) அதன் முன் சேர் உயிர்க்குறில் சேர்க்கப் பெறும்.

| எ-டு. | **பிறமொழிச்சொல்** | **தமிழ்ச்சொல்** |
| --- | --- | --- |
| | ஸ்காட்லாந்த் | காட்டிலாந்து, காத்திலாந் |
| | யூரேப்பியன் | ஐரோப்பியன் |

1-3. தமிழ்வரலாறு பக். 128.

| | |
|---|---|
| ஸ்பெயின் | இசுப்பெயின் |
| ரஷியா | இரசியா |

13.4. தமிழுக் கொவ்வாத மெய்ம் மயக்கத்தை இடையிற் கொண்ட சொல்லாயின், அது தமிழுக் கேற்றவாறு மாற்றப்பெறும்.

எ-டு : ஷேக்ஸ்பியர் - சேக்கசுப்பியர்

13.5. வல்லின மெய்யும் அயலெழுத்தும் இறுதியிற் கொண்ட சொல்லாயின் அதன்பின் ஓர் உயிர் அல்லது உயிர்மெய் சேர்க்கப் பெறும்; அல்லது அதன் இறுதி மாற்றப் பெறும்.

| | | |
|---|---|---|
| எ-டு.: | நியூயார்க் | நியூயார்க்கு |
| | யூரோப் | ஐரோப்பா |
| | டேனிஷ் | தேனியம் |

13.6. அறிவியல் வழிப்பட்ட இச் சொல்லியன் அமைதியை நினைந்து முந்தையோர் திறத்தைப் பாராட்டுவார் பாவாணர் :[1]

''தனிச் சொல்லின் முதலில் மெய்யும், இடையிற் சில மெய்ம் மயக்கமும், இறுதியில் வல்லின மெய்யும் வரக் கூடாதென்று விலக்கியது, பண்டைத் தமிழரின் மெல்லொலி வாயியல்பு பற்றியது மட்டுமன்று; எதிர்காலத் தமிழரின் வாழ்நாள் நீடிக்குமாறு இயன்றவரை மொழியொலிப்பு முயற்சியைக் குறைக்க வேண்டுமென்னுங் குறிக்கோளும் கொண்டதாகும்.''

## ஆய்வாளர் திறம்

14. ஆய்விலேயே அழுந்த ஊன்றிய பாவாணர், ஆய்வாளர்க்கு வேண்டும் திறங்கள் இவை யெனப்பொது வகையிலும், சொல்லாய்வார்க்கு வேண்டும் தகவு இவையெனச் சிறப்பு வகையிலும் சுட்டியுள்ளவை அவர்தம் பட்டறிவின் முதிர்ச்சியை விளக்குவனவாம் :

14.1. ''உண்மையான ஆராய்ச்சிக்கு மதிக்கூர்மை, பரந்த கல்வி, நடுநிலைமை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறியவா என்னும் ஆறும் இன்றியமையாத திறங்கள்''[2]

14.2. சொல்லாய்வார்க்கு 1) இலக்கண அறிவுடைமை 2) மொழி நூலறிவும், மொழியாராய்ச்சியும், 3) சொல்லியல் அறிவுப் பேறு, 4) அயன்மொழி அறிவு 5) பெரும்பால் தமிழ்ச் சொற்பொருள்

1. தமிழ் வரலாறு பக். 128.
2. வண்ணனை மொழிநூலின் வழுவியல் பக். 119.

அறிவு, 6) தமிழ் ஒலியியல் பறிதல் 7) எழுத்துகளின் திரிபுகளை அறிதல் 8) சொற்றிரிபறிதல் 9) சொற்களின் திருந்திய வடிவறிதல் 10) பலபொருள் ஒருவடிவுச் சொற்களைப் பகுத்தறிதல் 11) சொற்களைச் செவ்வையாய்ப் பிரித்தல், 12) பொருள்களின் சிறப்பியல் பறிதல், 13) பொருள் வரிசையறிதல், 14) ஒப்புமை யமைப்பு (Anology) அறிதல், 15) வரலாற்றறிவையும் ஞாலநூல் அறிவையும் துணைக் கோடல், 16) இடுகுறிதமிழில் இல்லையென் றுணர்தல், 17) பகுத்தறிவைப் பயன் படுத்துதல், 18) அஞ்சாமை 19) நடுநிலை, 20) பொறுமை என்னும் இருபது தகுதிகளும் வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.[1]

**பன்மொழிகளில் சொல்லும் பொருளும் ஒத்திருத்தல் :**

15. பல்வேறு மொழிகளில் காணப்படும் சொன் மூலங்களும் பொருள் அமைதிகளும் ஒத்திருக்கக் கரணியம் என்ன என்பதை நன் கனம் விளக்குகின்றார் பாவாணர். அத் தெளிவு மொழியாய்வுக்கு இன்றியமையாக் கூறாகும் :

15.1. ''உலகிலுள்ள மக்களெல்லாம் ஓரிடத்தினின்றே பரவிப் போயினர் என்பதும், ஒரு தாய் வயிற்றினரே என்பதும் ஆராய்ச்சியாற் கண்ட முடிபுகளாம். மாந்தன் முதலாவது தோன்றிய இடத்தில் மக்கள் மொழியில்லாமலே சிலகாலம் வாழ்ந்து வந்தனர். மொழியில்லாத நிலையில் சில முறையும் மொழி தோன்றியபின் சில முறையுமாக மக்கள் பலதிசைக்கும் பலமுறை பரவிப் போயிருக் கின்றனர். மொழியில்லாது பிரிந்து போனவர் தாம்போன இடங்களில் புதிதாய்த் தத்தமக்கு ஏற்றவாறும் இயன்றவாறும் இயன்மொழிகளை ஆக்கிக் கொண்டனர். மொழி தோன்றியபின் பிரிந்து போனவர் தத்தம் சுற்றுச் சார்பிற்கேற்பப் புதுச் சொற்களை அமைத்தும் தட்ப வெப்ப நிலைக்கேற்பப் பழஞ்சொற்களைத் திரித்துங் கொண்டனர். ஆயினும் தொடர்புடைய மக்களெல்லாம் தொடர்புடைய மொழிகளைப் பேசிவருவதும் மக்கள் தொடர்பின் பெருமை சிறுமைக் கேற்ப அவர்கள் மொழிகளின் தொடர்பும் மிக்கும் குறைந்தும் இருப்பதும் இயல்பே''[2]

''தவறான அடிப்படையில் ஆய்ந்தால் தவறான முடிபிற்கே வரநேரும்''[3] என்பது தெளிந்த செய்தி ஆகலின் இவ்வடிப்படை சுட்டத் தக்கதாம்.

1. செந்தமிழ்ச் செல்வி 55: 384-5.
2. திரவிடத்தாய்-முன்னுரை. பக். 3.
3. வண்ணனைநூலின் வழுவியல் பக். 104.

## 8. சொல்லாய்வு - சிறப்பு.

**மக்களும் சொற்களும் :**

1. பல தலைமுறையாகத் தொடர்ந்து வரும் குலத் தொடர்ச்சி கொடியும் மரமும் போல நீண்டும் தொடர்ந்தும் இருத்தலின், அதனைக் கொடி என்றும் கொடிவழி என்றும் மரபு என்றும் கூறுவது வழக்கம்.[1]

1. 1 வித்தும் வேரும் அடியும் கிளையும் குச்சும் கொழுந்துமாகத் தொடர்ந்தோங்கும் மரம் போல மேன்மேல் தொடர்ந்துசெல்லும் குலத் தொடர்ச்சியே மரபாகும்.[2]

1. 2 "மக்களைப் போன்றே சொற்களும் குடும்பம் குடும்ப மாகவும் குலம் குலமாகவும் இனம் இனமாகவும் கொடிவழி முறையில் இயங்குகின்றன"[3] என்பார் பாவாணர்.

**குடியேற்றப் பாதுகாப்பு :**

2. வடநாட்டிலே வாழும் மலைவாழ் மக்கள் இனங்களுள் சில திரவிட இனஞ்சார்ந்தவை என்பர்; கடற்றீவங்கள் பலவற்றுள் வாழும் மக்கள் இன்ன இன்ன இனம் சார்ந்தவர் எனக் கணிக் கின்றனர். ஆயிரக் கணக்கான ஆண்டுகளின் முன்னே மாண்டுபோய மாந்தர் மண்டையோடுகளையும், தாடை எலும்புகளையும் கொண்டு இவர் இன்ன இனம் சார்ந்தவர் என மாந்தனூல் ஆய்வாளர் அறுதி கட்டி விடுகின்றனர். இவ்வாறே சொற்களும், சொல்லாய்வு அறிஞர்களால் இன்னவழிச் சொல், இன்ன வேர்ச் சொல் எனத் தீர்மானிக்கப் படுகின்றனவாம்.

2. 1 ஒருசொல், தோன்றிய இடத்தின் வழக்கில் இருந்து மறைந்துவிட்டால் கூட, அவ்விடத்தில் இருந்து வேறு இடத்துச் சென்று குடியேறிய மக்கள் வழக்கில் நிலைபெற்றிருப்பது உண்டு. இதனைக் 'குடியேற்றப் பாதுகாப்பு' என்பர்.

2. 2. குடியேற்றப் பாதுகாப்பு மொழியாய்வுக்கு மிகு பயன் செய்வதாம். "பல்லாவுள் உய்த்தாலும் வல்லதாம் குழக்கன்று தாய் நாடல்போல்" சொல்லாய்வாளர்க்குக் குடியேற்றப் பாதுகாப்புச் சொற்கள் இனங்காட்டி ஒளி செய்து விடுகின்றன.

---

1, 2. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 3.

3. வேர்ச் சொற்கட்டுரைகள் முகவுரை. பக். 10

2. 3. உகரச் சுட்டு தமிழ்நாட்டில் வழக்கற்றது. ஆயினும் யாழ்ப்பாணத்தில் வழங்குவதாகத் தெரிகின்றது. இது குடியேற்றப் பாதுகாப்பு என்னும் நெறிமுறைப்பட்டது[1] என்று சுட்டுகிறார் பாவாணர்.

2. 4. யாம் — நாம் — நம் என்பது போல,

யான் — நான் — நன் என்னும் வேற்றுமையடி இருந்ததைச் சுட்டும் பாவாணர், "இவற்றுள், நன் என்னும் வேற்றுமையடி இற்றைத் தமிழில் வழக்கிறந்தது. அது, தெலுங்கு கன்னடம் முதலிய திரவிட மொழிகளில் இன்றும் வழங்குகின்றது. அது குடியேற்றப் போற்றிக் காப்பின் (Colonial Preservation) பாற்படும்"[2] என்கிறார். திசை மொழிகளில் வழங்கும் மூலச் சொற்கள் திசைமொழித் தெரிப்பு என்பதன் பாற்படும்[3] என்கிறார்.

**வேர்ச் சொல் கொடிவழி :**

3. மலையா, சிங்கபுரம், தென்னாப்பிரிக்கா முதலிய வெளிநாடு கட்குத் தனித் தனியாகவும் குடும்பம் குடும்பமாகவும் தமிழர் சென்று அங்கு நிலையாக வாழினும், அவர்களின் முன்னோராலும், தமிழ் நாட்டு உறவினராலும் அவர்கள் தமிழர் என்றே அறியப்படுதல் போல், தமிழ்ச் சொற்களும் அண்மையிலும் சேய்மையிலும் உள்ள அயன் மொழிகளிற் சென்று வழங்கினும் அவற்றின் மூலத்தினாலும் தொடர்புடைய தமிழ்ச் சொற்களாலும் அவை தமிழ் என்றே அறியப்படும்"[4] என்னும் பாவாணர் எடுத்துக் காட்டுடன் விளக்குவார்.

| எ — டு : | **தமிழ்** | **சமற்கிருதம்** |
|---|---|---|
| | குலம் | குல |
| | கதம்பம் | கதம்ப |
| | கலகம் | கலஹ |

1. வேர்ச் சொற். பக். 29.
2. வேர்ச் சொற். பக். 101.
3. தமிழ் வரலாறு பக். 256. ஒரு செல்வத்தாய் வீட்டினின்று, ஒரு வகைப்பட்ட பல பொருள்களுள் ஒவ்வொன்றை ஒவ்வொரு புதல்வியும் எடுத்துச் செல்வதுபோல், தமிழிலுள்ள ஒருபொருட் பல சொற்களுள் ஒவ்வொன்றை ஒவ்வொரு திசைமொழியும் கையாண்டுள்ளது. எ—டு : இல் (தெ), மனை (க), வீடு (ம).
4. வேர்ச் சொற். முகவுரை பக். 10.

கலுடம் கலுஷ = கலங்கல்
கலுழன் கருட (garuda)

இச் சொற்கள் எல்லாம் தமிழே என்பதைக் 'குல்' என்னும் வேர்ச் சொல் கொடி வழியே நிலைபெறுத்துவார்.

**மொழியறிஞனும் பொறியறிஞனும் :**

4. தோன்றும் புகையைக் கொண்டு தோன்றாத தீயுண்மை அறிவது போல, இருக்கும் சொற்களைக் கொண்டு இறந்து பட்ட சொற்கள் இவையெனத் தேர்ந்த மொழிநூல் அறிஞன் தீர்மானிக்க முடியும் என்பதை உவமைவழியால் எடுத்துக் காட்டித் தெளிவிப்பார் பாவாணர்.

4, 1 ''ஒரு பொறியறிஞன் ஒரு பொறியில் இல்லாத உறுப்பைக் கண்டு கொள்வது போன்றே ஒரு மொழியறிஞனும் அம் மொழியில் இறந்து பட்ட சொற்களிற் சிலவற்றை அவற்றொடு தொடர்புள்ள பிற சொற்களின் துணை கொண்டு அறிய வியலும்''[1] என்பது அவர் தரும் உவமைச் செய்தி.

உரு : உருத்தல் = தோன்றுதல், உரு - (அரு) - அரும்பு.

புரு : புரு = குழந்தை, புரு - (பிரு) - பிருகு = முற்றாப் பனங்கிழங்கு, பிருகு = பிருக்கு
• சிறு பிஞ்சுகளைப் பிஞ்சும் பிருக்கும் என்பது உலக வழக்கு,

நுல் : (நுன்) : நுழு - நுழுவல் = இளம்பாக்கு.
நுழு - நுழாய் = இளம்பாக்கு

நுல் : (நுன்) - நுனை - நனை = அரும்பு
நனைதல் = அரும்புதல், தோன்றுதல்.

புல் : (பல்) பல்லவம் (வ) = தளிர், புல்-(புள்)-பிள்-பிள்ளை
பிள் = பிள்ளைமையழகு, பிள்-பீள் = இளங்கதிர், இளமை, கரு.

புள்-பூள்-பூட்டை = இளங்கதிர்: பூட்டை-பீட்டை.

—இவை எடுத்துக் காட்டுச் செய்திகளுள் சில[2].

—''இறந்துபட்ட சொற்களெல்லாம் பிறைக் கோட்டில் இடம் பெற்றுள''[3] என்பது குறிப்பு.

---

1. தமிழ் வரலாறு பக்கம் 64-65.
2. ஷை 62-63.
3, ஷை 64.

**சொல்லாக்க நெறிமுறை :**

5. சொல்லாக்க அடிப்படை நெறிமுறை ஈதெனச் சுட்டுகின்றார் பாவாணர் :

" ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்துத் தோன்றும் போது, ஒரு சொல்லினின்று மற்றொருசொல் பிறக்க இடமுண்டாகின்றது. கருத்து வேறுபடும் போது சொல்லும் வேறுபடல் வேண்டும். அன்றேல் பொருண் மயக்கம் உண்டாவதோடு மொழியும் வளர்ச்சி யுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை."[1]

5. 1 குல் என்பது ஆணிவேர். அதினின்று குலம், குலவு - குலாவு, குலை முதலிய சொற்கள் பிறக்கும். இவை ஒருபொருட் கூட்டம் பற்றியன.

கல் என்பது குல் என்பதினின்று திரிந்த பக்கவேர்.

அதினின்று கல, கலப்பு, கலப்படம், கலவை, கலம்பு, கலம்பகம், கலம்பம், (கதம்பம்) - கலவு, கலவன், கலசு முதலிய சொற்கள் பிறக்கும். இவை பல்வகைப் பொருட் கூட்டம் பற்றியன.

கல என்னும் சொல்லினின்று புணர்ச்சியும் கலகமும் கலக்கமும் பற்றி முக்கிளைகள் பிரியும்.




---

1. வேர்ச்சொற். ஆசிரியன் முகவுரை பக். 9.

5.2 இருபாற் கலப்பே கலவி. பலர் கலந்து பொருதலே கலகம். கைகலத்தல் என்னும் வழக்கை நோக்குக. நீரும் சேறும் போல வெவ்வேறு பொருள் கலப்பது கலக்கம். இதுப் பொருட் கலக்கம். பல்வேறு கருத்துக்கள் அல்லது நினைவுகள் கலந்து மனத்தை வருத்து வது அல்லது குழப்புவது மனக் கலக்கம். இங்ஙனம் கலக்கம் இரு வகைத்து.

வெண்மையும் செம்மையும் கலந்த பறவையைக் குறிக்கும் கலுழன் என்னும் சொல், நிறக் கலப்புப் பற்றியது. கலுழ்-கலுழன். கலுழ்தல் கலத்தல் கலுழன் - வ. கருட (G).

கூடுதல் பொருந்துதல் ஒத்தல் கலத்தல் போரிடுதல் என்பன தொடர்புடைய கருத்துக்கள்.

ஒ. நோ : பொருதல் = பொருந்துதல், ஒத்தல், போர் செய்தல்.

வேறுபட்ட பல்பொருள் கலக்கும் போது கலக்கம் உண்டாவதால் கலப்புக் கருத்திற் கலக்கக் கருத்துத் தோன்றும்.

ஒ. நோ : குழம்புதல் = கலத்தல், மயக்குதல். குழப்பம் = கலக்கம், மயக்கம்.

மயங்குதல் = கலத்தல், கலங்குதல், மயக்கம் = கலப்பு, கலக்கம் உணர்விழப்பு.

ஒத்தல் என்பது இருபொருள் அல்லது பல்பொருள் இயலிலும் செயலிலும் பொருந்தி நிற்றல்.[1]

5.3 பொருள் மாறும் போது சொல்லும் மாறுதலால் உண்டாகும் தெளிவை வழக்குச் சொற்களைக் கொண்டு மேலும் வலியுறுத்துகிறார் பாவாணர்:

மண் என்னும் சொல் மணலைக் குறித்தற்கு அல்லீறு பெற்று மணல் என்றானதையும், கம்பு என்னுஞ் சொல் மரக்கோலைக் குறியாது கனிய (உலோகக்) கோலைக் குறித்தற்கு இகர வீறு பெற்றுக் கம்பியென்றானதையும், பக்கத்தையும் இடுப்பையும் குறிக்கும் மருங்கு என்னும் சொல், மருங்குல் என உல்லீறு பெற்றுத் தனிப்பட்ட இடுப்பைக் குறிப்பதையும் எடுத்துரைப்பார்.[2]

---

1. வேர்ச் சொற். ஆசிரியரின் முகவுரை, பக்கம் 8-9.
2. தமிழ் வரலாறு பக்கம் 70

**சொற்றிரிமுறை :**

6. சொற்றிரி முறையே மொழி வளர்ச்சிக்கு இடமாவது என்பதை நன்கனம் சான்றுடன் விளக்கினார் பாவாணர் :

மாந்தன் நாகரிகம் வளர வளரக் கருத்துகள் பல்குகின்றன. அடிப்படைக் கருத்துகளினின்று வேறுபட்ட கருத்துகள் கிளைக்கும் போது, முன்னவற்றைக் குறிக்கும் சொற்கள் பல்வேறு வகையில் திரிபடைகின்றன. அல்லாக்கால் பலபொருளொரு சொல்லும் (Polysemy) பலசொல்லொரு வடிவும் (Homonymy) மிக்குப் பொருள் மயக்கு ஏற்படும். அதைத் தடுக்கச் சொல் வடிவை மாற்ற வேண்டியுள்ளது.

6. 1 'சுள்' என்னும் அடி பொருந்தற் பொருளிற் 'செள்' என்று திரியாவிடின் சுடுதலையும் உறைத்தலையும் குறிக்கும் சொல்லொடு அதைமயக்க நேரும்.

'செள்' என்னும் வடிவினின்றே செண்டு, செண்டை, செடி, செண்ணு, செரு, செறு, செறி, செற்றை, செழி, சேர் முதலிய சொற்கள் பிறந்துள்ளன.

'நுள்' என்பது நெருங்கற் பொருளில் 'நள்' என்று திரியாவிடின், கிள்ளுதலைக் குறிக்கும் சொல்லொடு அதை மயக்க நேரும். மேலும் ஆயிரக்கணக்கான கருத்துக்கட்கு வெவ்வேறு சொல்லும் சொல் வடிவம் வேண்டியிருப்பதால், வேர்ச் சொல்லும் அடிச் சொல்லும் பல்வேறு திரிபு கொண்டாலொழிய மொழி வளர்ச்சிக்கு இடமில்லை[1] என்பது அது.

**சொற்றிரிதற் பயன் :**

7. எந்தவொரு திரிபும் மொழி வளர்ச்சிக்குப் பயன்படுவதாகவே இருக்கவேண்டும்; இல்லாக்கால் சிறப்புடையதன்று என்பது பாவாணர் தெரிப்பாகும்.

7. 1 பொருள் மாறாதிருக்கும் போலியால் செய்யுளில் எதுகை யமைப்பிற்கன்றி மொழி வளர்ச்சிக் கிடமில்லை. ஆயின், போலி முறையைத் தழுவிப் பொருள்வேறுபடும் சொற்கள் மொழியை மிக வளம் படுத்தும்.

எ—டு ; தருக்கு— செருக்கு, பகு — வகு, மீறு — வீறு, கதலி — கசளி, குழல் — குடல், பழம் — பயம் — பயன், வாயில் — வாசல்,

---

1. தமிழ் வரலாறு பக். 70.

மொத்தை—மொச்சை, இடம்—இடன், நாளி—நாழி—நாடி.[1]

7. 2 இச்சொற்கள் போலி முறையைத் தழுவிய சொற்கள். ஆயினும், பொருள் வேறுபட்டுப்பயன் செய்கின்றன. ஒரு சொல்லின் போலித் திரிபு ஒரு புதுச் சொற் பயனைத் தருகின்றது என்றால் அப் போலித் திரிபு ஒற்றைக்கு இரட்டை நலம் செய்வதே அல்லவோ ?

**வேர், வேர்ச்சொல், வேர்ச்சொல்லாய்வு :**

8. வேர் என்பது பற்றியும், வேர்ச் சொல் என்பது பற்றியும் வேர்ச் சொல்லாய்வு என்பது பற்றியும் பாவாணர் நுண்ணிய கருத்துகள் சிலவற்றை எழுதுகிறார்.

8. 1. வேர் என்னும் உவமையாகு பெயர் பற்றி வேர்ச் சொல்லை வேறாக முத்திறப்படுத்திக் கூறினும் மூலமும் திரிபும் என்னும் முறையில் வேர் அடி முதனிலை என்னும் வகையீடும் ஆணி வேர் பக்கவேர் கிளைவேர் என்னும் வகையீடும் ஒன்றே.

8. 2. வேர் சொற்கள் சிறு வேரும் பெருவேரும் என இரு வகைய. அவற்றுள் முன்னவை பன்னூற்றுக் கணக்கின; பின்னவை ஒரு நூற்றிற்குட்பட்டவை.

8.3. தமிழ், ஆரியச் சூழ்ச்சியினால் நெடுங்கணக்கு முதல் பொருளிலக்கணம் வரை எல்லா நிலைகளிலும் எல்லாத் துறைகளிலும் தருக்கப் பொருளாக்கப் பட்டிருப்பதால் தமிழாசிரியர் எத்துணைப் பெரும் புலவரேனும் மொழியாராய்ச்சியும் நடுநிலை அஞ்சாமை தன்னலமின்மை மொழியறிவா என்னும் நாற்பண்பும் இல்லாதவர் வேர்ச் சொற்களைத் தொகுப்பது குருடன் கண் மருத்துவமும், செவிடன் இசையாராய்ச்சியும் சாப்பாணி தாண்டவம் பயிற்றலும் செய்வதொத்ததே. கல்விவேறு; ஆராய்ச்சிவேறு.[2].

—இவை வேர், வேர்ச்சொல், வேர்ச் சொல்லாய்வு பற்றி வெளியிடும் கருத்துத் திரட்டுகளாம்.

## 9. ஆய்வின் ஊடகம்

**வள்ளுவர் ஊடகம்:**

1. வள்ளுவர் நூல் முப்பாலாக இயன்றாலும் அவற்றின் ஊடகமாக அறமே திகழ்கின்றது. அறத்தை விடுத்த பொருளையோ, இன்பத்தையோ நேரிதாக வள்ளுவர் கருதினார் அல்லர். அவ் வண்ணமே, பாவாணர் தொண்டுகள் பலதிறத்தனவாக இருப்பினும், அவற்றின் ஊடகமாக இருப்பது சொல்லாய்வேயாம்.

1. தமிழ் வரலாறு பக். 84-5.
2. வேர்ச் சொற்கட்டுரை. ஆசிரியன் முகவுரை: 10,11.

**பாவாணர் ஊடகம்:**

2. இயற்றமிழ்த் தொண்டிலேயே அழுந்திய பாவாணர், ஓரளவான் இசைத்தமிழ்த் தொண்டும் ஆற்றினார். இசைத்தமிழை முறையாகப் பயின்றதுடன், கருவியிசை இசைக்கவும் பயின்றிருந்தார். இசைத்தமிழ் தொடர்பான ஆய்வுகளும் செய்து கட்டுரையும் வரைந்தார்.[1] இசைத்தமிழ்க் கலம்பகம், இசையரங்கு இன்னிசைக் கோவை என்பவற்றை வழங்கினார். திருவள்ளுவரைக் குறித்தும், கலைச் சொல் குறித்தும் இசைப்பாடல்கள் யாத்த செய்திகளும் அறியவருகின்றன. எனினும் அவ்விசைத் தமிழிலும் சொல்லாய்வு ஊடகம் இல்லாமல் இல்லை.

எ-டு : கேள்வியைச் 'ச்ருதி' என்றும், நிலையை 'ஸ்தாய்' என்றும் மொழிபெயர்த்தனர்.

'ராகம்' என்பது அராகம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. ஒப்பு நோக்க: அரங்கன் — ரங்கன்.

சுரம் தாளம் பாணி என்பவையும் தமிழ்ச் சொற்களே.[2] இவை இசைத்தமிழ் என்னும் கட்டுரையில் இடம் பெற்றுள்ள சில சொல் லாய்வுகள்.

2.1. பாணி தாளம் என்னும் இரண்டும் பண்டை இசைத் தமிழ் நூல்களில் ஒருபொருட் சொல்லாக ஆளப்பெற்றுள. பாடுவார் கையினால் தட்டுவது பாணி என்றும், ஆடுவார் பாதத்தினால் தட்டுவது தாளம் என்றும் பெயர்பெற்றனவாகத் தெரிகின்றன. பண் — பாணி = கை, பண்ணுவது பாணி. பண்ணுதல் செய்தல். பாட்டைக் குறிக்கும் பாணி என்னும் சொல் இராகம் என்று பொருள் படும் பண் என்னும் சொல்லினின்று பிறந்ததாகும்.

இஃது இசைத்தமிழ்க் கலம்பகத்தின் தாளப் பெயர்கள் விளக்கத்தின் ஒருபகுதி.

''நோயிருக்கையில் வியாதி வந்தது
வியாதி வந்தபின் சீக்கு வந்தது

சீக்கிருக்கவே பீமார் வந்திடும்
பீமார் வந்திட ஏமாறாதீர்கள்''

---

1. குரலேசட்சம் செந். செல்; 20 : 330: குரல் சட்சமே மத்திமமன்று ஷை. 20:465.

2. இசைத்தமிழ் ஷை. 21:25-32.

என்பது அயன்மொழியால் தமிழ் கெடுதல் குறித்த ஒரு பாட்டின் பகுதி[1]

2.2. தமிழ்த் தொண்டர் படைச் செலவு பற்றிப்பாடும் இசையரங்கு இன்னிசைக்கோவை 'லெப்ட்டு ரைட்டை' மாற்றுகிறது.[2]

''பாரெலாம் ஊரெலாம்
பண்டை முத்தமிழ் பரப்புவோம்

இடம்வலம் இடம்வலம்
இடம்வலம் இடம்வலம்.''

இனிப், பாவாணரின் இயற்றமிழ்த் தொண்டு நாற்கூறுபடும், அவை, மொழிநூல் ஆய்வு, சொல்லாய்வு, வாழ்வியல் ஆய்வு, உரையும் பாட்டும் இயற்றல் என்பனவாம்.

**பாவாணர் நூல்கள்:**

3. மொழிநூல் ஆய்வு வகையில் ஒப்பியன் மொழிநூல் முதற்கண் வெளிப்பட்டது.[3] ஆனால், அதற்கு முன்னரே எழுதிமுடிக்கப் பட்டது முதற்றாய் மொழியாகும்.[4] திரவிடத்தாய், வண்ணனை மொழிநூலின் வழுவியல் சுட்டு விளக்கம் என்பனவும் மொழிநூல் ஆய்வுகளே. மொழிநூல் ஆய்வு என்பது சொல்லாய்வு வழிப்பட்டது தானே!

3.1. சொல்லாய்வுக் கட்டுரைகள், வேர்ச்சொற்கட்டுரைகள் என்பனவும், வடமொழி வரலாறு, தமிழ்வரலாறு, சென்னைப் பல் கலைக் கழக அகர முதலியின் சீர்கேடு, இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? என்பவை முற்றிலும் அல்லது பெரும்பகுதியும் சொல்லாய்வு வழிப்பட்டவையே.

3.2. தமிழர் திருமணம், பழந்தமிழாட்சி, தமிழ்நாட்டு விளையாட்டுக்கள், தமிழர் பண்பாடும் நாகரிகமும், தமிழர் வரலாறு,

1. இசைத்தமிழ்க் கலம்பகம்: பாடல். 54.
2. இசையரங்கு இன்னிசைக் கோவை: 27.
3. வெளிப்பட்ட ஆண்டு 1940. முகவுரை நாள்: 29.1.40; புத்தூர், திருச்சி.
4. ''எனது முதற்றாய் மொழியை எப்படியும் அச்சிட ஏற்பாடு செய்யவும். தமிழின் தொன்மையை எடுத்துக்காட்டும் நூல் அஃதொன்றே என்பது அச்சிடும் போது தெரியவரும்'' என 24.7.'31 இல் கடிதம் எழுதியுள்ளார் (திரு. வ. சு.)

தமிழர் மதம், மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை, தமிழிலக்கிய வரலாறு என்பவை வாழ்வியல் ஆய்வு வழிப்பட்டவை.

3.3. திருக்குறள் மரபுரையும், பல்வேறு அமையங்களில் பாடிய பாடல்களும், உரையும் பாட்டும் ஆகிய வழிப்பட்டவையாம்.

3.4. கட்டுரைவரைவியல் உயர்தரக்கட்டுரை, இலக்கணம் (இரண்டுபாகங்கள்), செந்தமிழ்க் காஞ்சி,[1] இயற்றமிழ் இலக்கணம் இன்னவையும் அவ்வப்போது எழுதப்பட்ட கட்டுரைகளும் இந்நாள் கூறுகளும் தழுவியவையாம். இந்நாற்பொருள் பிழிவுகளாகவே இவர்தம் ஆங்கில நூல்களாகிய "The primary classical Language of world," "A critical Survey of the Madras university Tamil lexican," 'Is Hindi the logical Solution of India," "An Epirome of the Lemurian Languaged and its Remifications"[2] என்பவை வெளிப்பட்டனவாம்.

## ஒப்பியன் மொழிநூல்:

4. "மொழிநூலான்து உலகமொழிகள் எல்லாவற்றையும் தழுவும் ஒரு பொதுக் கலை. உலகமொழிகள் எல்லாவற்றையும் ஆரியம் (Aryan), சேமியம் (Semitic), துரேனியம் (Turanian) என்னும் முப்பெருங்குலங்களாகப் பிரித்துள்ளார் மாக்ஸ் முல்லர். அவற்றுள், துரேனியத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் திராவிடக் குடும்பத்தின் மொழிகளைத் திறம்பட வகுத்துக் காட்டியவர் கால்டுவெல். இங்ஙனமே பிறரும் பிற குடும்பங்களை வகுத்துக் காட்டியுள்ளனர். மேற்கூறிய முக்குலங்கட்கும் உள்ள தொடர்பை ஆராய்வதே இந்நூலின் நோக்கம். அவற்றுக்கோர் தொடர்புண்டென்று அதாவது அம்மூன்றும் ஒரு மூலத்தினின்றும் கவைத்திருக்க வேண்டுமென்று சென்ற நூற்றாண்டிலேயே மாக்ஸ் முல்லர் (Max Muller) திட்டமாய்க் கூறிவிட்டார். அம்மூலத்திற்குத் திராவிடம் மிக நெருங்கியதென்று கால்டுவெல் கூறியுள்ளார். இக்கூற்றை என்னாலியன்ற வரை முயன்று மெய்ப்பித்திருக்கிறேன்" என்று கூறும் பாவாணர் உரையே அவரியற்றிய ஒப்பியன் மொழிநூல் உட்கிடையையும் அது வழங்கும் செய்தியையும் தெளிவிப்பதாம்.

---

1. கட்டாய இந்திக் கல்விக்கண்டனம் செந்தமிழ்க்காஞ்சி ஆசிரியர் தேசாபிமானத் தமிழ்த் தொண்டன். 1937. விலை 0. 2. 0. மீட்போலை 3.7:12.

2. இந்நூல் தட்டச்சுப்படிவமாக வெளிப்பட்டது; 52 பக்கங்கள்.

4.1. ''இலையென்னும் ஒரேயுறுப்பிற்கு நால்வேறு சொற்களுள. மாவாழை முதலியவற்றினது இலை என்றும், நெல் கேழ்வரகு முதலியவற்றினது தாள் என்றும், கரும்பு பெருஞ்சோளம் முதலியவற்றினது தோகை என்றும், தென்னை பனை முதலியவற்றினது ஓலை என்றும் கூறப்படும்''

பூ முதலாவது தோன்றும் போது **அரும்பு** என்றும், பேரரும்பான போது **போது** என்றும், மலர்ந்தபின் **மலர்** என்றும், விழுந்தபின் **வீ** என்றும், வாடியபின் **செம்மல்** என்றும் கூறப்படும். **பூ** என்பது பொதுப் பெயர்.

4.2. ''அரும்பு என்னும் ஒரு நிலைக்கே அதனதன் அளவுக்குத் தக்கபடி அரும்பு, மொட்டு, முகிழ், முகை, மொக்குள் என வெவ்வேறு சொற்களுள.

4.3. காயின் வெவ்வேறு நிலைகள் பூம்பிஞ்சு, திருகுபிஞ்சு, இளம்பிஞ்சு, பிஞ்சு அரைக்காய், காய், முக்காற்காய், கன்னற்காய் அல்லது பழக்காய், கடுக்காய் அல்லது கருக்காய் என வெவ்வேறு சொற்களால் குறிக்கப்படுகின்றன.

மாம்பிஞ்சு 'வடு'வென்றும் பலாப்பிஞ்சு 'மூசு'என்றும் விதப்பித்துக் கூறப்படுகின்றன.

பருவத்திற்காய்ப்பது பருவக்காய் என்றும், பருவமல்லாத காலத்திற் காய்ப்பது வம்பக்காய் என்றும் கூறப்படுகிறது.

முதிர்ந்தபின் கனிவில்லாதது காய் என்றும், கடினமானது நெற்று என்றும் கூறப்படுகின்றன.

4.4. செவ்வையாய்ப் பழுக்காத பழங்கள் வெவ்வேறு காரணம் பற்றி சிவியல், சூம்பல், வெம்பல், சொத்தை எனப்பல வகையாகக் கூறப்படுகின்றன. இவற்றுள் சொத்தை வகை சொண்டு, சொத்தை, சொட்டை எனப்பல பெயராற் கூறப்படுகின்றது. சொத்தையான மிளகுபழம் அல்லது வற்றல் சொண்டு என்னுஞ் சொல்லால் மட்டும் குறிக்கப்படுதல் காண்க.

4.5. பழத்தின் தோல் வகைகட்கு அதனதன் வன்மை மென்மைக்குத் தக்கபடி தொலி, தோல், தோடு, ஓடு, சிரட்டை எனப்பல பெயர்களுள.

4.6. விதை வகைக்கு வித்து விதை மணி முத்து கொட்டை என வெவ்வேறு சொற்கள் உள''. இவை தமிழ்ச் சொல்வளம் என்பதன் ஒருபகுதி.[1]

**முதல்தாய் மொழி :**

5. மொழியானது இந்நாட்டிற் பொதுவாய்க் கருதப்படுகிறபடி, இறைவனாற் படைக்கப் பட்டது மன்று; இயற்கையாய் உள்ளது மன்று; மாந்தனால் ஆக்கப் பெற்றதே. ஆயின், ஒருவனால் மட்டு மன்று; கழிபல வூழிகளாகக் கணக்கற்ற தலை முறையாளரால் சிறிது சிறிதாய் ஆக்கப்பெற்றதாகும். இங்ஙனம் ஆக்கப்பெற்ற மொழிகள் உண்மையில் ஒரு சிலவே. அச்சிலவே, அவற்றின் பல்வேறு நிலை களில் நிகழ்ந்த திரிபு, சுருக்கம், பெருக்கம், கூட்டு, கலப்பு என்னும் ஐம்முறைகளால் ஏறத்தாழ மூவாயிரம் மொழிகளாகக் கிளைத்து உலகமெங்கும் பரவியிருக்கின்றன. அம் மூலமொழிகளுள் முதன்மை யானது தமிழே என்றும், அது தோன்றிய இடம் மாந்தன் பிறந்தக மாகிய குமரி நாடே என்றும் பத்தாண்டிற்கு முன்னரே வெளியிட் டேன். அதை மெய்ப்பிக்கும் வகையில் முதலாவது இந்நூல் வெளி வருகின்றது[2] எனவரும் 'முதல் தாய்மொழி' முகவுரைப் பகுதியே நூல் வரு நிலையையும் பொருள் நிலையையும் தெளிவுறுத்தும்.

**முதல் தாய் மொழியின் பகுப்பும் சுட்டுவிளக்கமும் :**

6. முதல் தாய்மொழி குறிப்பொலிக் காண்டம், சுட்டொலிக் காண்டம் என இருகாண்டங்களைக் கொண்டது.

மொழிக்கு முதற்படியாம் ஐவகை[3] ஒலிகளைப்பற்றியது குறிப் பொலிக் காண்டம். முச்சுட்டடியாகப் பிறந்துள்ள சொற்களைப் பற்றிய விரிவே சுட்டொலிக் காண்டம்.

6.1. முச்சுட்டுகளுள் சொல்வளச் சுரங்கமாய் அமைந்துள்ளது ஊகாரச் சுட்டு. அதன் கருத்துவளர்ச்சி தோன்றல் முதல் துருவல் ஈறாக ஒன்பான் வகைப்படுவதையும் சுழல் நெறியால் அமைந்தியல் வதையும் திட்டத் தெளிவாக விளக்குகிறார் பாவாணர்.

ஊகாரச் சுட்டு முதலாவது முன்மையைக் குறிக்கும். முன்மை என்பது காலமுன், இடமுன், முன்னிலை, முன்னுறுப்பு, முற்பகுதி, முனி (நுனி) முதலிய பல கருத்துகளைத் தழுவும்.

---

1. ஒப்பியன் மொழிநூல் பக். 204-5.
2. முதல் தாய்மொழி, முகவுரை பக். 6.
3. உணர்வொலி, ஒப்பொலி, குறியொலி, வாய்ச்செய்கை யொலி, குழவி வளர்ப் பொலி.

6.2. முன்மைக் கருத்தினின்று முன் வருதலாகிய தோன்றற் கருத்துப் பிறக்கும். வித்தினின்று முளையும், மரத்தினின்று துளிரும், தாயினின்று சேயும் போல, எப்பொருளும் ஒன்றினின்றே தோன்றுதலானும் ; குட்டியும் குழவியும் முகமும் முன்னும் காட்டியல்லது புறமும் பின்னுங் காட்டித் தோன்றாமையானும்; எப்பொருட்கும் முற்பகுதி முகம் எனப்படுதலானும்; முகத்திற்கு எதிர்ப்பட்ட பக்கம் முன்மையாதலானும்; புதிதாய் ஒன்றினின்று ஒன்று தோன்றுதலெல்லாம் முன் வருதலே யாதல் அறிக.

6.2.1. தோன்றற் கருத்தினின்று முற்படற் கருத்துப் பிறக்கும். ஒரு மரத்தில் தோன்றிய தளிர் முன்னால் நீண்டு வளர்வதும் ஓர் உடம்பில் தோன்றிய உறுப்பும் கொப்புளமும் முன்னுக்குத் தள்ளியும் புடைத்தும் வருவதும் இவை போல்வன பிறவும் முற்படலாகும்.

6.2.2. முற்படற் கருத்தினின்று முற்செலவுக் கருத்துப் பிறக்கும். இடம் பெயரும் இருதிணை உயிரிகளும் ஓரிடத்தினின்று இன்னோரிடத்திற்குச் செல்வதெல்லாம் முற்செலவே. பிற்செலவெல்லாம் பெரும்பாலும் சிறிது வளர்ச்சியுற்ற பின்பும் குறுந்தொலைவிற்கும் வேண்டுமென்றே நிகழ்த்தப் பெறுவதால், இயற்கையான செலவெல்லாம் பொதுவாக முற்செலவென்றே அறிக. கீழிருந்து மேற் செல்வதும் ஒருவகை முற்செலவாதலின் முற்செலவு என்பது எழுதல் அல்லது உயர்தலையும் தழுவும்.

முற்செலவுக் கருத்தினின்று நெருங்கற் கருத்துப் பிறக்கும். ஒரு மரக் கிளை நீண்டு வளர்ந்து இன்னொரு கிளையை அடுப்பதும் இருதிணையியங்குயிரிகளும் முன்சென்று தாம் தாம் விரும்பும் இடத்தையும் பொருளையும் கிட்டுவதும் நெருங்கலாகும்.

6.2.3. நெருங்கற் கருத்தினின்று தொடுதற் கருத்துப் பிறக்கும். ஒருபொருள் எத்திசையிலாயினும் மேன்மேலும் சென்று கொண்டேயிருப்பின், ஏதெனுமொரு பொருளைத் தொட்டே தீரல் வேண்டும். முன்னோக்கிச் செல்லும் உயிரிகளும் தாம் விரும்பிய பொருளையும் இடத்தையும் தொட்டடையும். தொடுதல் என்பது மெலிதாய்த் தொடுதல் வலிதாய்த் தொடுதல் என இருபாற் பட்டு, தீண்டுதல் தழுவுதல் முட்டுதல் குத்துதல் உறைத்தல் முதலிய பல கருத்துக்களைத் தழுவும்.

6.2.4. தொடுதற் கருத்தினின்று கூடற் கருத்துப் பிறக்கும். கூடல் என்பது ஒன்றிய கூடல், ஒன்றாக் கூடல் என இரு வகை. மண்ணொடு மண்ணும், நீரொடு நீரும் கூடுவது ஒன்றிய கூடல்.

உடலொடு உடலும் கூலத்தொடு கூலமும் கூடுவது ஒன்றாக் கூடல். ஒன்றாக் கூடல் மீண்டும் தொட்டுக் கூடல் தொடாது கூடல் என இரு திறத்தது.

6.2.5. கூடற் கருத்தினின்று வளைதற் கருத்துப் பிறக்கும். ஒன்றாக் கூடலில் சில பொருள்கள் வளைவதுண்டு. ஒன்றையொன்று முட்டிய இருபொருள்கள் ஒன்றாதவை யாயின், அவற்றுள் மெலியது கம்பிபோல் நீண்டிருப்பின் வளையும். கல்லை முட்டிய வேரும் கடின மான பொருளை முட்டிய ஆணியும் வளைதல் காண்க. வழிச் செல் வோன் தெருவடைத்த சுவரை முட்டித் திரும்புவதும் வேற்றிடஞ் சென்றவன் வினைமுற்றி மீள்வதும் அணிவகையில் வளைதலின் பாற் படும். வளைதல் என்பது சாய்தல், கோணல், திருகல், வட்டம்சுற்றல், சூழ்தல், உருட்சி, சுழற்சி முதலிய பலகருத்துக்களைத் தழுவும்:

6.2.6. கூடற்கருத்தினின்று பிறக்கும் மற்றொரு கருத்து துளைத்தற் கருத்தாகும். முட்டிய பின் வளையாத வலியபொருள், தான் முட்டியதைத் துளைத்தும் செல்லும். ஆணி சட்டத்தையும், வண்டு மரத்தையும், பூச்சி புத்தகத்தையும், மாந்தன் மலையையும், துளைக்கலாம், துளைத்தல் என்பது குழித்தல், தோண்டுதல், துளை யிடுதல், புகுதல், துருவுதல் ஆகிய பல கருத்துக்களைத் தழுவும்.

6.2.7. துளைத்துப் புகுதலும் துளைக்குட் புகுதலும் எனப் புகுதல் இருவகைத்து. உயிரிகள் தத்தம் உறைவிடத்திற்குட் புகுதல் துளைக்குட் புகுதலாகும். ஒன்றைத் துருவிய பொருள் இறுதியில் வெளிப்படும். அது தோன்றல் அல்லது முன் வருதல் போன்றதாகும். அதன்பின் நிகழக் கூடியவை, தோன்றல் முதல் துருவல் வரை கூறியுள்ள பல நிகழ்ச்சிகளே. இவை ஒரு பொருளின் காலமெல்லாம் மீண்டும் மீண்டும் நிகழ்ந்து கொண்டேயிருக்கு மாதலின் ஊகாரச் சுட்டுக் கருத்து வளர்ச்சி முற்றுறும் எல்லை துருவற் கருத்தே. ஆகவே, தோன்றல் முதல் துருவல் வரையுள்ள கருத்துக்களெல்லாம் ஒரு சுழல் சக்கர மாதல் காண்க[1]

6.2.8. ''தனித்தனி முக்கனி பிழிந்து வடித்து ஒன்றாக் கூட்டி... எடுத்த சுவைக் கட்டி'' என வள்ளலார் உரைப்பது போல, முதல் தாய் மொழிப் பிழிவைத் திரட்டிய சுவைக் கட்டி ஈதென்க. சுட்டு விளக்கம் என்பதும் இவ்வழிப் பட்டதே என்பது வெளிப்படையாம்.

**திரவிடத்தாய் :**

7. திரவிடத்தாய் ஒப்பியன் மொழி நூலின் முதன் மடல் 2 ஆம் பாகத்தின் பிற்பகுதியாய் அமைந்தது.

---

1. முதல் தாய் மொழி பக்கம் 21-23.

ஒரு மொழிக்கு அடிப்படையானவும் இன்றியமையாதனவுமான மூவிடப் பெயர்கள், முறைப் பெயர்கள், தட்டுமுட்டுப் பெயர்கள், அக்கம் பக்கப் பொருட் பெயர்கள், பேரிடப் பெயர்கள், வா போ முதலிய முக்கிய வினைகள், பல்வகைப் பண்புப் பெயர்கள், கை கால் முதலிய சினைப் பெயர்கள் ஆகிய இவை இயற்கையான வடிவிலும் வேர்ப் பொருள் தாங்கியும் எம்மொழியிலுள்ளனவோ அம்மொழியே அதற்குத் தாய்''[1] என்பதைத் தெள்ளிதின் விளக்கும் நூலே திரவிடத் தாயாம்.

7.1. தமிழ் மொழியைப் பற்றிய செய்திகள் முன்னுரைப் பகுதியிலும், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு ஆகிய மொழிகளின் உயிரும் உடம்பும் போன்ற அடிப்படையும் முக்கியமான பகுதிகளெல்லாம் தமிழேயென்றும், ஆடையும் அணியும் போன்ற மேற்புறவணியில் மட்டும் ஆரியந்தழுவின வென்றும் தனித்தனி நான்கு பகுதிகளில் நிலை நாட்டியுள்ளார் பாவாணர்.

7.2. தமிழினின்று மலையாளம் திரிந்த முறைகள் இருபதும், கன்னடம் திரிந்த முறைகள் பதினெட்டும், தெலுங்கு எழுத்துத் திரிபு, சொல் திரிபு, பொருள் திரிபு முதலியவும், துளு திரிந்த முறைகள் பதினைந்தும் எடுத்துக் காட்டுடன் விளக்கியுள்ளார். திரிதற்குரிய காரணங்களையும் ஒவ்வொரு பகுதியிலும் எடுத்துரைத்துள்ளார்.

7.3. ஆன (ஆனை), ஆடு, எரும (எருமை), ஒட்டகம், கழுத (கழுதை), வெருகு, கரடி, கன்னு (கன்று) காலிகள், காள (காளை), குதிர (குதிரை), குரங்ஙு (குரங்கு), நரி, நாய், பன்னி (பன்றி), புலி, பூச்ச (பூசை=பூனை), மான், முயலு, மூரி, குறுக்கன் (குறுநரி)[2]- இவை மலையாள மொழியில் வழங்கும் விலங்குப் பெயர்கள்.

7.4. ஈச்சல் (ஈசல்), அந்தி (அந்து), கிளி, கிணி (கிளி), கோளி (கோழி), காகி (காக்கை), பைரி (வைரி), கூகெ (கூகை), கடல் காகி, நீருகோளி, நவில் (மயில்), பர்து (பருந்து), பாவல் (வாவல்), ஆந்தெக (ஆந்தை), குகில் (குயில்), குளவி, கொக்கரே (கொக்கு)[3]- இவை கன்னட மொழியில் வழங்கும் பறவைப் பெயர்கள்.

---

1. திரவிடத்தாய்-முகவுரை பக்கம் 6.
2. ஷை பக்கம் 44.
3. ஷை பக்கம் 66.

7.5. பாமு (பாம்பு), பேனு (பேன்), பல்லி, புருகு (புழு), தேலு (தேள்), மூங்கீசு (மூங்கா), எலிசு (எலி), சுஞ்சுஎலிசு (சுண்டெலி)[1]- இவை தெலுங்கில் வழங்குகின்ற ஊர்வனவற்றின் பெயர்கள்.

7.6. அப்ப (அப்பம்), அரி (அரிசி), உப்பு, ஊட்ட (ஊட்டம்), எண்ணெ (எண்ணெய்), கஞ்சி, கலி (கள்), கூளு (கூழ்), சாரு (சாறு), தீனி, நஞ்சு, புண்டி (பிண்டி), மர்து(மருந்து)[2]-இவை துளு மொழியில் வழங்கப் படுகின்ற உணவுப் பெயர்கள்.

7.7. இச்சொற்களை மேலோட்டமாக நோக்கினும் பாவாணர் உரைத்தவாறு, "உயிரும் உடம்பும் போன்ற அடிப்படையும் முக்கியமுமான பகுதிகளெல்லாம் தமிழேயென்றும், ஆடையும் அணியும் போன்ற மேற்புற வணியில் மட்டும் ஆரியந் தழுவின வென்றும்"[3] திட்டமாகக் கண்டு கொள்ள முடியும்.

**வண்ணனை மொழி நூலின் வழுவியல்:**

8. வண்ணனை மொழி நூலின் வழுவியல் என்னும் நூல், மொழி நூல், வண்ணனை மொழிநூல், உலகத் தமிழ்ப் பேரவைகள் என்னும் முப்பாற் பகுப்பால் இயல்கின்றது.

"வண்ணனை மொழி நூலைச் சிறப்பாக வளர்த்து வருபவர் அமெரிக்கரே"[4] என்னும் பாவாணர் "வெள்ளைக் காரர் சொல்வ தெல்லாம் விழுமிய அறிவியல் என்னும் குருட்டுத்தனமான கருத்து இந்தியாவில் இன்னும் கற்றாரிடத்தும் இருந்து வருகின்றது. வெள்ளை என்னும் சொல், வெண்ணிறக்கருத்தடிப் படையில், தூய்மை யை மட்டுமன்றி வெறுமையையும் குறிக்கும் என முகவுரை முதற் பத்தியிலேயே சொல்லாய்வைத் தொடங்கி விடுகிறார்.

8.1. பூனாத் தெக்காணக் கல்லூரியின் சார்பாக ஆண்டு தோறும் நடத்தப் பெறும் வண்ணனை மொழி நூற் பயிற்சியைப் பாவாணர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணி செய்து வந்த போது இடை நடுவே பெற்றார் என்பது அறியத் தக்கது.

8.2. வண்ணனை மொழியியல், ஒப்பியன் மொழிநூல், வரலாற்று மொழி நூல் என்பவற்றை எளிமையான உவமையால் இனிது விளக்குகிறார் பாவாணர்.

---

1. திரவிடத்தாய் பக்கம் 88.
2. ஷை பக்கம் 104.
3. ஷை பக்கம் 112.
4. வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக்கம் 90.

8.2.1. ஒரு குடும்பத்திலுள்ள மக்களுள் ஒவ்வொருவரைப் பற்றி இவர் இன்ன பாலினர்; இன்ன நிறத்தர்; இன்ன வளர்த்தியர்; இன்ன தோற்றத்தர்; இன்ன இயல்பினர்; இன்ன திறமையர் என்று கூறுவது போன்றது வண்ணனை மொழியியல் (Descriptive Linguistics).

8.2.2. ஒரு குடும்பத்தார் எல்லாரையும் ஒப்பு நோக்கி, இக் குடும்பத்தில் இத்தனையர் ஆடவர்; இத்தனையர் பெண்டிர்; இத்தனையர் சிவப்பர்; இத்தனையர் கருப்பர்; இத்தனையர் நெடியர்; இத்தனையர் குறியர்; இத்தனையர் ஒத்தவர்; இத்தனையர் வேறுபட்டவர் என்றுரைப்பது போன்றது ஒப்பியன் மொழி நூல் (Comparative Lingiuistics).

8.2.3. ஒரு குடும்பத்தாருள், இன்னார் தந்தையார்; இன்னார் தாயார்; இன்னார் புதல்வர்; இன்னார் புதல்வியர்; இன்னார் தமையனார்; இன்னார் தம்பிமார்; இன்னார் தமக்கையார்; இன்னார் தங்கைமார்; என்று இங்ஙனங் கூறுவது போன்றது வரலாற்று மொழி நூல் (Historical Linguistics).

என்பது அது.

8.3. வண்ணனை மொழி நூல் வழுக்களாக இருபதனைக் கூறி மறுக்கும் பாவாணர் சில வட சொற்கள் பிராகிருத வாயிலாக அடிப் படைத் தமிழ்ச் சொற்களாயின என்பதை வன்மையாக மறுக்கிறார்

எ-டு: ''வட்டம்◁Pkt. Vatta◁Skt vrtta''

என்றுள்ள சென்னைப் பல்கலைக் கழகத் தகழகராதியைச் சுட்டி,

''வகரம் உகரத்தோடு கூடி மொழி முதலாகாமையால், சுட்டடி வகர முதற் சொற்களெல்லாம் பெரும்பாலும் பகர முதற் சொல்லின் அல்லது மகர முதற் சொல்லின் திரிபாகவே இருக்கும்'' என நெறி காட்டினார். பகு-வகு, மிஞ்சு-விஞ்சு என்பவை போல மல், 'வல்' எனத் திரிந்தது என்றார்.

வல்-வல, வலத்தல் = வளைதல், வளைத்தல், சுற்றுதல், சூழ்தல்

வல்-வலி. வலித்தல் = சுளித்தல். வலி-வலிச்சம் = முகச்சுளிப்பு.

வல்-வலை = சூழும் கயிற்றுப் பொறி

வல்-வள்-வள்ளம் = வளைவு, வட்டக்கிண்ணம், படி, மரக்கால் சிறுதோணி

என்பன முதலாக ஒருநூற்றுக்கு மேற்பட்ட சொற்களை[1] எடுத்துக் காட்டித் தமிழ்ச் சொல்லே 'வட்டம்' என்பதை உறுதிப்படுத்தியுள்ளார்.

1. வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக். 93-96.

**தமிழர் திருமணம் :**

9. பண்டைத் தமிழ்மணம், இடைக்கால மாறுதல், திருமணச் சீர்திருத்தம் என்னும் முப்பகுப்புடன் இயலும் தமிழர் திருமணம் என்னும் நூலில், திருமணம் தொடர்பான பழந்தமிழ்ச் செய்திகள் முன்னுரையிலும் திருமண அழைப்பிதழ் முதலிய செய்திகள் பின்னிணைப்பிலும் விளக்கப் பெறுகின்றன.

9.1. ஆங்குவரும் சுலியாண சுந்தரனார் 'மணவழகர்' ஆகின்றார்; விசுவநாதர் 'உலகநாயகர்' ஆகின்றார்; துரைசாமி 'துரையாண்டான்' ஆகின்றார்.

9.2. 'பிரபந்தம்', பனுவலாகவும், 'இராசி' ஓரையாகவும் 'நிச்சயதார்த்தம்', உறுதி செய்தலாகவும் 'தாம்பூலம் கொடுத்தல்', பாகடைப் பகிர்வாகவும், 'சாந்திமுகூர்த்தம்', சேர்வு முழுத்தமாகவும், 'கண் திருஷ்டி', கண்ணெச்சிலாகவும், ஆட்சிபெறுகின்றன. குறி (சகுனம்), கணியம் (சோதிடம்), பிறப்பியம் (ஜாதகம்), ஓலக்கம் (தர்பார்) என்பவை எழில் முகங்காட்டுகின்றன. வைத்தீசுவரன் கோயில் 'வினைதீர்த்தான் கோயிலாக' விளக்கம் பெறுகின்றது. 'Sub Magistrate' கீழ் முறையர் ஆகவும், 'Agent' முகவராகவும், 'Limitled' மட்டிப்பு ஆகவும், 'Bench' அறுகாலியாகவும் பெயர்ப் பாட்சி பெற்றுள்ளன.

**பழந்தமிழாட்சி :**

10. தமிழர் திருமணத்திலேயே இத்தகைய சொல்லாய்வுகள் என்றால் பழந்தமிழாட்சியின், சொல்லாட்சிகளைச் சொல்லவும் வேண்டுமோ?

10.1. பழந்தமிழாட்சி, அரசியலுறுப்புகள் முதலாக அரசர் முடிவு ஈறாக இருபத்தாறு தலைப்புகளும், பின்னிணைப்பாக நான்கு தலைப்புகளும் ஆக முப்பது தலைப்புகளில் இயல்கின்றது. இதனை, இலக்கியம் கல்வெட்டுச் செய்தி உலகவழக்கு ஆகிய முந்நிலைக் களத்தினின்றும் தொகுத்து எழுதியுள்ளார் பாவாணர். ஆட்சிச் சொற்கள் எண்ணற்று இந்நூலில் இடம் பெற்றுள. அரசியல் வினைஞர் என்னும் பகுதியில் மட்டும் எண்பதுக்கு மேற்பட்ட வினைஞர்களைக் குறிப்பிடுகிறார்[1]. பொருளாதாரம் என்னும் தலைப்பில் இறைவகை என்னும் பகுதியில் ஏறத்தாழ 230 வரிகளைச் சுட்டுகிறார்[2]. ஆதலால் இந்நூலில் உள்ள சொல்வளம் சொல்ல வேண்டுவதில்லையாம்.

1. பழந்தமிழாட்சி பக். 30.38.
2. பழந்தமிழாட்சி பக். 80-82.

10.2. இயற்றல் ஈட்டல் காத்தல் வகுத்தல்[1] என வள்ளுவர் கூறுபவற்றை முறையே Organization, Collection, Protection, Distribution என்பனவாகச் சுட்டுகிறார். Viceroys என்பதைத் துணையரையர் என்பதற்குப் பகரமாகக் கூறுகிறார்.[2] சாத்தியம்[3] சமசிகை[4] ஆசுகவி[5] என்பவற்றை முறையே இயல்கை, குறிக்கை, கடும்பா எனத் தமிழாக்கம் செய்கின்றார். நையாண்டி என்பதை நகையாண்டி[6] எனச் செம்மைப் படுத்துகிறார்.

**தமிழ் நாட்டு விளையாட்டுகள்:**

11. 'தமிழ்நாட்டுவிளையாட்டுக்கள்' என்பதைப்பற்றி முன்னரே பார்த்துள்ளோம்[7]. தொகுப்புக்கலைத் தோன்றல் மூன்றாம் பிரிவு காண்க.

**பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்:**

12. பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும் என்னும் நூலின் நாகரிகம், பண்பாடு என்னும் சொற்களின் வேரடிப் பொருளை நன்கனம் ஆய்வு செய்து தெளிவிக்கிறார்.

12.1. நாகரிகம் என்பது நகர மக்களின் திருந்திய வாழ்க்கை நாகரிகம் என்னும் சொல் நகரகம் என்னும் சொல்லின் திரிபாகும். (நகர் + அகம் = நகரகம். நகரகம்-ந க ரி க ம் - ந ா க ரி க ம்) எல்லா நாட்டிலும் மாந்தர் முதன் முதல் நகர நிலையிலேயே நாகரிக மடைந்துள்ளனர். அதனால் நகரப் பெயரினின்று நாகரிகப்பெயர் தோன்றியுள்ளது. சிற்றூர்கட்கும் நகரங்கட்கும் எவ்வளவோ தொடர்பேற்பட்டுள்ள இக்காலத்தும், நாகரிகமில்லாதவன் நாட்டுப் புறத்தான் என்றும் பட்டிக் காட்டான் என்றும் இழித்துக் கூறுதல் காண்க. நகரப் பதி வாழ்நர் என்னும் சொல், நாகரிகமுள்ளோரைக் குறிக்கும் இலக்கிய வழக்கையும் நோக்குக.

---

1. பழந்தமிழாட்சி பக். 87.
2. பழந்தமிழாட்சி பக். 5.
3. பழந்தமிழாட்சி பக். 114.
4. பழந்தமிழாட்சி பக். 132.
5. பழந்தமிழாட்சி பக். 132.
6. பழந்தமிழாட்சி பக். 115.
7. தொகுப்புக்கலைத் தோன்றல் காண்க.

ஆங்கிலத்திலும், நாகரிகத்தைக் குறிக்கும் இலத்தீனச் சொல் நகரப் பெயரினின்று தோன்றியதே. L. Civitas, City or City-State, CIVIS Citizen, L. Civilis-E. Civil-Civilize.[1]

12.2. இனிப் பண்பாடு பற்றிக் கூறும் செய்தி :

பண்படுவது, பண்பாடு, பண்படுதல் சீர்ப்படுதல் அல்லது திருந்துதல். திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும், திருந்திய தமிழைப் 'பண்பட்ட செந்தமிழ்' (தனிப்பாடல்) என்றும், திருந்திய வுள்ளத்தைப் பண்பட்ட வுள்ளமென்றும், சொல்வது வழக்கம்.

12.2.1. பண் என்னும் பெயர்ச் சொற்கு மூலமான பண்ணுதல் என்னும் வினைச் சொல்லும், சிறப்பாக ஆளப் பெறும்போது பல்வேறு வினைகளைத் திருந்தச் செய்தலையும் பல்வேறு பொருள்களைச் செவ்வையாய் அமைத்தலையும் குறிக்கும்.

12.2.2. பண்பாடு பல பொருட்கு உரியதேனும் நிலமும் மக்கள் உள்ளமும் பற்றியே பெருவழக்காகப் பேசப்பெறும். ஆங்கிலத்திலும் Culture என்னும் பெயர்ச்சொல் சிறப்பாக நிலப்பண்பாட்டையும் உளப் பண் பாட்டையும் குறிப்பது கவனிக்கத் தக்கது. Cultivate என்னும் வினைச் சொல்லும் அங்ஙனமே. இவ்விருவகைப் பண்பாட்டுள்ளும் மக்களைத் தழுவிய உளப் பண்பாடே சிறப்பாகக் கொள்ளவும் சொல்லவும் பெறும்.[2]

12.2.3. பண்பாடு நாகரிகம் என்னும் இரண்டற்கும் உள்ள வேற்றுமையைக் குறிக்கிறார் பாவாணர் :

நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை, அது எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன் படுத்துவது.பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்துவது.

12. 3 இலக்கணப் பிழையின்றிப் பேசுவதும், எல்லா வகையிலும் துப்புரவாயிருப்பதும் காற்றோட்டமுள்ளதும் உடல் நலத்திற் கேற்றதுமான வீட்டிற்குடியிருப்பதும் நன்றாய்ச் சமைத்துண்பதும் பிறருக்குத் தீங்கு செய்யாமையும் நாகரிகக் கூறுகளாம்.

எளியாரிடத்தும் இனிதாகப் பேசுவதும் புதிதாய் வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும், இரப்போர்க் கிடுவதும், இயன்றவரை பிறருக்குதவுவதும், கொள்கையும் மானமுங்கெடின் உயிரை விடுவதும் பண்பாட்டுக் கூறுகளாம்.

1. பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும், முன்னுரை பக். 1.
2. பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும், முன்னுரை பக். 6.

12.3.1. சுருங்கச் சொல்லின் உள்ளத்தின் செம்மை பண்பாடும், உள்ளத்திற்குப் புறம்பான உணவு உடை உறையுள் முதலியவற்றின் செம்மை நாகரிகமும் ஆகும். ஆகவே இவற்றை முறையே அக நாகரிகம் புறநாகரிகம் எனக் கொள்ளினும் பொருந்தும்.[1]

''பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர்''

என்னும் குறளின் நடைக்கு இவ்விளக்கம் மாறாகுமோ என்னும் ஐயமும் வினாவும் கற்பவர்க்கு எழும். அதனால்,

12. 4. பண்டைக் காலத்தில் நாகரிகம் என்னும் சொல்லையே பண்பாடென்னும் பொருளிலும் ஆண்டனர். அதனாலேயே பண் பாட்டுக் குணமான கண்ணோட்டத்தை நாகரிகம் என்றார் திருவள்ளுவர். திருந்திய நிலை என்னும் பொதுக் கருத்தில் நாகரிகமும் பண்பாடும் ஒன்றாதல் காண்க[2] என விளக்கம் தந்தார் பாவாணர்.

12. 5. மேழம், விடை, இரட்டை, அலவன், ஆளி, கன்னி, துலை, நளி, சிலை, சுறவம், கும்பம், மீனம் என்னும் பன்னீரோரைப் பெயர்களையும் ஞாயிறு, திங்கள், செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி என்னும் கிழமைப் பெயர்களையும் ஆய்ந்து தெளிவுறுத்துகின்றார்.[3].

12. 6. சிகைக்காய் என்பதன் மரூஉ சீயற்காய் அல்லது சீக்காய் என்பதை மறுத்து, 'சீத்தல் — துடைத்தல்' ஆதலால் அழுக்கைப் போக்குங்காய் எனப் பொருள் படும்[4] என்பதை நிலைப் படுத்துகிறார்.

12. 7 வெந்தாணம் (வெந்த ஆணம்) என்பது இன்று வெஞ்சணம் என மருவி வழங்குகின்றது. இவை விடமொழியாளர் கடன் கொண்டு 'வ்யஞ்சன' என்று திரித்தும் வ்ய + அஞ்சன என்று பிரித்தும் உத்திக்குப் பொருந்தாத பொருள் கூறியும் வட சொல்லாகக் காட்டுவர்[5] என மறுக்கிறார்.

---

1. பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும் பக், 8.9.
2. ஷை ஷை பக்: 10.
3. ஷை ஷை பக். 180-3.
4. ஷை ஷை பக். 39.
5. ஷை ஷை பக். 45.

12. 8. கருப்பு நிறமானது கரும்பு,[1] மிளகு + காய் = மிளகாய்,[2] எனச் சொற் பொருள் விளக்கமும் மட்டு (சர்பத்து),[3] கரணியம் (காரணம்)[4] ஆதனியல் (ஆத்மீகம்)[5] எனச் சொல்லாக்கமும் புரிகின்றார்.

பண்டாரம், குரு, சட்டாம்பிள்ளை, சமயம், விடை[6] என்பவற்றை விரிவான எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகிறார்.

பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும் என்னும் நூலில் ஒரு பாதி சொல்லாய்வே எனினும் தகும்.

**தமிழர் வரலாறு :**

13. தமிழர் வரலாறு என்னும் பொத்தகம் தனிநிலைக் காண்டம், கலவு நிலைக் காண்டம் தெளி நிலைக் காண்டம் என்னும் முப்பாற் பகுப்புடன் இயல்கின்றது. இக் காண்டப் பெயர்களே வரலாற்றின் அடிக்களத்தைத் தெரிவிக்க வல்லனவாம்.

''வீட்டிற்கு ஆவணம் போன்றதே நாட்டிற்கு எழுதப்பட்ட வரலாறு'' என்பதற்கு ஏற்ப, நாட்டு ஆவணமாகத் திகழும் வண்ணம் எழுதப்பட்டுள்ளது தமிழர் வரலாறு.

''இற்றைத் தமிழருட் பெரும்பாலாரும் தம்மைத் தாமே தாழ்த்துவதிலும், இனத்தாரைப் பகைத்துப் பகைவரை வாழ வைப்பதிலும், பகைவர் மனங்குளிரத் தம் முன்னோரைப் பழிப்பதிலும் தம்மருமைத் தனிமொழியைப் புறக்கணித்துப் பகைவரின் அரைச் செயற்கைக் கலவை மொழியைப் போற்றுவதிலும் ஒப்புயர் வற்றவராய் உழல்கின்றனர்'' என்று முகவுரையில் கூறுதற்கு ஏற்ப இந்நிலைகளை மாற்றி மீட்பதற்குரிய நோக்கிலே நூல் எழுதப்படுதலை எங்கெங்கும் காண இயல்கின்றது.

13. 1. இந்நூலில் ஆளப்படும் மொழிப்பெயர்ப் பட்டியை

---

1, 2, பண்டைத்தமிழ நாகரிகமும் பண்பாடும் பக். 30
3. ஷை ஷை 50.
4. ஷை ஷை 74.
5. ஷை ஷை 88.
6. ஷை ஷை பக்கங்கள் முறையே: 92, 141, 142, 94, 49.

நோக்கிய அளவிலேயே[1] சொல்லாராய்ச்சியின் தலைப்பாடு எத்துணைத்தென இனிதின் விளங்குவதாம்.

மூவேந்தர்களின் பெயரும் குறிஞ்சி முதலிய எழுதிணைப் பெயர்களும்[2] விரிவாக ஆராயப் பெற்றுள்ளன.

தொல்காப்பியர் காலத் தொழில் வழிக் குலப் பெயர் நிரல்,[3] சகர முதன்மொழி நிரல்,[4] ஊண் வினை வேற்றுமை நிரல்[5] ஆகியவை அரிய தொகுப்புகளாவும் ஆய்வுகளாகவும் அமைந்துள.

செம்பு, தாம்பரம், தாமரை, தெய்வம், பொன், படம், மண்டலம், வீணை, வரணம், சிந்து, வயல் முதலிய சொற்கள் வேர் வழியே பொருட்டெளிவு புலப்பட விளக்கம் பெற்றுள்ளன.

கொல்லை, பூசை, சாத்து, சோறு, முதலிய சொற்களின் பொருள் விளக்கம் புலமையின்பம் பயக்கின்றன.

குறுங்கணக்கு, நெடுங்கணக்கு, அகம், புறம், அகப்புறம், புறப்புறம், குச்சுக்கிழங்கு என்பவற்றின் குறிப்புகள், எளிமையாய் அதே பொழுதில் அருமையாய் வயப்படுத்துகின்றன.

'அங்குலம்', விரலமாவதும், 'கிரீன்லாந்து', பைந்தீவு ஆவதும், 'பசிபிக்கடல்', அமைதிக்கடல் ஆவதும், மத்தியதரைக்கடல்', நண்ணிலக்கடல், ஆவதும், 'மேப்' திணைப்படம் ஆவதும் 'தீர்வு' தீவு ஆவதும், 'சேரவரையன்', சேர்வராயன் ஆவதும் பாவாணரைக் கண்ணுறக் காட்டிக் களிப்புறுத்துகின்றன.

'' கார்த்திகைக் கப்பால் மழையுமில்லை, கருணனுக் கப்பால் கொடையுமில்லை '' என்னும் பழமொழி, '' கொடுக்கனுக் கப்பால் மழையுமில்லை; குமணனுக் கப்பால் கொடையுமில்லை'' என்றே வழங்கல் வேண்டும் என்பார்[6] பாவாணர். கொடுக்கன் என்பது தேள்; அது நளி என்னும் கார்த்திகையைக் குறிக்கும்.

**தமிழர் மதம் :**

14. 'தமிழர் மதம்' என்னும் நூலின் பெயராலேயே 'மதம்' என்னும் சொல் தமிழே என்பதை நிலைப்படுத்துகிறார். அதனை முன்னுரைப் பகுதியிலே விளக்கிவிடுகிறார். அன்றியும் 'சமயம்'

---

1. சுட்டப்பெறும் மொழிகள். 44. ஆகும்.
2. பக். 74 ; பக். 116
3. 4, 5 : முறையே 214, 208, 105.
6. தமிழர் வரலாறு, பக். 236

என்னும் சொல் விளக்கமும் புரிகிறார். இவ்விரண்டிற்குள்ள வேறுபாட்டையும் ''மதம் சமயம் என்னும் இருசொல்லும் ஒரு பொருளனவாயினும் தம்முள் நுண் பொருள் வேறுபாடுடையன. ஒரு தெய்வத்தை அல்லது இறைவனை மதித்து வழிபடுவது மதம்; இறைவனை இம்மையிலேனும் மறுமையிலேனும் அடைவதற்குச் சமைவது சமயம். ஆகவே மதத்தினும் சமயத்திற்கு ஒழுக்கமும் நோன்பும் மிகவேண்டுவனவாம்''[1] எனத் தெளிவாக்கியுள்ளார்.

14.1. ஆத்திக நாத்திகங்களை நம்பும் மதம் நம்பா மதம் என ஆளும் பாவாணர் 'தெய்வம் உண்டென்று கொள்வது போன்றே இல்லையென்று கொள்வதும் மதமாகும்''[2] என்கின்றார்.

14.2. கடவுள் நம்பிக்கையும் இருவினை நம்பிக்கையும் பாவாணர்க்கு உண்டு. அவரொடு அணுக்கமாகப் பழகியவர் இவ் வுண்மைகளை நன்கனம் அறிவர்.

எண்ணிற்கும் எட்டா இடங்காலந் தேங்காவி
கண்ணிற்கோ எட்டும் கணப்பொருளாம்-வண்ணிக்கக்
கூடாம லன்றோ குறித்தார் கடவுளென
நாடாமல் உண்டென நம்பு.[3]

என்னும் வெண்பா பாவாணர் கடவுள் நோக்கை நன்குரைக்கும். அவர்தம் இருவினைக் கருத்து ஏற்றமிக்கதும் புதுவதுமாம். நல்வினை *தீ*வினை என்றும் பெருவினை என்றும் மயக்குறுத்தும் வினை என்றும் பிறரெல்லாம் பிற பிறவாறு கூற, ''தெரிந்தும் தெரியாதும் செய்யும் இருவினைத் *தீ*வினை''[4] என்கிறார் பாவாணர்.

14·3 ''இம்மையிற் பெறுவது உடலிருந்தவீடு'' என்றும், ''மறுமையிற் பெறுவது உடலிறந்த வீடு'' என்றும்[5] இருவகை வீடுகளுக்கு விளக்கம் புரிகிறார்.

குமரி நிலையில், இடைநிலையியல், நிகழ்நிலையியல், வருநிலையியல், முடிபுரையியல் என ஐம்பாற்பகுப்பில் காலமுறையில் நூலை நுவலும் பாவாணர், அவ்வப் பெயரீடுகளாலேயே வழக்கம்போல் பொருள் விளங்க வைக்கின்றார்.

---

1. தமிழர் மதம் பக். 3
2. ஷை பக். 3; ஆத்திக நாத்திகங்கள் 'உள்மதம்' 'இல் மதம்' எனவும் சொல்லப்படுகின்றது. பக். 191
 தேவியம் இல்லியம் எனவும் படும் பக். 196.
3. ஷை முன்னுரைக்கு முன்னுள்ள வெண்பா
4. தமிழர் மதம் பக். 91
5. ,, ,, பக். 53

14.4. சிவன், மால், முருகன்[1] என்னும் பெயர்களை வேர்வழி காட்டிவிரிவாகஆய்ந்துரைக்கிறார். பேய், பூதம், நாகம்[2] என்பவையும் ஆய்ந்து விளக்கப்பெறுகின்றன. சமயம் வடமொழிப் பிடிக்குள் அழுந் திக் கிடப்பதால் இதன்கண் வரும் வடசொற்றமிழாக்கம் மிகப்பலவாம். குறிப்பாகத், தெய்வப் பெயர் மாற்றம், இடப்பெயர் மாற்றம். கொண் முடிபு,மெய்ப்பொருளியல்[3] என்னும் உட்பகுதிகளில்விரியக்காணலாம். முடிபுரையியலில் உள்ள தமிழாக்கச் சொற்கள் மிகப்பலவாம்.

14.5 தமிழ்நாட்டுச் சிவமடங்கள்[4] என்னும் பகுதியில் பாவாணர் உளக்கொதிப்பும் சீர்திருத்தச் செந்நோக்கும் செவ்விதில் புலப்படும்.

14.6. 'பிரணவம்' முளைமந்திரம் எனவும், 'வரம்' ஈவு எனவும் 'ஆகமம்' தோன்றியம் எனவும், 'வாகனம்' அணிகம் எனவும், 'புரா ணம்' தொன்மம் எனவும், 'சித்தாந்தம்' கொண்முடிபு எனவும், 'பசு பதி பாசம்' என்பவை தலைவன் தளையன் தளை ; கடவுள் கட்டுணி கட்டு என இருவகையாகவும் ஆளப்பெற்றுள.

14.7. 'சிலுவை' 'குறுக்கை' எனவும், 'ஸ்தானீகன்' 'இட வகன்' எனவும் வருதல் எண்ணத்தக்கவை. 'சி' யாப்பு நோக்கிச் 'சீ' என நீளும். அதை நாயோட்டும்மந்திரம் என்பார் திருமூலர் என்பார் பாவாணர்[5]. ''வாய்த்தால் தமிழுக்கு ; வாய்க்கா விட்டால் வட மொழிக்கே'' எனப் பழமொழிப் புத்தாக்கம்[6] செய்கின்றார்.

14.8. ''கத்தரிக்காய் அறுக்க வாங்கிய கத்தி கழுத்தறுக்குங் கருவியாய் இருப்பின், அது கழுத்தறுத்தான் குற்றமா ? கத்தியின் குற்றமா ? மாந்தரையெல்லாம் கடவுளின் மக்களாக்கி உடன்பிறப்பு அன்பால் ஒன்றுபட்டு இன்புற்று வாழச்செய்யும் உயர்ந்த மதவியலை ஒரு தன்னலக் கொள்ளைக் கூட்டம் தாம் வாழவும், பிறர் தாழவும் பயன்படுத்தின், அக்குற்றம் எங்ஙன் மதவியலைச் சாரும் ?

14.8.1. ''இன்று கடவுளில்லை என்று சொல்வாரும் கொள் வாரும் தமக்குச் சமமானவரும் தம்முடன் உண்ணும் தகுதியுடைய

---

1. தமிழர் மதம் பக். முறையே 37, 49, 38
2. ,, ,, பக். 18, 20, 28
3. ,, ,, பக். 83, 85, 88, 99
4. ,, ,, பக். 129
5. ,, ,, பக். 96
6. ,, பக். 133

வருமான வகுப்பாருடனும் மணவுறவு கலவாது ஆரியன் வகுத்த வழியிலேயே நின்று என்றும் தம்பிறவிக் குலத்துள்ளேயே கொள்வனை கொடுப்பனை செய்து கொள்வது, எங்ஙனம் பகுத்தறிவுச் செயலாகும்? இதனாலும், மதம் மக்கள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையன் றென்பது பெறப்படுகின்றதன்றோ? ''பழியோரிடம் பளகோரிடம்''[1]

14.8.2. ''காணப்பட்ட பொருள்களைப் பற்றியே கருத்து வேறுபாடு இருக்கும் போது, காணப்படாத கடவுளையும் மறுமையையும் பற்றிக் கருத்து வேறுபாட்டிற்கு மிகுந்த இடமிருப்பதால், கடவுளை நம்புகிறவரும் நம்பாதவரும் ஒருவரைஒருவர் குறை கூறாதும் வெறுக்காதும் உயர்திணைக்குரிய உடன்பிறப்பு அன்பு பூண்டு ஒழுகல் வேண்டும்''[2]

இத்தகைய சமனமைக் கருத்துகள் பொதுளியுள்ளதும் தமிழர்மதப் பொத்தகம் என்க.

14.8.3. ''இறைவன் ஏற்படுத்தியவாறு ஒவ்வொருவரும் ஒவ்வோர் அறிவுத்துறையிலேயே வல்லுநராதல் கூடும்''[3]என்று கூறும் பாவாணர் குறிப்புப்படி ''சொல்லாய்வுக்கெனப் பிறந்த பேற்றாளர் பாவாணர்'' என்பதை உணர்விக்கத் 'தமிழர் மதமும்' தக்கசான்றா தல் காணமுடியும்.

**மண்ணில் விண் :**

15. மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை என்னும் நூலில் 'பொதுவுடைமை' என்பது தவறுஎன்றும் 'கூட்டுடமை' என்பதே தகவு என்றும் சுட்டுகிறார் பாவாணர்.

15.1. கூட்டுடமையைப் பொதுவுடைமை (Communism) என்று பலர் தவறாகக் கூறுவர். பணநடமாட்டமின்றி, எல்லாருந் தத்தமக் கியன்ற பணியைச் செய்து எல்லாப் பொருள்களையும் ஒத்த உரிமையோடு பயன்படுத்தி, ஒற்றுமையாக ஒருங்கே வாழும் குடும்ப அல்லது கூட்டுக்குடும்ப வாழ்க்கையே பொதுவுடைமையாம்.[4]

---

1. தமிழர் மதம் பக். 186
2. ,, பக். 192
3. ,, பக். 97
4. மண்ணில் விண் நூலாசிரியன் முகவுரை பக். 3

15.2 எல்லாத் தொழிலர்க்கும் எக்காலத்திற்கும் ஏற்றதும் வகுப்பு வேற்றுமையைத் தோற்றுவிக்காததும், உடம்பியற்பண்பாட்டையும் ஒருங்கே வளர்ப்பதும் இறைவழிபாட்டை மறுக்காததும், தனியுடைமையை விலக்காததும் பகுத்தறிவிற்கு முற்றும் ஒத்ததும் உயரியதுமான கூட்டுடமையாட்சி அல்லது வாழ்க்கை கி.மு. அல்லது கி. பி. முதல் நூற்றாண்டிலேயே திருக்குறள் வாயிலாகத் திருவள்ளுவரால் தெரிவிக்கப்பட்டுவிட்டது. அதுவே இப்பொத்தகத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது''[1] எனப் பொத்தக அமைதியை வெளிப்படுத்துகிறார் பாவாணர்.

15.3. முன்னுரை முப்பத்தாறு பக்கங்களும், நூல், வள்ளுவர் கூட்டுடமை, தமிழ்நாட்டு அரசின் கடமை, தமிழ்நாட்டு அரசின் தனிக் கடமை, நடுவணரசின் கடமை, உலகக்கூட்டரசு, முடிவுரை என ஆறு இயல்களில் 212 பக்கங்களும், ஆக 248 பக்கங்களில் மண்ணில் விண் இயல்கின்றது. இவற்றுள் தமிழ்நாட்டுஅரசின் தனிக்கடமை என்னும் பகுதி முற்றும் தமிழ்மொழி, பயிற்றுமொழி பற்றிய ஆய்வேயாம்.

15.4. ''Vote' என்னும் ஆங்கிலச் சொல் vow (L. Voveo) என்னும் வினையினின்று தோன்றியுள்ளதால் 'நேரி' என்று இப்பொத்தகத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள''[2] தென நூலாசிரியன் முகவுரையிலே சுட்டியுள்ளார்.

15.4.1. ''நேரியருக்கு 18 அல்லது 21 அகவை நிரம்பினால் மட்டும் போதாது. சட்டசவைக்குத் தகுந்தவரைத் தெரிந்தெடுக்கும் ஆய்வும் அறிவும் இல்லாத கல்லா மக்களின் நேரியுரிமை, குருடன் கைத் தீப்பந்தமும் குழந்தைகைப் படைக்கலமும்போல் உடையார்க்கும் பிறர்க்கும் தீங்கே விளைவிக்கும். தகுதியில்லாத செல்வரே, ஆயிரக் கணக்கான குடவோலைகளை அல்லது நேரிகளை விலைக்கு வாங்கிக் கொண்டு சட்டசவை உறுப்பினராக முடியும்.''[3]

15.4.2. ''அறிவும் ஆற்றலும் இல்லாத தற்குறிகளும் சிற்றறிவினரும் சட்டசவையராகி, பேரறிஞரையும் பெரியோரையும் ஆளும் சட்டம் செய்வது, பிறவிக்குருடரும் புரைபடர்ந்த கண்ணரும் கூர்ங் கண்ணருக்கு வழிகாட்டுவதையே ஒக்கும்.''[4]

1. மண்ணில் விண் ; நூலாசிரியன் முகவுரை பக். 4
2. ,, ,, 2
3. ,, முன்னுரை பக். 35
4. ,, ,, 36

15.4.3. ''ஆனைக்கும் அடிசறுக்கும் ஆதலாலும், தன்குற்றம் தனக்குத் தோன்றாது ஆதலாலும் முற்றும் உணர்ந்தவர் மக்களி னத்தில்லை யாதலாலும், கட்டுப்பாடில்லாவிடின் காவலனும் காவான் ஆதலாலும் செங்கோலாட்சியொடு கூடிய இரு கட்சியரசே குடியர சிற் கேற்றதாம்.''[1]

15.4.4. ''கிண்டிக் குதிரைப்பந்தயமும் அரசுப் பரிசுச்சீட்டும் சூதாட்டே. அரசு நடத்துவதனால் அவை நல்வினையாகா. வரு வாயை நற்பணிக்குப் பயன்படுத்தினால் அவை அறவினையாகா. குதிரைப் பந்தயத்தில் ஒட்டமொட்டிக் கெட்ட குடும்பங்கள் எத் தனையோ பல.''[2]

''பரிசுச்சீட்டு வருமானத்தைக் கொண்டு அறப்பணி செய்யப் பட்டதெனின், கொள்ளையடித்த பொருளைக் கொண்டும் அது செய்யலாம் என்க.''[3]

''குடங்குடமாய்ப் பாலைக் கொட்டுவதும், கலங்கலமாய் நெய் வார்த்து மலைவிளக்கெரிப்பதும் மன்னிக்கத்தகாத பொருளாட்சிக் குற்றமாகும். இவை இறைவனுக்கு முற்றும் ஏற்காதவை.''[4]

''ஒரு குடும்பத்திற் பிறந்த பிள்ளைகட் கெல்லாம் ஊணுடையுறை யுள் அளிக்கத் தந்தை கடமைப் பட்டிருப்பது போன்றே, ஒருநாட் டிற் பிறந்த குடிகட்கெல்லாம் வேலையும் பாதுகாப்பும் அளிக்க அரசு கடமைப் பட்டுள்ளது.''[5]

''மாணவர் சேர்ப்புப் படிவங்களிலும் பதிவேடுகளிலும் பெற் றோரின் தொழில் தவிர, பிறப்புப் பற்றிய குலப்பெயர்க் குறிப்பு இருத்தல் கூடாது.''[6]

''தாழ்த்தப்பட்டவரைத் தாழ்த்தப்பட்டவர் என்று சொல்வதே மானக்கேடாம். அதினும் பிறர் சொல்லாது தாழ்த்தப்பட்டவரே சொல்லிக்கொள்வது தம்மைத் தாமே தாழ்த்துவதாகும். ஆதலால்

1. மண்ணில் விண். முன்னுரை பக். 36.
2. ,, ,, பக். 138.
3. ,, ,, 139.
4. ,, ,, 139.
5. ,, ,, 35.
6. ,, ,, 87.

தாழ்த்தப்பட்ட (அரிசன) மாணவர் விடுதியென்று தனியாக இருப்பதை உடனே நீக்கிவிட்டு மேல்வகுப்பு மாணவர் விடுதியோடு சேர்த்து விடல் வேண்டும்.''[1]

''தீண்டாமையைப் போக்க நகரங்களில் நரகல் எடுக்கும் வேலையை அறவே நீக்கல் வேண்டும். எடுப்புச் சலக்கப்புரைகளை யெல்லாம் அடிப்புச் சலக்கப்புரைகளாக மாற்றுதல் வேண்டும்.''[2]

''கள்வருக்கு ஒற்றர் வேலையும் கொள்ளைக்காரக்குப் படைத்துறை வேலையும் கொடுப்பின் ஓரளவு நிலைமை திருந்தலாம்.''[3]

''கள்ளக் காசுத்தாளடிப்பாரையும் கள்ளத்தனமாகத் துமுக்கி (Gun) சுழலி (Revolver) முதலியன செய்வாரையும் பொறியாக்கத் தொழிலில் பயிற்றின் சிறந்த பொறிவினைஞராகவோ புதுப்புனை வாளராகவோ தலையெடுக்கலாம்.''[4]

''மண்ணுலகில் விண்ணுலக இன்பந்துய்க்கத்தக்க காதல் மணங்கள், தடைப்பட்டுச் சாதல் மணங்களாக முடிகின்றன.''[5]

— இத்தகைய கருத்துகளையும் புரட்சி நடைமுறைகளையும் சீர்திருத்தங்களையும் நூற்றுக்கணக்கில் கொண்டுள்ள ''மண்ணில் விண்'' என்னும் நூலில், ஆயிரத்துக்கு மேற்பட்ட புத்தாக்கச் சொற்களும், மொழியாக்கச் சொற்களும் விரவிக்கிடக்கின்றன.

15.5. முடிவுரைப் பகுதியும் தமிழ் நாட்டு அரசின் தனிக்கடமை என்னும் பகுதியும் சொல்லாய்வின் வைப்பகங்களாக உள.

இல்வாணன், களைகண் இல்லம், உறுப்பிலி, பழனம் என்னும் சொற்கள் புத்தாட்சி பெறுகின்றன. நிமையம் (நிமிஷம்) குளம்பி (காபி) கொழுந்து (தேயிலை) சுதைமா (சிமிண்டு) வார்ப்பான் (பிளாஸ்டிக்) இணைமுழம் (யார்டு) நன்னர் (போனஸ்) மொட்டான் (ஸ்டூல்) முந்திரிச்சாராயம் (பிராந்தி) அம்பகம் (பெர்மிட்) துமுக்கி (துப்பாக்கி) சுழலி (ரிவால்வார்) அரத்தி (ஆப்பிள்) உருளையன் (சப்போட்டா) கைந்நூலாடை (கதர்) வெள்ளிரும்பு (Stainless Silver) அடிப்பு ((Flush - out) நாட்சரி (தினசரி) கிழமையன்

1. மண்ணில் விண் பக். 131.
2. ,, ,, 133.
3,4. ,, ,, 144.
5. ,, ,, 116.

(வார இதழ்) மாதிகை (மாத இதழ்) ஆகிய எண்ணற்ற சொற்கள் பொருள் விளக்கமும் ஆட்சியும் பெற்றுள.

15.5.1. அறிஞர் தார்வினின் (Darwin) கொள்கை 'பரிணாமம்' என வழங்கப் பெற்றதைத் தொல்காப்பிய நெறியில் 'கூர்தல்' (உள்ளது சிறத்தல்) என ஆட்சி செய்தார் திரு. வி. க. அதனைத் திரிவாக்கம் (Evolution) என்கிறார் பாவாணர்.[1]

15.2.2. ''நகரம் நரகமாகின்றது. மாநகரமோ மாநரகமே. சாலை நடுவிற்சென்றால் வண்டிகட் கச்சம். ஓரத்திற் சென்றால் ஈறுமாறிய நரகத்திற் கச்சம். இத்தகைய தீய நாற்றச் சூழலில் தூய காற்று எங்ஙனம் வீசும்? வீசும் காற்றெல்லாம் வீச்ச மன்றோ''[2] என்னும் இயல்பு நவிற்சி, எத்துணை இனிய சொல் விளையாட்டாகிச் சுவையுறுகின்றது.

கிறித்து பெருமான் சமய மீட்பர் எனப்படுவார். காரல்மார்க்கசு (Karl Marx) பொருளியல் மீட்பர் ஆவர்;[3] பாவாணர் மொழியியல் மீட்பர் என்பதை மெய்ப்பிக்கும் நூல்களில் ஒன்றே மண்ணில் விண் என்க.

**தமிழ் இலக்கிய வரலாறு:**

16. தமிழ் இலக்கிய வரலாறு அறுபத்தைந்து பக்க முன்னுரை யுடைய நூல். அம்முன்னுரைப் பகுதியில் உள்ள சொல்லாராய்ச்சி கள் மிகப்பல. நூலில், பாவாணரின் மற்றை நூல்களைப் போன்ற செறிவும் சொல்லாய்வும் இடம் பெற்றில. பரந்து பட்ட செய்தி களின் தொகுப்பு இலக்கிய வரலாறு ஆகலின், அதனை மேலும் விரிக்க அஞ்சிய நிலைமை காரணியமாக இருக்கலாம்.

16.1. ''ஆனைகொன்றான் என்னும் மலைப் பாம்பு ஓர் யானை முழுவதையும் விழுங்கினாற் போன்று, இனம் மொழி இலக்கியம் நாகரிகம் பண்பாடு என்னும் ஐங்கூறமைந்த தமிழம் முழுவதையும் ஆரியம் விழுங்கக் கவ்வி விட்டது. சுந்தரம் பிள்ளை, மறைமலை யடிகள் முதலியோர் தமிழைப் பேரளவு மீட்டிருப்பினும் மூலவையாபுரி யாரும் வழிநிலை வையாபுரியாரும் அம்மீட்பின் பயனைப்பெரிதும் கெடுத்துவிட்டனர். அக்கேட்டை நீக்கவும் இனிமேல் அத்தகைய

1. மண்ணில் விண் பக்: 64.
2. ஷை. பக்: 61.
3. ஷை. பக்: 32.

கேடு என்றேனும் நேராதிருக்கவும் வரலாறு, மாந்தனூல், மொழி நூல், ஆகிய முந்நூலடிப்படையில் இந்நூல் எழுதப் பட்டுள்ளது.''[1] என்று நூலாக்க நோக்கைச் சுட்டுகிறார் பாவாணர்.

16.2. விழித்தல், பார்த்தல், கண்ணுறுதல், நோக்குதல், நோங்குதல், நோடுதல், காணுதல் என வினைகள் நுண்ணிதின் வேறுபடுதலை விளக்குகிறார். ஊர், வேந்தன், பார்ப்பனர், ஊர்த் தலைவர், குலப்பட்டமற்ற பெயர்கள், ஆதாம், ஏவாள், பூனை, கடல், கலம் முதலியவற்றை எடுத்துக் காட்டுடன் விரிவாக ஆராய் கிறார். புரம் புரி மதில் எயில் இஞ்சி சோ என்பவற்றின் நுண் ணிய வேறுபாடுகளைச் சுட்டுகிறார்.

16-3. இரும்பு வரலாற்றுச் சொல்லாதலை இனிது விளக்கு கிறார். தவசத்தின் முதல் இடை கடை என்னும் முப்பாற் பகுப்பை வகுக்கிறார்.

''அரிசி வகையில் நெல்லரிசி தலை; வரகு தினை சாமை குதிரைவாலி காடைக்கண்ணி ஆகியவற்றின் அரிசி இடை; கஞ்சி, களி கூழுக்கு மட்டும் உதவும் சோளம் கம்பு கேழ்வரகு கடை.''[2]

''நெல்லரிசியில் சீரகச் சம்பா, சிறுமணிச்சம்பா என்பவை தலை. பிறசம்பா இடை. பட்டையரிசிகடை.''[3]

''குழம்பிற்குதவும் பயற்று வகைகளுள் துவரை தலை; அவரை மொச்சை பச்சை இடை; உழுந்து தட்டான் கல் கரம்பை கொள் (காணம்) கடை''[4] — என்பவை அவை.

''வாட்டல் வதக்கல் வறுவல் பொரியல் துவட்டல் புரட்டல் அவியல் ஒடியல்''[5] எனப்பல்வேறு முறைகளில் கறியாக்கப்பட்ட வகையைக் குறிக்கிறார். soup என்பதை நீட்டாணம்[6] என்கிறார்.''

''முழுவுடும்பு, முக்கால்காடை, அரைகோழி, கால்ஆடு'' என இறைச்சி வகைப் பழமொழியை[7] இசைக்கிறார்.

16.4. வண்ணம் சித்திரம் ஏரணம் தருக்கம் என்பவை தமிழ்ச் சொற்களாதலைத் தெரிக்கிறார்.

---

1. தமிழிலக்கியவரலாறு. நூலாசிரியன் முகவுரை. பக். 8.
2-7. ஷை முன்னுரை பக். 32-3.

'வாதம்', ஊதை எனவும், 'நித்தியம்', நிற்றியம் எனவும், 'விடயம்', புலனம் எனவும், 'பிராணன்', உயிரன் எனவும், 'சமசியை' குறிப் பனைப்பா எனவும், 'சமீன்' வேளகம்' எனவும் 'சாத்திரம்' புலத்திரம் எனவும், 'தந்திரம்' இழையம் எனவும், இந்நூலில் தமிழாக்கம் பெறுகின்றன.

அணிப் பெயர்கள் பலவும் தமிழாக்கம் ஆகின்றன. [1]
வடமொழியில் உள்ள தமிழ்க் கலப்பு ஆயப்படுகின்றன. [2]
தானம் பதினாலும் தமிழாகின்றன. [3]

16.5 தக்கயாகப் பரணியில் உள்ள வடசொல்லாட்சி வகைகளை ஆய்ந்தெழுதுகிறார். செயற்கையான தொடையும் நடையும் சீர் கெட்ட வடசொற் பெருக்கும் கொண்டு பொருட் சிறப்பற்றிருப்பது என்பதைப் பலராற் பயிலப் படாமைக்குக் கரணியமாகக் காட்டுகிறார். [4]

16.5.1. ஆனால் திருப்புகழில் வரும் வடசொற் கலப்பைப் பொருட்டாக்காமல் குறிப்பிடுகிறார்.

" திருப்புகழில் வடசொற் கலப்பு மிகுதியென ஒருகுறை கூறுவ துண்டு. அது பாடினவர் குற்றமன்று. அக்காலத்து வழக்கே அதற்குக் கரணியம். முதலிரு கழகக் காலத்தில் அவர் இருந்திருப் பின் முழுத்தூய்மையாய்ப் பாடியிருப்பார். " [5]

வண்ணக் குழிப்புகளின் அருமையை உணர்ந்த அமைதி ஈதென்பதை அறிய முடிகின்றது :

16.5.2 " பதினைந்தாம் நூற்றாண்டில் வேறெம் மொழியிலும் என்றும் எவராலும் பாட வியலாத நூற்றுக் கணக்கான வண்ணக் குழிப்புக்களிற் பாடப்பட்ட ஒப்புயர் வற்ற தமிழ்ப்பனுவல் அருணகிரி நாதரின் திருப்புகழ்த்திரட்டே "[6] என்னும் நயப்புரை இக்கருத்தை நாட்டுவதறிக. முதற்கண் முன்னுரைப்பகுதியும் நூல், தலைக் காலம்

---

1. தமிழிலக்கிய வரலாறு பக். 205
2. ,, ,, 293
3. ,, ,, 184
4. ,, ,, 42
5. ,, ,, 47
6. ,, ,, 46

இடைக்காலம் இக்காலம் எதிர்காலம் பின்னிணைப்பு என்னும் ஐம்பாற் பகுதிகளும் கொண்டு நடை பயில்கின்றது தமிழ் இலக்கிய வரலாறு.

**திருக்குறள் மரபுரை :**

17. பாவாணரால் உரைகாணப்பட்ட நூல் திருக்குறள் மரபுரை என்பதாம்.

பரிமேலழகர் வழுவகை பன்னிரு பாற்றென முகவுரையிலே எடுத்துக் காட்டும் பாவாணர் தம் உரையில் திருந்திய வகை ஐந்தனைச் சுட்டுகிறார். வடசொல்லுக்குப் பகரமாகப் பயன்படுத்தும் தென் சொற்கள் இவையெனவும் சுட்டுகின்றார்.

17.1 நூலின் முன்னுரை 34 பக்கங்களால் இயல்கின்றது. அப் பகுதியில் வள்ளுவர் சான்றோர் தெய்வம் என்னும் சொற்களை ஆய்கின்றார். திருக்குறளிலுள்ள வடசொற்கள் 16 என்றும், அவற்றுள் 4 சொற்கள் தமிழ்வேரின என்றும் கணிக்கின்றார்.

17.1.1 இம்முன்னுரையில், ''இருமைக்கும் உதவும் விழுமிய பொருளை அணிமிக்க குறள் வெண்பாவாற் பாடியிருப்பது, பன்மணி பதித்த ஓவிய வேலைப்பாட்டுப் பொற்கலத்தில் அரசர்க்குரிய அறுசுவை யுண்டியைப் படைத்தாற் போலும்'' என்று வரும் வரிகள் குறளின் அழகையும் அமைப்பையும் அணிநலம் படத் தெரிப்பனவாம்.

17.2. அறத்துப்பால் 38 அதிகாரங்களில் தவம், கள்ளாமை, மெய்யுணர்தல் என்னும் மூவதிகார முகப்புகளும் சொல்லாய்வுக்கு இடமாகியுள்ளன. 380 குறள்களில் 21 குறள்கள் சொல்லாய்வுக்கு ஆட்பட்டுள. மெய்யுணர்தலில் மட்டும் 21 சொற்கள் மொழியாக்கம் செய்யப்பட்டுள. ஏனை இடங்களில் ஓதியார் (ஞானியார்) ஓகி (யோகி) ஒட்டோலக்கம் (ஆடம்பரம்) ஈகம் (தியாகம்) மாணிகம் (பிரமசரியம்) முறியன் (தபுதாரன்) உறழி (வாதி) கரிசு (பாவம்) ஆம்புடை (உபாயம்) உன்னம் (பாவனை) என்னும் சொல்லாக் கங்கள் உள்ளன.

17.3 நீர்வாழ்வன வற்றை நீரி என்பார் சித்தர். பாவாணர் ஊர்வனவற்றை 'ஊரி' என ஆள்கின்றார். அகடூரி என்பது பாம்பு;

ஊரி என்பதற்கு ஊர்ந்து செல்லும் முகிலையும், புல்லுருவியையும் அகர முதலிகள் சுட்டும்.

17.4. பின்னிணைப்பிலுள்ள ஐந்தாம்பகுதி ''திருக்குறளிலுள்ள, வடமொழிச் சென்ற தென் சொற்கள்'' முழுதுறு சொல்லாய்வாம். அகர முறைப்படி 121 சொற்களை வேரும் பொருளும் விளக்கமுறுத்தி அச் சொற்கள் வடசொல்லில் வழங்கும் முறையை எடுத்துரைக்கிறார். பாவாணரின் மற்றை நூல்களில் காணாத அருஞ்சொற்பொருள் அகர முதலியும் இந்நூல் இறுதியில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்க தாம்.

**கட்டுரைவரைவியல்** :

கட்டுரை வரைவியல், உயர்தரக் கட்டுரை இலக்கணம் என்பவை மாணவர் பாடத்திட்டம் நோக்கி எழுதப் பெற்றவையாம். இயற்றமிழ் இலக்கணம் என்பதும் இந்நோக்கில் எழுதப்பெற்ற நூலேயாம்.

18.1. ''கட்டுரை வரைவியல் என்னும் உரை நடை இலக் கணம்''[1] என்னும் நூற்பெயரே நூற்செய்தியை விளக்கும். உயர்தரக் கட்டுரை இலக்கணம்[2] என்றொரு நூல் பின்னே வருதலால் இஃது ''இடைத்தரக் கட்டுரை இலக்கணம்'' என்னும் பெயரையும் பெற்றது.

18.1.1. கட்டுரை வரைவியல் பதிப்பகத் தாரால் சூட்டப்பட்ட பெயர். பாவாணர் கடிதங்களில், ''கட்டுரைகசடற'' என்ற பெயரைச் சூட்டியமையே வெளிப்படுகின்றது. ஆனால் நூல் கட்டுரை வரைவியலாகவே வெளிப்பட்டது.

18.2. ''மாணவர் பிழைகள் பெரும்பாலும் எழுத்துப்பிழையும் சொற் பிழையுமாயிருத்தலின் அவற்றை நீக்குதற்குப் பல வழிகள் இந் நூல் நெடுமையும் கையாளப்பட்டுள: எடுத்துக் காட்டாக ரகர றகர வேறுபாடுகளையும் வலிமிகும் இடங்களையும் நோக்குவார்க்கு இவ் வுண்மை எளிது புலனாகும்'' என்பது முகவுரையில் உள்ள குறிப்பு.

ரகர றகர வேறுபாடு போலவே, ளகர ழகர வேறுபாடுகளும் காட்டப்பட்டுள்ளன.

---

1. முதற்பதிப்பு சூன் 1936. சை. சி. நூ.ப. கழக வெளியீடு. எண் 400.
2. முதற்பதிப்பு 1951 ஷ ஷ

18.3 எழுத்தியல், சொல்லியல், சொற்றொடரியல், அணியியல், கட்டுரையியல் என்னும் ஐந்தியல்களையும் நால்வகைப் பின்னிணைப்புகளையும் நூல் கொண்டுள்ளது.

சொல்லியல் எண்ணடி, உயர்திணைப்பெயர், இருபாற்பெயர்கள், இழிவடைந்த சொற்கள், உயர்வடைந்த சொற்கள், பொருள்திரிபு, இகழ்ச்சிச் சொற்கள், இழிசொற்கள், வழூஉச் சொற்கள், மிகைபடு சொற்கள், குறைச் சொற்கள், போலி, பல்வடிவச் சொற்கள், பன்முறைச் சொற்கள், சொன்மயக்கம், சொற்குறுக்கம் என்னும் பதினாறு பகுப்புகளில் இயல்கின்றது.

18.4. இவற்றுள் வழூஉச்சொற்கள், மரூஉச் சொற்கள், பல்வடிவச் சொற்கள், என்பவை ஒவ்வொன்றும் நூற்றுக்குமேற்படக் காட்டப் பட்டுள.

அதிகம்—அளவைக் குறிப்பது.
அநேகம் (வ)—எண்ணைக் குறிப்பது.
அரிவாள்—பொருள்களைச் சிறியதாய் அரியும் வாள் அரிவாள்.
அறுவாள்—பொருள்களை அறுக்கும் வாள் அறுவாள்.
அரைப் படித்தவன்—குறைவாகக் கற்றவன்.
அறப் படித்தவன்—முற்றக் கற்றவன்.
அல்ல—ஒன்று இன்னொன்று அல்லாமையை அன்று அல்ல என்னுஞ் சொற்குறிக்கும்.
இல்லை—ஒன்று ஓரிடத்திலின்மையை இல்லை என்னுஞ் சொற் குறிக்கும்.
ஊர்கோலம்—ஊரை வலமாகச் சுற்றாமல் ஊர்ந்து செல்லல்.
ஊர்வலம்—ஊரை வலமாகச் சுற்றுதல்.
எத்தனை—எண் குறிப்பது.
எவ்வளவு—அளவு குறிப்பது.
எத்துணை—இரண்டுங் குறிப்பது.
கட்டடம்—தொழிற் பெயர்.
கட்டிடம்—இடப்பெயர்.
தீஞ்சுவை—இனிய சிவை.
தீச் சுவை—தீய சுவை.
பண்டிகை—வீட்டில் கொண்டாடப்படுவது
திருவிழா—வெளியே கொண்டாடப்படுவது
மிக்க—பெயரெச்சம்
மிக—வினையெச்சம்
வடுகக்கண்ணன்—வடுகக்குலக்கண்ணன்
வடுகங்கண்ணன்—வடுகன்ஆகிய அல்லது வடுகன் மகன் கண்ணன்

வெள்ளாளன்—நிறம் பற்றிய பெயர்
வேளாளன்—வேளாண்மை பற்றிய பெயர்
'ஆர்' விகுதிபெற்ற குலப் பெயர்கள் 'ஓர்' விகுதி பெறின் பொருள் மாறிவிடும்.

எ.டு. : ஓதுவார்—ஓதுவோர்
முதலியார்—முதலியோர்

இவை 'சொன்மயக்கம்' என்னும் பகுதியில்[1] இடம் பெற்றுள்ளன வற்றில் பெரும்பாலனவாம்.

18.5. சொற்றொடரியலில் வரும் இணைமொழிகள், தொடர் மொழிகள் என்பனவும், பின்னிணைப்பில் உள்ள 'வடசொல்—தென் சொல்' 'இந்துத்தானிச் சொல்—தமிழ்ச்சொல்' ஆங்கிலச் சொல்—தமிழ்ச்சொல்' என்பனவும் ஒவ்வொன்றும் தனித்தனி இருநூறு முந் நூறுக்கு மேற்பட்டவையாம்.

18.6. உயர்தரக் கட்டுரை இலக்கணம் இயலும் வகை, "ஆங் கில உரைநடை இலக்கணம் மிக விரிவாகவும் நிறைவாகவும் வரையப் பட்டிருத்தலானும், ஆங்கில வுரைநடையைப் பின்பற்றியே தமிழ் உரைநடை வளர்க்கப்பட்டு வருதலாலும், ரென்னும் மார்ட்டினும் (Wren and Martin) இணைந்தியற்றிய ஆங்கில இலக்கணநூலைத் தழுவியே சென்னை அரசியலார் தமிழ்க் கட்டுரை இலக்கணப் பாடத் திட்டம் வகுத்திருத்தலானும் அந்நூலைத் தழுவியே இந்நூலும் வரைய பட்டுள்ளது" என்னும் முகவுரையால் தெளிவாகும். மொழியியல் தொடர்பான ஆங்கிலக் கலைச்சொற்கள் மிகப்பல இந்நூலில் தமிழாக் கம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

18.7. முதல்நூல் முழுமையும் தொடரியலாகவும், இரண்டாம் நூல் மரபியல் கட்டுரையியல்களாகவும் மூவியல்களில் உயர்தரக் கட் டுரை இலக்கணம் அமைந்துள்ளது. மரபியலில் உள்ள 42 பக்கங்களும் சொல்லாய்வுகளே.

18.8. உறுப்புகளின் வினை சினைவினை ஆகும். கண்தொடர் பான வினைகளைக் கூறுக என்றால் கண்ணடைதல், கண்ணேறு, கண்மூடுதல், கண்மலர்தல், எனச்சிலவே நமக்குத் தோன்றும். இருந்து இருந்து நினைத்தால் இன்னும் சில தோன்றும்! கண்வினை களாகப் பாவாணர் கூறுபவற்றை எண்ணலாம்.

---

1. கட்டுரை வரைவியல் பக். 59—62

18,8.1. கண்கலத்தல், கண்களவு கொள்ளுதல், கண்கனலுதல், கண்காட்டி விடுதல், கண்கெடச் செய்தல், கண்கெடப் பேசுதல், கண் சாத்துதல், கண்சாய்தல், கண் சுருட்டுதல், கண்சுழலுதல், கண் செறியிடுதல், கண்டுகழித்தல், கண்டு காணுதல், கண்டுபாவித்தல், கண்ண கற்றுதல், கண்ணடைதல், கண்ணழித்தல், கண்ணறுதல், கண்ணாற் சுடுதல், கண்ணார்வித்தல், கண்ணிற்றல், கண்ணுக்குக் கண்ணாதல், கண்ணூறு கழித்தல், கண்ணெச்சில் கழித்தல், கண்ணெறிதல், கண்ணொட்டுதல், கண்ணோடுதல், கண்திறத்தல், கண்தெறித்தல், கண் பசத்தல், கண்படுதல், கண்பரிதல், கண்பறைதல், கண்பிதுங்குதல், கண்புதைதல், கண்மலர்தல், கண்மாறுதல், கண்முகிழ்த்தல், கண்மூடுதல், கண்வழுக்குதல், கண்வளர்தல், கண்வாங்குதல், கண்விடுதல், கண்விதும்புதல் என்பனவற்றை அகரநிரலில் அமைத்துப் பொருள் விளக்கமும் செய்கின்றார்.

18.8.2. கண்மட்டுமோ சினை? அடி, கழுத்து, காது, கால், கை, செவி, தலை, நா, பல், முகம், வயிறு, வாய், ஆகியவும் சினைகள்தாமே. இவற்றின் வழியாகவரும் வினைகளையெல்லாம் தொகுத்தளிக்கின்றார் சினைவினை என்னும் பகுதியில்! எத்தனை வினைகள்? 249 ஆகும்.

18.8.3. இவ்வாறே கருமை செம்மை பசுமை வெண்மை முதலியவற்றின் வழியே வரும் பண்புப் பெயர்களையும் தொகுத்து 158 தொடர்களைப் பொருள் விளக்கத்துடன் எழுதுகின்றார். வெண்கடன் முதலாக வெள்ளோலை ஈறாக வெண்மைத் தொடர்கள் மட்டும் ஐம்பத்தைந்தனைக் குறிக்கிறார்.

18.9. ஒருபொருட் பல சொற்கள் பருப்பொருளில் ஒத்தனவேயன்றி அவற்றின் நுண்பொருளில் ஒத்தனவல்லவாம். கொசுவும் ஒலுங்கும் ஒத்தனபோல இருந்தாலும் வேறுபட்டனவாம். வாவலும் துரிஞ்சிலும் ஒத்தனபோலக் கருதப்படினும் வேறுபட்டனவாம்.

18.9.1. ''கொசு என்பது, கட்டுக்கடை நீரிலும் இனிப்புப் பொருள்களிலும் மொய்த்துக் கொண்டிருந்து மக்களைக் கடிக்காத ஒரு *சிற்றிவகை*''

''ஒலுங்கு என்பது சாக்கடையிலும்சதுப்புநிலங்களிலுமிருப்பதாய், கொசுவினும் நீண்டு பருத்ததாய் மக்களின் குருதியை உறிஞ்சிக் குடிக்கும் ஒரு *சிற்றீ* வகை.''—இவை இவற்றுள் வேறுபாடு.

வாவல் (வௌவால்) என்பது, மரங்களில் தொங்கிக் கொண்டிருந்து கனிகளையுண்டு வாழும் பெரு வௌவால்.

துரிஞ்சில் என்பது, சந்துபொந்துகளிற் புகுந்திருப்பது இரவில் ஊருக்குள் பறந்து திரிந்து சிறுபூச்சிகளைப் பிடித்துத்தின்னும் சிறு வௌவால்—இவை இவற்றுள் வேறுபாடு.

18.10. மரபியலில் வரும் ஓர் உட்பிரிவாம் 'ஒரு பொருட் பல சொற்கள்' என்னும் தலைப்பில் வருவன இவை.

இவ்வியலில் உள்ள இணைமொழிப் பட்டியும் மரபுத் தொடர் மொழிப்பட்டியும் விரிவுடையன. இவற்றைத், 'தொகுப்புக் கலைத் தோன்றல்' என்னும் பகுதியில் குறித்துள்ளோம்.

**எழுத்தும் - உரையாட்டும் - பொழிவும் :**

19. எழுதுவது போலவே கொச்சையும் கலப்புமின்றிப் பேசுபவர் பாவாணர். அவர்நூல்கள் போலவே உரையாடலிலும் ஊடகமாகச் சொல்லாய்வே தலைதூக்கி நிற்கும். மணிக்கணக்காக உணவை மறந்து உலகை மறந்து தம் கடமையையும் வந்தவர் கடமையையும் ஒருங்கே மறந்து சொல்லாய்விலே சொக்கிப்போய்ச் சோவெனப் பொழியும் மழையெனப்பொழிவார். இடை இடை நகைச்சுவையைக் கொட்டிக் கேட்பவரைக் கிளர்ச்சிகொளச் செய்வார். இரண்டு மூன்று மணிகள் ஆனபின்னர் வந்தவர் தம் கடமை தூண்டத் தம் வருகைக் கரணியம் உரைக்க 'அப்படியா !' என்று ஓரிரு நிமையம் கேட்பார் ! அதிலேயும் ஒரு சொல் கிடைத்துவிட்டால் மீண்டும் தம்மை மறந்து விடுவார்! வந்தவர் கடமையையும் மறந்து விடுவார்!

19·1 சொற்பொழிவு என்றால்தான் என்ன? சொல்லாய்வு இல்லாத சொல் ஏது? பொழிவுதான் ஏது? எங்கும் சொல்லாய்வு ; எங்கும் சொல்லாய்வே! தலைப்பு என்னதான் இருக்கட்டுமே! அந்தத் தலைப்புச் சொல் போதுமே பாவாணர்க்கு ! தட்டுத்தடையற்றுக் கட்டுக்கடங்காது பெருகும் வெள்ளமென அள்ளிப்பொழிய மாட்டாரா? அவர்க்குச் சொற்பஞ்சம் இருந்தது இல்லை! நினைவுப் பஞ்சம் இருந்தது இல்லை ! உவமைப் பஞ்சம் இருந்தது இல்லை ! ஒப்பீட்டுப் பஞ்சம் இருந்தது இல்லை! எத்தனை எத்தனையோ பஞ்சங்களிலெல்லாம் அடிபட்ட பாவாணர்க்கு இப்பஞ்சங்கள் மட்டும் இருந்ததே இல்லை. ''நான் படிக்கும் போது என்னை நானறியேன்'' என்று வள்ளலார் படித்தது போலப் படிப்பார் பாவாணர்! அப்படியே பொழிவார் பாவாணர்! அதன் வண்ணமாகவே இருந்துவிடுவார் பாவாணர்!

19.2. வள்ளலார் வாக்குப் போலவே பாவாணர் ''ஊன்படிக்கும் உளம் படிக்கும்; உயிர் படிக்கும்; உயிர்க்கு உயிரும்தான் படிக்கும்;'' நா மட்டுமோபடிக்கும் பாவாணர்க்கு! அப்படிப் படித்தவையெல்லாம் எவை? சொல்! சொல்லே !

19.3. பாவாணர் எழுதும் கடிதமா ? சொல்லாய்வு இல்லாத கடிதம் அரிதே ! 'நலம் ; நலமாக' என்பதற்கா கடிதம்? ஒரு கடிதத்திலே ஐம்பது சொற்களுக்குத் தமிழாக்கம்[1] எழுதுவார் ! ஓரட்டையிலே ஓர் உறைச் செய்தியையெல்லாம் எழுதுவார் ! ' என்ன எழுதுவார் ? மொழியாக்கம் எழுதுவார்! வேர்ச்சொல் எழுதுவார்! வழு நீக்கம் எழுதுவார்! தமிழுக்கும் தமிழினத்திற்கும் தமிழ்நாட்டிற்கும் ஏற்படும் கேடுகளை உணர்ந்து உணர்ந்து எழுதுவார்!' பாவாணர் கடிதங்கள் தனி ஆய்வுப் பொருளுக்குரியவையாகலின் சுட்டும் அளவில் அமைந்தாம்.

பாவாணர் நினைவு, சொல், எழுத்து ஆகிய முந்நிலை முழுதாக்கங்களிலும் ஊடகமாக இருப்பது சொல்லாய்வே என்னும் அளவில் அமைந்து முழுதுறு சொல்லாய்வுப் படைப்பாகவே அவர் செய்த நூல்களை மேலே தனித்தனி காண்போம்.

---

1. ''அவசியம் — வேண்டியது ; பிரமாணம் — அளவை, சூள் ; பக்குவம்—செவ்வி, பழுனம் ; பிரக்ஞை—உணர்ச்சி; விவகாரம் —வழக்காரம் ; விவஸ்தை—குதிர்வு; அராஜகம்—அரசின்மை ; அந்தரங்கம்—மருமம், உட்கருத்து ; அர்த்தம்—பொருள் ; அபிமானம்—நல்லெண்ணம் ; பிரசன்னம்—திருமுன்னிலை ; ஐக்கியம்—ஒன்றியம்; விஷயம்—இடையாட்டம், புலனம்; சிந்தனை —உள்கை; தரிசித்தல்—காண்கை ; நிர்ப்பந்தம்—இடுக்கண் ; யதார்த்தம் — உண்மை ; சுவீகாரம் — தெத்து ; வார்த்தை — சொல் ; மாஜி—காலஞ்சென்ற, மேனாள் ; மிலேச்சர்—அநாகரிகர் ; பிரயோகம் — ஆட்சி, வழங்கல் ; பகிஷ்காரம் — புறக்கணிப்பு ; பிரயாசை—முயற்சி, உஞற்று ; பிண்டம் (தமிழ்ச் சொல்லே) ; பிரளயம்—வெள்ளம் ; பாலிகை—முளை ; பிரத்தியேகம்—தனி, தனிவேறு ; பிராது—வழக்கு, முறையீடு ; தாம்பூலம்—தம்பலம், வெற்றிலைபாக்கு ; திதி—பக்கம் ; நிசப்தம்-அமைதி ; நிர்மூலம்—வேரறுப்பு ; நந்தி—விடைகாளை ; ஞாபக சின்னம்—நினைவுச் சின்னம், நினைவுக்குறி ; அஞ்சலி—கும்பீடு கைகூப்பு ; சந்தர்ப்பம்—அமையம் ; சாமானியம்—பொது,பொது வகை ; சாயரட்சை—சாயுங்காலம் ; சாவகாசம்—தீர்பாடு ; சல்லாபம்—உரையாட்டு சலுகை(தமிழ்) ; ஜல்தி—வல்லை, ஒல்லை; சிப்பந்தி—பணிக்குழு ; சுலபம்—எளிது ; சதி—கெடுப்பு ; சர்வதேசம்—அடங்கல் நாடுகள் ; சகாப்தம்—ஆண்டுமானம் ; சகஜம்—வழக்கம் ; சஞ்சாரம்—வாழ்ச்சி, அலைந்துறைகை; சர்ச்சை —நாட்டம் ; சம்பிரதாயம்—தொழுவாடு''—'ஞா.தே' என்னும் கையெழுததும் இல்லை ; இடமுமில்லை ; அஞ்சலட்டைச் செய்தி இது ; முத்திரை நாள் 9-1-74. முகவரி : நா. எழில்—மகிழ்

## சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்

### சொற்பொருள் ஆய்வு :

1. சொல்லாய்வையே முற்றாகக் கொண்ட நூல்களுள் முற்பட்டது சொல்லாய்வுக் கட்டுரைகள் என்னும் பெயரிய நூலாகும். அது 1949-ஆம் ஆண்டிலேயே வெளிப்பட்டது.

சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் வெளிப்படுதற்கு ஏறத்தாழ 26 ஆண்டுகளுக்கு முன்னரே பாவாணர் சொல்லாய்வில் தலைப்பட்டுக் கட்டுரைகள் வரைந்தார்; மொழியாராய்ச்சி நூல்கள் வரைந்தார்; கலைச் சொல்லாக்கம் பற்றிக் கருதியிருந்தார்; சொல்லியல் நெறி முறைகள் வகுத்தலிலும் ஈடுபட்டிருந்தார்.

1. 1. தனிச்சொல் தொடர்ச்சொல் ஆகிய இருவகைச் சொற்களுள் முன்னதற்கு வேர் காண்பது அரிதாயினும், பின்னதற்கு மூலங் காண்பது எளிதென்று மேற்கோளிட்டுச் சொற்பொருளாராய்ச்சி என்னும் தலைப்பில் எட்டுச் சொற்களை எடுத்துக் காட்டுகிறார் பாவாணர்.[1]

*சீர்தூக்கல் :*

*சீர்* = துலைத்தட்டு. தூக்கல் = தூக்கி நிறுத்தல்.
*சீர்* தூக்கல் = சரக் கெடையை நிறுத்தறிந்தாற் போலப் பொருள்களின் இயல்பை எண்ணியறிதல்.

அரவணைத்தல் :

அரவு = பாம்பு : அணைத்தல் = தழுவல்.
அரவணைத்தல் : பாம்பு பின்னித் தழுவினாற்போல நெருங்கிக் கட்டியணைத்தல்; அங்ஙனம் அணைத்தாற் போலப் பாதுகாத்தல்.

கட்டாயம் ;

கட்டு = செலுத்து ; ஆயம் = வரி.
கட்டாயம் = வரி செலுத்தல் போற் கண்டிப்பு.

ஏராளம் :

ஏர் = கலப்பை : ஆள் + அம் = ஆளம் = ஆளின்தன்மை
ஏராளம் = உழவன் வருவாய் போல் மிகுதியாய் இருத்தல்.

---

நன், முதனை (அ.நி), (வழி) ஊமங்கலம், தென்னார்க்காடு''
(தமிழ்ச் சுட்டு 2 ; தமிழாக்கம் 49)

1. செந்தமிழ்ச் செல்வி 20 : 108.

உழவன் நேரடியாயும் மிகுதியாயும் உணவுப் பொருளை விளை வித்தலின் பொருள் மிகுதி ஏராளமெனப்பட்டது. அம் மிகுதி யினாலேயே உழவன் வேளாண்மை செய்து வேளாளனாயினான்.
'' வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான் ''

தாராளம் :

தார் = சேனை ; ஆளம் = தன்மை.
தாராளம் = படை மறவர் போல், விருப்பம் போலப் பிறர் பொருளைக் கையாடுதல் அல்லது வழங்கல்.
இன்றும் படைமறவர் பிறர் பொருளை மனம் போற் பயன்படுத்து தலும் கொள்ளையடித்தலும் காண்க.

சிங்கியடித்தல் : சிங்கி = தாளம்; அடித்தல் = தட்டுதல்

சிங்கியடித்தல் = இரப்போன் தாளம் தட்டி இரப்பதுபோல் திண்டாடுதல்.
தாளக் கருவியை உருவக (ரூபக) தாளத்தில் தட்டினால் சிங்சீயான் என்ற ஒலியெழும். இதனால் தாளக் கருவிக்குச் 'சிங்கி'யென்றும் 'சீயான்' என்றும் இருபெயருண்டு.

தாயமாடல் :

தாய் + அம் = தாயம் = தாயினின்று பெறும் உரிமை,
ஆடல் = விளையாடல்
தாயமாடல் = சீட்டுப் போடுவதுபோல் முத்தும் பலகறையும் போட்டு உடன் பிறந்தார் பாகம் பிரித்தல்; முத்தினாலும் பலகறை யினாலும் விளையாடிப் பிறர் உரிமையைப் பெறுதல் அல்லது பறித்தல். தாயமாடிக் காலத்தை வீண் போக்குவதுபோல் வேலை செய்யாமற் காலங்கழித்தல் அல்லது தாழ்த்தல். 'வேலை தாயமாடுகிறது' என்னும் வழக்கை நோக்குக.

மினுக்கிடுதல் :

> மினக்கிடுதல் > மெனக்கிடுதல்,
மினுக்கிடுதல் = அலங்கரித்தல். அலங்காரத்திலேயே கருத்தா யிருந்து வேலையைக் கைநெகிழவிடல். 'வேலை மினக்கிடுதல்' என்னும் வழக்கையும் 'தேவடியாள் சிங்காரிக்குமுன் தேர் நிலைக்கு வந்து விட்டது' என்னும் பழமொழியையும் நோக்குக.

இத்தொடர்ச் சொல்லாய்வு சொற்பொருளாராய்ச்சி என்னும் பெயரால் ஒருகட்டுரையாகச் செந்தமிழ்ச் செல்வியில் வெளிப்பட்டதாகும். இன்னொரு சொல்லாய்வுக் கட்டுரையைச் சூழலுக்கு உட்பட்டுப் பாவாணர் வரைகின்றார் என்பதை அடுத்துக் காணலாம்.

**'திருப் போராட்டம்'**

2. "மகா-ா-ாஸ்ரீ என்பது நீளமானது. அலுவலகக் கடிதங்களில் ஸ்ரீ என்று மட்டும் இருந்தால் போதும்" என 1942-இல் அந்நாள் சென்னை, பொதுப்பணித்துறை ஆணைபிறப்பித்தது. அவ்விடத்தில் 'திரு'வைப் பயன்படுத்த வேண்டுமெனத் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் வேண்டிக்கொண்டது. 7. 3. 42-இல் பொதுப் பணித்துறை ஓர் அறிக்கை விடுத்து, 15. 4. 42-க்குள் பொதுமக்கள் தங்கள் கருத்தை எழுதி அனுப்புமாறு கேட்டிருந்தது.

2. 1. ஸ்ரீ-யும் திருவும் போராட்டக் களத்தில் புகுந்தன. 'இது தமிழ் நாட்டிலா?' என்று எவருக்கும் வியப்பு உண்டாகாது! ஏனெனின் தமிழர் அத்தகு தமிழ் உணர்வுடையவர் ஆயினரே! இன்றும்தான் அப்படி, அப்படியேதானே!

திருவை எதிர்த்துத் தமிழறிஞர் இரா. இராகவஐயங்கார் எழுதினார். தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதையர் எழுதினார். இவர்களுமா திருவை எதிர்த்தனர்? உண்மை அது தான்!

திரு. இராகவ ஐயங்கார் சுதேசமித்திரன் இதழில், 'திரு' என்ற சொல் 'ஸ்ரீ' என்பது போலச் செவிக்கு இன்பம் பயவாது என்றும் திரு என்னும் அடை யாண்டும் உதவாது என்றும் மறுத்தெழுதினார்.[1]

திரு என்பதே தொன்று தொட்ட வழக்கு என நாவலர் ச. சோம சுந்தர பாரதியாரும்,[2] மங்கல மொழி 'திரு' எனப் பண்டித மணி கதிரேசச் செட்டியாரும்,[3] 'திருவின் பெருமை' என நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரும்,[4] இவ்வாறே பிறர் பிறரும் எழுதினர். இத் திருப் போராட்டத்தில் பாவாணர் சொல்லாய்வும் பங்கு கொண்டது.

2.2. திருவின் முன்மையையும் ஸ்ரீ யின் பின்மையையும் சான்றுகள் காட்டியும், திருவுக்கும் ஸ்ரீ க்கும் உரிய பொருணிலை, இத்தகு விரிவும் சுருக்கமும் உடையவை என விளக்கியும் திருவைத் 'தேவியல், மகவியல்' என ஈரியல்களும் அடைமொழியாகக் கொண்டியலும் சிறப்பையும், திருவின் வேர் மூலத்தையும் விளக்கித் 'திருவென்னும் சொல் தென் சொல்லே' எனக் கட்டுரை வரைந்தார்.[5]

---

1. செந்தமிழ்ச் செல்வி : 19: 602
2. ஷை ஷை 19: 601
3. ஷை ஷை 19: 603
4. ஷை ஷை 19: 560
5. ஷை ஷை 20: 243.

2.3. திரு என்பது தில் என்னும் வேரடியாகப் பிறந்து திரட்டப் படுவது அல்லது ஈட்டப்படுவது என்னும் பொருளது. ஒப்பு நோக்க : தேட்டு (தேடப்படுவது) = செல்வம்.

*தில் > திர் > திரள் > திரளை > திரணை*
*தில் > திர் > திரு*
*தில் > திர் > திரம் > திறம் > திறன் > திறல்*

இதனை விரித்தெழுதிய பாவாணர் தில் என்னும் வேர்க்கும் மூலவேர் ஒன்றுளது. அதை இங்கு விரிப்பிற் பெருகும்; சுருக்கின் விளங்காது. அதன் விளக்கத்தை எனது மொழி நூலின் முதன் மடல இரண்டாம் பாகத்திற் கண்டு கொள்க என்கிறார்.

2.3.1. அவர் சுட்டும் திருவின் தேவியல் மகவியல் சுருக்கம் :

### *1.* தேவியல்

| | | |
|---|---|---|
| **க. தெய்வம்** : | திருமகன், திருமகள், | திருமால் திருமடந்தை. |
| நூல் | : திருக்கடைக் காப்பு, | திருக்குறள் |
| ஊண் | : திருக்கன்னலமுது, | திருப்படி மாற்று |
| அணி | : திருச்சுண்ணம், | திருநீறு |
| பொருள் | : திருச்சின்னம், | திருமரம் |
| இடம் | : திருச் செந்தூர், | திருநகர் |
| காலம் | : திரு நாள், | திருவாதிரை |
| சினை | : திருக்கண், | திருச்செவி |
| குணம் | : திருக்குறிப்பு, | திருவருள் |
| தொழில் | : திருக்கலியாணம், | திருக்கார்த்திகை |
| **உ. அடியார்** | : திருக்கூட்டம், | திருத்தொண்டர். |

### 2. மகவியல்

க. வேத்தியல் : திருமறு, திருமுகம்

உ. பொதுவியல் : திருநிலைக்கால், திருமணம்

2.3.2. திருவென்னும் சொல்லையே ஸ்ரீ எனத் திரித்துக் கொண்டதைப் பாவாணர் சுட்டினார்.

திரு என்பதை ஸ்ரீ என்று திரித்ததனால், திருமான் என்னும் அடையை ஸ்ரீ மான் என்று திரிப்பர் வடமொழியாளர். அதனுள் மான் என்னும் ஈற்றை 'மத்' என மற்றும் திரித்து 'ஸ்ரீமத்' 'ஸ்ரீமதி' என்பவற்றை முறையே ஆண்பால் பெண்பால் அடைமொழிகளாக முழு வடவடிவில் வழங்குவர். திருமகன் திருமான் என்னும் ஆண்பாற்

சொற்கட்குத் திருமகள் திருமாட்டி என்பவை தமிழில் முறையே பெண் பாலாகும். பெருமான் என்னும் ஆண்பாற் சொற்குப் பெருமாட்டி என்பது பெண்பாலாதல் காண்க.

2.3.3. ஸ்ரீ என்னும் வடசொல் வடிவைத் தமிழில் சீ எனச் சிதைத்துத் திருமான் திருமாட்டி என்பவற்றைச் சீமான் சீமாட்டியென எழுதுவது கோழிக் கோடு என்பதை 'Calicut' என்னும் ஆங்கில வடிவு வாயிலாய்க் 'கள்ளிக் கோட்டை' என்றெழுதுவதும், காளிக் கோட்டம் என்பதை 'Calculta' என்னும் ஆங்கில வடிவு வாயிலாய்க் 'கல்கத்தா' என்றெழுதுவதும் போன்ற அறியாமையேயாகும். இதனால், சீகா ளத்தி என்னும் வடிவினும் திருக்காளத்தி என்னும் வடிவே தக்கதாகும் என அறிக.

இனி, திருவென்னும் சொல்லையன்றிச் சிறுவென்னும் சொல்லை யும் ஸ்ரீ எனத் திரித்துள்ளனர் வடமொழியாளர். பெண்டிர்க்குச் சொந்தமாகவுள்ள சிறு செல்வத்திற்கு அல்லது செல்வத்திற்குச் 'சிறுபாடு' என்றும் 'சிறுதனம்' என்றும் பெயர். 'சிறுதனம்' என்பது 'ஸ்ரீதனம்' 'சீதனம்' எனத் தவறாக வழங்குகின்றது.[1]

சொல்லாய்வு என்று வந்து விட்டால் 'ஆழமுழுகி முத்தெடுப்பவர்' அல்லரோ, பாவாணர்!

### 3. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் :

இவ்வாறு ஆய்வுக் கட்டுரைகள் பலப்பல இருப்பினும் நூல் என்னும் அளவில் சொல்லாய்வு தொடர்பாக வெளி வந்தது சொல்லா ராய்ச்சிக் கட்டுரைகள் என்பதாம்.

சொல்லாராய்ச்சி நூல் வெளி வருவதன் நோக்கத்தை முகவுரைப் பகுதியிலே சுட்டுகின்றார் பாவாணர் :

3.1. எல்லா மொழிகளும் இயற்கையாய் எழுந்தவை என்றும் கடவுளைப் போல் தொடக்கமற்றவை என்றும் ஒன்றோடொன்று தொடர்பற்றவை என்றும், சில மொழிகள் தேவ மொழி என்றும், தேவ மொழியில் வழிபாட்டை நடத்துவது கடவுட்குகந்தது என்றும், தமிழ் வடமொழியினின்று வந்தது அல்லது அதனால் வளம் பெற்றது என்றும் பலபேதைமைக் கருத்துக்கள், பல தமிழர் உள்ளத்தில் வேரூன்றி யிருப்பதால் அவற்றைப் பெயர்த்து அவர்களை மொழிநூற்

1. செந்தமிழ்ச் செல்வி. திருவென்னும் சொல் தென் சொல்லே 20 : 247-8.

கல்விக்கு பண்படுத்தும் வண்ணம் இச் சொல்லாராய்ச்சி நூல் வெளி வருகின்றது.

3.2. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் ஆங்கிலத்தில் திரெஞ்சுக் கண் காணியார் (Trench) எழுதியுள்ள சொற்படிப்பு (On the study of words) என்னும் கட்டுரைத் தொகுதியின் போக்கைத் தழுவி எழுதப் பெற்றது என்பதையும் முகவுரையில் பாவாணர் சுட்டுகின்றார்.

3.3. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகளின் உள்ளடக்கம் பத்துப் பிரிவுகளை யுடையது. அணியியற் சொற்கள், வரலாற்றுச் சொற்கள், மெய்ப் பொருட் சொற்கள், ஒரு பொருட் பல சொற்கள், பல பொருள் ஒரு சொற்கள், வழக்கற்ற சொற்கள், பொருள் திரி சொற்கள், ஒழுக்க வியற் சொற்கள் என்பனவும், தமிழ்ச் சொல்வளம், சொற் குடும்பமும் குலமும் என்பனவுமாம்.

**அணியியற் சொற்கள் :**

3.3.1. பொருளை விளக்குவதும் அழகு படுத்துவதுமே அணியின்நோக்கம் என்றும், செய்யுளிற் போன்றே உரைநடையிலும் அழகிய கருத்துக்கள் அமையும் என்றும் உரை நடைக்கும் அணி உரித்து என்றும் ஒரு கருத்தைத் தெரிவிக்க ஒரு சொற்றொடரே வேண்டு மென்னும் யாப்புற வில்லை என்றும் ஒரு சொல்லாலும் ஒரு கருத்தைத் தெரிவிக்கலாம் என்றும்[1] திட்டப்படுத்தும் பாவாணர், ''மகனைக் 'கொம்பன்' என்றும், மகளைக் 'கொம்பு' என்றும் இருவரையும் பொதுப்படக் 'குலக் கொழுந்து' என்றும் கூறுவது வழக்கம். பெற்றோர் மரம் போல்வராயின், பிள்ளைகள் கிளைகளும் கொழுந்தும் போல்வர். ஒரு மரத்தின் அடியில் முளைக்கும் முளையைப் போன்று மகன் இருத்தலின் அவனுக்குக் 'கான்முளை' என்றும் பெயர். பல குடும்பங்கள் சேர்ந்த ஒரு குடியை ஒரு மரமாகக் கொள்ளின், அக் குடும்பங்கள் அதன் கிளைகளைப் போன்றிருத்தலால் இனத்திற்குக் கிளையென்றும், இனத்தார்க்குக் கிளைஞர் என்றும் பெயர்''[2] என அணியியற் சொற்களில் மக்கள் உறவும் தொடர்ச்சியும் என்னும் உட்பகுதியில் விளக்கியுள்ளார். இவ்வாறு பதினான்கு உட்பிரிவுகளைக் கொண்டது அது.

**வரலாற்றுச் சொற்கள் :**

3.3.2. நாட்டின் வரலாற்றை அறியப் புத்தகமும் செய்யுளுந் தான் வேண்டும் என்பதில்லை. அந்நாட்டு மொழி அல்லது சொற்கள்

---

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 1.
2. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 3.

கூட வரலாறு உரைப்பனவாம் என்பதை விளக்குவது வரலாற்றுச் சொற்கள் என்னும் பகுதியாம்.

ஞாலத்திலுள்ள நிலமெல்லாம் மரம் செடி கொடி படர்ந்து ஒரே சோலையாய்த் தோன்றியமையால் உலகுக்குப் 'பொழில்' என்னும் பெயர் வந்தது[1] என்பதையும், மரவுரியாடைக்குச் 'சீரை' என்பது பெயர். அப்பெயரே சீலை, சேலை எனத் திரிந்து பருத்தியாடை முதலியவற்றைக் குறிக்கிறது என்பதையும், புலால் உண்பவர் ஆடு கோழி முதலிய உயிர்களைக் கொல்வதை ஆடு கொல்லுதல் கோழி கொல்லுதல் என்னாது 'ஆடடித்தல்' 'கோழியடித்தல்' என்பது மக்கள் குறிஞ்சி நிலையில் விலங்குகளையும் பறவைகளையுங் கல்லாலும் வணரி (வளை தடி) யாலும் அடித்துக் கொன்றதை நினைவூட்டும்[2] என்பதையும், பழங்காலத்தில் 'சம்பளம்' கூலமும் உப்புமாகக் கொடுக்கப்பட்டது. கூலம்-தானியம்- சம்பும் (சம்பா நெல்) அளமும் சேர்ந்தது சம்பளம் ஆயிற்று[3] என்பதையும் பிறவற்றையும் வரலாற்றுச் சொற் பகுதியில் விளக்கியுள்ளார். வரலாற்றுச் சொல்லமைதி கொண்டு அவற்றைப் பதினாறு பகுப்புகளில் அமைத்துக் காட்டியுள்ளார்.

**மெய்ப் பொருட் சொற்கள் :**

3.3.3. ''இயற்கையாய் எல்லாப் பொருள்களும் உயிர், உயிரில்லது, உயிருள்ளது என மூவகைப் பட்டியிருத்தலைக் கண்டு, அவற்றை முறையே உயிர், மெய், உயிர்மெய் என அழைத்தனர்''

''உடம்பை உய்ப்பது அல்லது செலுத்துவது உயிர். உள்ளிருக்கும் உயிரை மேலாகப் பொதிந்திருக்கும் உடம்பு மெய்; உயிரையுடைய மெய் உயிர்மெய்''[4].

- இன்ன சொல் வழக்குகளும், இவற்றை எழுத்துக்குப் பெயர்களாக அமைத்த இலக்கணக் குறியீட்டுச் சிறப்பையும் விளக்கி மெய்ப் பொருட் சொற்கள் என்னும் பகுதியை விளக்குகிறார். இவ்வண்ணமே 'வினை' என்பதையும் இருபாலும் இணைத்து[5] வியப்புறுத்துகிறார்.

---

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 17.
2. ஷை ஷை ஷை 19.
3. ஷை ஷை ஷை 22.
4. ஷை ஷை ஷை 30.
5. ஷை ஷை ஷை 37.

### 3.3.4. ஒருபொருட் பல சொற்கள்:

ஒரு பொருட் பலசொற்கள் என்னும் பகுதியை 60 உட்பிரிவு களில் விளக்குகின்றார்:

மாலைவகை என்பது அதன் பதினெட்டாம் உட்பிரிவாம்;[1]

| | | |
|---|---|---|
| கண்ணி | — | இவ்விருபூவாக இடைவிட்டுத் தொடுத்த மாலை. |
| தார் | — | கட்டி மாலை; |
| தொங்கல் | — | தொங்கல் விட்டுக் கட்டிய மாலை; கதம்பம் அல்லது கத்திகை—பலவகைப் பூக்களால் தொடுத்த மாலை. |
| படலை | — | பச்சிலையோடு மலர்விரவித் தொடுத்த மாலை. |
| தெரியல் | — | தெரிந்தெடுத்த மலராலாயமாலை. |
| அலங்கல் | — | சரிகை முதலியவற்றால் விளங்கும் மாலை. |
| தொடலை | — | தொடுத்த மாலை. |
| பிணையல் | — | பின்னிய மாலை. |
| கோவை | — | கோத்த மாலை. |
| கோதை | — | கொண்டை மாலை. |
| சிகழிகை | — | தலை அல்லது உச்சி மாலை: |
| சூட்டு | — | நெற்றி மாலை. |
| ஆரம் | — | முத்து மாலை. |

### 3.3.5. தொகுதிப் பெயர்கள்:

தொகுதிப் பெயராகச் சுட்டுவனவெல்லாம் கலைச் சொற்களாய் விளங்குகின்றன:

| | | |
|---|---|---|
| அம்பலம் | — | Village Assembly |
| அவை | — | Audience |
| அவையம் | — | Jury |
| ஆசிடை | — | Association |
| ஆயம் | — | Assembly |
| இல் அல்லது இல்லம் | — | House |
| கடிகை | — | Village council |
| கணம் | — | Society, host, body |
| கழகம் | — | Academy |
| களம் | — | Field |
| களரி | — | Institute |
| குழு | — | Faction, Committee |

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 43.

| | | |
|---|---|---|
| குழூஉ | — | Class |
| குழுமம் | — | Guild |
| குழாம் | — | Group |
| குழும்பு | — | Company |
| கும்பு | — | Gang |
| கும்பல் | — | Crowd |
| குறி | — | Village council |
| பெருங்குறி | — | Village Assembly |
| கூளி | — | Multitude |
| கூட்டம் | — | Meeting, gathering |
| திரள் | — | Mass |
| தொழுதி | — | Herd, Flock |
| தொகுதி | — | Set, Aggregation |
| தொகை | — | Collection, sum |
| நெருள் | -- | Big Crowd |
| பண்ணை | — | Farm, a bevy of Ladies |
| பொதியில் | — | Public hall |
| மக்கள் | — | People |
| மந்தை | — | ஆனிரை, மானிரை |
| மன்று, மன்றம் | — | பொதுவிடம், அம்பலம், அறங்கூறவையாம் |
| மாந்தர் | — | Human beings |
| மன்பதை | — | Humanity Mankind |
| வகுப்பு | — | Class |
| தானை, சேனை | — | Army |
| படை | — | Devision Force |
| பஞ்லம் | — | Company |
| கணகம் | — | Battalion |
| மன்பதை | — | Regiment |
| தண்டு | -- | Troop |
| தார் | — | போர்ப்படையின் முன்னணி |
| கூழை | — | போர்ப்படையின் பின்னணி |
| தூசு, தூசி | — | கொடிதாங்கிச் செல்லும் கொடிப்படை.[1] |

### 3.3.6 பல பொருள் ஒரு சொற்கள்:

பலபொருள் ஒரு சொல் என்பது ஒருபொருட் பல சொல்லுக்கு எதிராகும். வேழம் என்பது கரும்பு, மூங்கில், யானை எனப் பலபொருள் தருதலின் பலபொருள் ஒரு சொல்லாம்.

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 47.

பலபொருள் ஒருசொல் இருவகையால் ஏற்படுவதைச் சுட்டுகிறார் பாவாணர்: ஒன்று, பலபொருட்கும் சிறப்புச் சொல் உண்டாயிருப்பது இரண்டு, அவையில்லாதிருப்பது.[1]

''கரும்பு மூங்கில் யானை என்னும் மூன்று சொல்லும் இருக்கும்போது அவற்றுக்குப் பொதுவாக வேழம் என்னும் சொல் தோன்றுவது சிறப்புச் சொல் உள்ளநிலை. அம்மூன்றும் இல்லாத போது அது தோன்றுவது சிறப்புச்சொல் இல்லாத நிலை. இவற்றுள் முன்னது மொழியின் பண்பாட்டையும், பின்னது அஃதின்மையையும் உணர்த்தும்''[2] என்கிறார் பாவாணர்.

### 3.3.7. வழக்கற்ற சொற்கள்:

நீண்ட காலமாக உறவாடாதமக்கள் அயலாராகத் தோன்றுவது போன்றே நீண்ட காலமாக வழங்காத சொற்களும் அருஞ்சொல்லாய்த் தோன்றுகின்றன'' என்று வழக்கற்ற சொற்களைச் சுட்டும் பாவாணர், ''உவகை களிப்பு மகிழ்ச்சி என முத்தென் சொற்கள் இருக்கவும் அவை வழக்கற்று ஆனந்தம் சந்தோஷம் ஜாலி (jolly) குஷி முதலிய அயற்சொற்களும், உண்மை வாய்மை மெய்ம்மை என்னும் முத்தென்சொல் இருக்கவும், அவற்றுக்குப் பதிலாக சத்தியம் நிஜம் வாஸ்தவம் என்னும் வடசொற்களும், இறை பகுதி வரி முதலிய பல தென் சொற்கள் இருக்கவும், கிஸ்து என்னும் உருதுச் சொல்லும் இன்னும் இவைபோன்ற எத்துணையோ பலவும் வழங்கி வருவதால் தமிழ் தளர்ந்ததோ, வளர்ந்ததோ? நடுவுநிலையும் பகுத்தறிவுமுள்ள அறிஞர் கூறுவாராக''[3] என்கிறார்.

மேலும், தமிழ்ப் பொதுமக்கள் வாயினின்றும் சொல் என்று வராது வார்த்தை என்று வருவதற்கும், ஆண்டு என்று வராது வருஷம், என்று வருவதற்கும் குலம் என்று வராது சாதி என்று வருவதற்கும் எது காரணம்? தமிழ்ச்சொல் வழக்கற்றமையோ? அதன் தகுதியின்மையோ?[4] என வினவுகின்றார்.

பலதமிழ்ச் சொற்கள் வழக்கற்றமைக்குக் காரணம் அயலாரால் புகுத்தப்பட்ட ஏமாற்றுக் கொள்கை ஆதலின், அவற்றைப் புதுக்குதல் தமிழர் கடனும் முறைமையுமாம் என்று வலியுறுத்தும் பாவாணர், ''திருவாசகம் இன்றில்லையேல் சாழல் தெள்ளேணம்

---

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக்: 76.
2. ஷை. பக். 76.
3. ,, ,, 83.
4. ,, ,, 83.

முதலிய சொற்களை வேறெங்குக் காணமுடியும்? திருவாசகத்திலும் திருவாசகமான எத்துணை அருநூல்களும் பெருநூல்களும் இறந்து விட்டன''[1] என்று இரங்குகின்றார்.

### 3.3.8. பொருள் திரிசொற்கள்:

ஒவ்வொரு பொருட்கும் மக்கள் உள்ளத்தில் எழும் ஒவ்வொரு கருத்திற்கும் ஒவ்வொரு சொல் தோன்றுவது மொழிவசதிக்கு இன்றியமையாதது. ஆயினும் ஒவ்வொரு கருத்திற்கு ஒவ்வொரு புதுச்சொல் அமைவது இயலாது. ஆதலால் பழஞ் சொற்களினின்றே புதுச் சொற்கள் திரித்துக் கொள்ளல் வேண்டும். கருத்துக்கள் ஒன்றோடொன்று தொடர்புற்றிருப்பதால் அவற்றைக் குறிக்கும் சொற்களும் தொடர்புற்றிருப்பது பொருத்தமே என்னும் பாவாணர், பொருள் திரிசொற்களை உயர்பு, இழிவு, பொது, வரையறுப்பு, விரிப்பு என ஐந்நிலைகளில் ஆய்கின்றார்.[2]

உயர்வு : களிப்பு என்னுஞ் சொல் முதலாவது கள்ளுண்டலையே குறித்து பின்னர் கள்ளுண்டு மகிழ்தலையும் அதன் பின்னர் இன்பத்தால் மகிழ்தலையும் குறித்தது.

இழிபு : கடவுள் என்னும் முழுமுதற் கடவுளைக் குறித்தபெயர், பின்னர்க் கடவுட்டன்மையடைந்த முனிவர்களை இல்லறப் பொதுமக்கள் அழைக்க ஆயது.

பொது : பக்குவம் செய்யப்படாத மூலிகை பச்சையாய் இருப்பதால் பச்சை என்னும் சொல், பக்குவம் செய்யப்படாத அஃதாவது அடக்கிப்பேசாத இடக்கரைக் குறிக்கும். 'பச்சைப்பேச்சு' பச்சை பச்சையாய்ப் பேசுதல் என்பன உலகவழக்கு.

வரையறுப்பு : கறி என்னும் பொதுச் சொல்லாம் ஊன்கறியை மட்டும் உணர்த்துவது.

விரிப்பு : கைம்மை நோன்பு நோற்றவளை மட்டும் குறிக்கவேண்டிய கைம் பெண் (கைம் பெண்டு, கைம் பெண்டாட்டி) என்னும் பெயர் இன்று கணவனை இழந்த பெண்டிர் எல்லார்க்கும் பொதுப் பெயராய் வழங்குவது.

### 3.3.9. ஒழுக்கவியற் சொற்கள் :

ஒழுக்கவியற் சொற்களைப் பதினேழ்வகைப் பாகுபாட்டில் உரைக்கிறார் பாவாணர். அவற்றுள் பெரியோரைச் சுட்டாமை என்பது பதினேழாவது.[3]

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 89.
2. ,, ,, 90.
2. ஷை பக். 113.

பெரியோரைக் கையினாற் சுட்டுவது அவமதிப் பென்று கருதி அங்ஙனம் சுட்டுவதில்லை. சுட்ட நேர்ந்த போதும் கையாற் சுட்டாது சொல்லால் சுட்டுவது வழக்கம். அவ்வாறு சுட்டும் போதும் அவர்கள் இவர்கள் என்னும் படர்க்கைச் சொல்லால் அன்றி நீர் நீங்கள் என்னும் முன்னிலைச் சொல்லால் சுட்டக் கூடாது என்று கொண்டு தாங்கள் என்னும் படர்க்கைச் சொல்லாற் சுட்டுவர். அதுவும் நாளடைவில் முன்னிலைத் தன்மையடைந்து விட்ட தென்றும் மிகப் பெரியோர்க்கு அச்சொல் போதாதென்றும் கருதி மடத் தம்பிரானரை அங்குத்தை என்னும் படர்க்கைச் சொல்லால் முன்னிலைப்படுத்திக் கூறுவது சிவமடமரபு. அங்குத்தை (அங்குற்றை) என்பது அவ்விடம்.

### 3.3.10. தமிழ்ச் சொல்வளம் :

தமிழ்ச் சொல்வளம் என்னும் பகுதியில் பயிர்வகைச் சொற்களை மட்டும் பகுத்துக் கொண்டு ஆராய்கிறார் பாவாணர். இப்பகுப்பு மட்டும் நாற்பத் தேழுவகையாம்.

பயிர்வகை :

பூசணம் அல்லது பூஞ்சணம் (பூஞ்சாளம்)—நொந்த சோற்றிலும் ஈரமரத்திலும் தோன்றும் நுண்பாசி.
பாசம்—நீர்மேலும் ஈரமுள்ள இடத்திலும் தோன்றும் பசுமையான நுண்பயிர்
பாசி—நீரில் அடிவரை படர்ந்துள்ள பாசம்.
காளான்—ஈரமுள்ள இடத்தில் குடைபோல் தோன்றும் பயிர்வகை.
புல்—அறுகு குசை போன்றவை.
பூண்டு—வெங்காயம் வெள்ளைப் பூண்டு போன்றவை.
செடி—மிளகாய்ச் செடி, கத்தரிச் செடி போன்றவை.
கொடி—அவரைக் கொடி பாகற்கொடி போன்றவை.
புதர்—அடர்ந்த குத்துச் செடி
பயிர்—நெல் கம்பு கேழ்வரகு போன்றவை.
மரம்—மா புளி போன்றவை.[1]

### 3.3.11. சொற் குடும்பமும் குலமும்:

சொற்குடும்பமும் குலமும் என்னும் பெயரிய இறுதிக் கட்டுரையில் மக்களைப் போன்றே சொற்களும் குடும்பம் குடும்ப மாகவும் கூட்டம் கூட்டமாகவும் இயல்வதை ஓர் எடுத்துக் காட்டால் விளக்குகிறார் :

---

1. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக். 70.

உல் என்பது வளைவைக் குறிக்கும் ஒரு வேர்ச் சொல்.
உல்—உலவு. உலவுதல் = வளைதல், சுற்றுதல், திரிதல்.
உல்—உலா. உலா = சுற்றித்திரிதல், அரசன் நகரை வலமாகச் சுற்றுதல், அதைப் பாடிய பனுவல்.
உலவு—உலாவு, உலா = உலாத்து.
உல்—உல, உலத்தல் = வளைதல், உருளுதல், சுழல்தல்.
உல—உலம் = வளைவு, உருட்சி, திரட்சி, சுழற்சி.
உலம் + வா = உலமா, உலம்வரு—உலமரு.
உலமருதல் = சுழலுதல்; உலமா—அலமா.
உலம்—உலக்கை = உருண்டு திரண்ட தடி.
உலவு—உலகு—உலகம் = உருண்டையாயிருப்பது.
உல்—உர்—உரவு = உலவு.
உர்—உருள்—உருளி, உருளை, உருண்டை.
உருள்—உருட்டு. உருண்டை—உண்டை.
உருள்—உருளை—உருடை—ரோதை (கொ.)
உல்—உழல். உழலுதல் = சுழலுதல், வருந்துதல்

எனவேர் விரி காட்டி, உல் என்பது குல், சுல், துல், நுல், புல், முல் என்னும் வேர்க்குடும்பங்களை விளக்கி நிறைவிக்கிறார்.

3.3.12. சொல்லாய்வின் பல்வகைத் துறைகளையும் சுட்டிக் காட்டிச் சொல்லாய்வாளர்க்கு வழிகாட்டும் வைப்பகம் 'சொல்லா ராய்ச்சிக் கட்டுரைகள்' என்னும் பெயரிய நூல் எனின் தகும்.

சொல்லாய்வு இவ்வாறு இருக்கச், சொல்லின் வேராய்வு நூலாக வெளிப்பட்டது 'வேர்ச் சொற்கட்டுரைகள்' என்னும் நூல் என்பது, அதன் பெயரானே விளக்கமுறும். அதனை அடுத்துக் காண்போம்.

## 11. வேர்ச் சொற் கட்டுரைகள் :

### இருவகை வேர்ச் சொற்கள்:

1. சொல்லாய்வு - சிறப்பு என்னும் பகுதியிலும், சொல்லா ராய்ச்சிக் கட்டுரைகள் என்னும் பகுதியின் இறுதியிலும் வேர்ச் சொல் பற்றிய சில குறிப்புகளைக் கண்டுள்ளோம். முற்றாக வேர்ச் சொல் லாய்வே பொருளாக வெளிப்பட்ட நூல் 'வேர்ச் சொற் கட்டுரைகள்' என்பதாம்.

1.1. வேர்ச் சொற் கட்டுரைகள் உயிர் முதல் வேர்ச் சொற்கள் உயிர்மெய் முதல் வேர்ச் சொற்கள் என்னும் இரண்டு பகுதிகளிலும்

முறையே பதினைந்தும் பதினாறுமாக முப்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. இவை, செல்வியில் கட்டுரையாக வெளிவந்து பின்னே நூல் வடிவு கொண்டன[1] இவையன்றியும், ''தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்'' என்னும் தலைப்பில் பதினொரு கட்டுரைகளும் வெளிவந்தன.[2] இவையும் வேர்ச் சொற் கட்டுரைகள் என்னத் தக்கனவேயாம்.

1.2. இக்கட்டுரைகளுள் எடுத்துக் காட்டாக 'அர்' என்னும் வேர்ச் சொல் கட்டுரையை[3] மட்டும் காண்போம். இங்கு, எடுத்துக் காட்டு விளக்கம் ஆயவை விலக்கப்பட்டுள என்க.

அர் — அறுத்தற் கருத்துவேர்.
உல் - உர் - அர்.

ரகரம் றகரம் இரண்டனுள்ளும் காலத்தால் முந்தியது ரகரமே. அதன் வல்வடிவே றகரம். றகரம் தோன்றாத முது பண்டைக் காலத்தில் அதன் தொழிலை ரகரமே ஆற்றிவந்தது.
(எ-டு)

முரிதல் — முறிதல் = வளைதல்.
பாரை = பாறை.
அர் — அரம் = அராவும் கருவி.
அர்—அரா—அராவு.அராவுதல் = அரத்தால் அறுத்துத் தேய்த்தல்.
அரம் — அரம்பு — அரம்பம் = மரமறுக்கும் ஈர்வாள்.
அரம்பு — அரம்பணம் = வெற்றிலை நறுக்குங் கருவி.
அர — அரம் போல் கூரிய பல்லை உடைய பாம்பு.
அர — அரா. அர — அரவு — அரவம் = பாம்பு.
அரங்குதல் = அறுபடுதல், அம்புபோல் தைத்தல், அழுந்துதல், தேய்தல், வருந்துதல், உருகுதல். அழிதல்.

அரங்கு = (அறுக்கப்பட்ட கட்டிப் பகுதியாகிய) அறை, அறை போன்ற நடன அல்லது நாடகமேடை, நாடகசாலை, சொற்பொழிவு அல்லது நூலுரைப்புமேடை, அவை, பாண்டி அல்லது சில்லாக்கு விளையாட்டிற்குக் கீறிய கட்டம், கவறாட்டிற்கு வரைந்த கட்டம், கறவாடும் இடம்.

அரங்கு — அரங்கம் = நாடகசாலை, கவறாடும் இடம், படைக்கலம்

1. செந்தமிழ்ச் செல்வி சிலம்பு : 39, 40, 44, 45, 46, 47, 49, 50.
2. ஷை ஷை : 53, 54.
3, வேர்ச் சொற்கட்டுரைகள் : பக். 8.

பயிலும் இடம், போர்க்களம், அவை, ஆற்றிடைக்குறை, திருவரங்கம்.

அரங்கு — அரக்கு (பிறவினை).

அரக்குதல் = தேய்த்தல், சிதைத்தல், அழுத்துதல், வருத்துதல், கிளைநறித்தல், வெட்டுதல், குறைத்தல், முழுதுமுண்ணல்.

அரக்கு — அரக்கன் = அழிப்பவன்.

அரப்பு = அழுக்குத் தேய்க்கும் கட்டி அல்லது தூள்.

அரம்பு = குறும்பு. அரம்பன் = குறும்பன்.

அரமகள் = வருத்தும் பெண் தெய்வம், தேவமகள்.

அரம்பையர் = தேவமகளிர். அரளுதல் = அஞ்சுதல்.

அரள் — அரட்டு — அரட்டன் = துன்புறுத்துவோன்.

அரட்டமுக்கி = துன்புறுத்தும் குறுநில மன்னனை அடக்கும் செங்கோலரசன்.

அரற்றுதல் = துன்பத்திற் கதறுதல்.

அர் — அரி — அரிதல் = பொடியாய் நறுக்குதல் அல்லது சிறிய பொருளை அறுத்தல்.

அரிதாள் = கதிர் அறுத்த நெல்தாள்.

அரிவி — இருவி = அரிதாள்.

அரிவாள் = சிறிதாய் அறுக்கும் வாள்வகை.

அரிவாள் மணை = அரிவாள் பதித்த பலகை அல்லது கட்டை.

அரிவாள் முனைப் பூண்டு = அரிவாள் முனையிலுள்ள தேங்காய் திருகி போன்ற இலையுள்ள பூண்டு.

அரித்தல் = அரித் தொழுகுதல், சிறிது சிறிதாய்க் கறையான் போல் அறுத்தல், தினவெடுத்தல், புல்லரித்தல், வெட்டுதல், அழித்தல், கோடரி = கிளையை வெட்டும் வாள். கோடரி — கோடாரி கோடாலி.

அரி, அரிமா = பிறவுயிரினங்களை அழிக்கும் விலங்கு.

அரி = அறுக்கப்பட்டது, அறுக்கப்பட்ட சிறுண்டு, சிறியது, நுண்மை, மென்மை.

அரிநெல்லி = சிறுநெல்லி.

அரிக்குரல் = நுண்ணிதாய் ஒலிக்கும் குரல்.

அரித்தல் = சிறிது சிறிதாய்ச் சேர்த்தல்.

அரிக்கன் = அரிக்கும் சட்டி.

அரிப்பு வலை = அரிக்கும் மீன் வலை.

அரி = பருப்பினும் சிறிய கூல உள்ளீடு.

அரி = அரிசி. அரிசிக்களா = சிறுகளா.

அரிசிப்பல் = சிறுபல்.

அர் — அரு — அருவு — அருவுதல் = மெல்லெனச் செல்லுதல், அறுத்தொழுகுதல், துன்பப்படுத்துதல்.

அருவு — அருவி = மலையுச்சியினின்று மரம் செடி கல் மண்ணை அரித்தொழுகும் நீர்வீழ்ச்சி.

அருவு — அருகு — அருகுதல் = குறைதல், அரிதாதல், அஞ்சுதல், கெடுதல்.

அரு — அருமை = பொருள்முடை, எளிதிற்பெற அல்லது காண முடியாமை, அளவிறந்த பற்று அல்லது மதிப்பு மிகை, பெருஞ்சிறப்பு.

அருமருந்தன்ன -- அருமந்தன்ன — அருமந்த — அருமாந்த.

அருமைக்காரன் = கொங்கு வேளாளர் பூசாரி.

அருகு — அருக்கு = அருமை.

அருக்குதல் = அருமை பண்ணுதல்.

அருக்காணி = அருமை.

அரு — அருந்தல் = விலையுயர்வு, பொருளருமை.

அருந்தற்படி = Dearness Allowance.

அர = அரை. அரைத்தல் = தேய்த்தல், தேய்த்துத் தூள் அல்லது களியாக்கல்.

அரை = அரைவை.

அரு — அரை = அருகிய அல்லது சிறுத்த இடை, உடம்பிற் பாதி, பாதி.

அர் — அறு — அறை = அரங்கு.

அறைக்கீரை = அறை அறையாய் வகுக்கப் பெற்ற பாத்தியில் விளையும் கீரை.

அறை = அறுத்தது, அற்றது, வரம்பிட்டது.

அறு — அறுதி.

அறு — அறவு = நீக்கம்.

அறு — அற்றம் = ஆடை நீங்குகை, விழிப்பிலா நிலை.

அறு — அறுவு = தீர்ந்து போதல்.

அறு — அறுவு — அறுவடை.

அறு — அறுப்பு = கதிரறுப்பு, கைம்பெண்.

அறு—அறுவை = அறுக்கப்பட்ட ஆடை, சவளி.

அறு—அறுகு = அகலப்படர்ந்து ஆழவேரூன்றிப் பயிரை அழிக்கும் புல்; பிறவுயிர்களை அழிக்கும் அரிமா.

அறுகு—அறுகை = அறுகம்புல்

அறுகிடல் = அறுகம் புல்லைத்தூவி, அதுபோல் வேரூன்றிப் படரு மாறு, மணமக்களை வாழ்த்துதல்

அறு—ஆறு = நிலத்தூடறுத்து ஒழுகும் நீரோட்டம், வழி, சமய நெறி, ஆறென்னும் எண்

அறு—அறுவாள் = வலிதாய் அறுப்பது அறுவாள்; மெலிதாய் அறுப்பது அரிவாள்.

1.3. அர் என்றும் வேர் 'அர'—'அரா'—'அரி'—'அரு'-'அறு' என உயிர்த்திரிபடைந்து அறுபத்து நான்கு வகையில் சொல்லுருப் பெற்று நூற்றுக்கு மேற்பட்ட பொருட்கு இடனாகியும் அப்பொருள்கள் எல்லாமும் அடிப்படைக் கருத்தாம் அறுத்தலில் அகலாமல் அமைந்து கிடப்பதை அறிவோர் வேர்ச்சொல் ஆய்வு என்பது சொற்கட்டு வித்தை எனக் கருதார். ஆனால் இந்நுட்பம் அறிதல் அனைவர்க்கும் வாய்க்காது என அமைதலே சால்பாம். தொல் பொருள் ஆய்வாளன் ஒருகல்லைக் கண்ட அளவில் இத்தனை ஆயிரம் ஆண்டுகளின் முற் பட்டது என்றால் அதனை ஏற்றுப் பாராட்டும் உலகம், சொன் மூதறிஞன் ஒருவன் சொல்வேரை அறிவியன் முறைப்படி பொருள் மெய்ப்பித்து வேர்வழி காட்டும் போது அடிப்படையற்ற புனைவு என்பது விந்தையாம்.

**வேர்ச் சொல்மறுப்புக்கு மறுப்பு :**

2. வேர்ச்சொல் ஆய்வை ஏற்றுக் கொள்ளாத சில பேராசிரியர் களின் எள்ளல் மொழி பாவாணர் செவிக்கும் எட்டிய துண்டு. அதனால் வேர்ச் சொல் கட்டுரைகளை எழுதிவந்த போதிலேயே இடைமடுத்துத் தெளிவுறுத்தினார்:[1]

2.1. ''நான் செல்வியில் வெளியிட்டு வரும் வேர்ச் சொற் கட்டுரைகள் சொற்களின் திரிபையே காட்டிக் கொண்டு செல்கின்றன என்றும், அவற்றை யாளும் நெறிமுறைகளை எடுத்துக்கூறவில்லை என்றும் அதனால் அவை அறிவியலின் பாற்பட்டன அல்ல என்றும் சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் செய்யாத பலர் மறை முகமாகக் குறை கூறுவதாகத் தெரிகின்றது.

''ஒவ்வொரு சொல்லும் அசையும் எழுத்தும் தோன்றுதற்கும் திரிதற்கும் கெடுதற்கும் நெறிமுறைகள் உள. நான் 1938-இலேயே கீற்று (Skeat) எழுதிய ஆங்கிலச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள்

1. வேர்ச் சொற்கட்டுரைகள் பக். 201-3.

(Principles of English Etymology) இருமடலங்களைப் (2 vols) படித்து அவற்றை ஒட்டிச் செந்தமிழ்ப் பிறப்பியல் நெறிமுறைகள் எழுதி வைத்தேன். அது பொதுமக்கள் வாங்காத மொழியியல் ஆராய்ச்சி நூலாதலின் நானும் வெளியிடவில்லை. வணிக நிலைய மாகிய சை. சி. நூ. ப. கழகத்திற்கும் வெளியிடக் கொடுக்கவில்லை. இத்தமிழ்நாடு இன்றும் ஆரியம் வேரூன்றிய அடிமை நாடாதலின் அரசோ, பல்கலைக் கழகமோ அதை வெளியிடும் நிலையும் இல்லை. பல்லாண்டிற்கு முன் மென்றாளில் எழுதப் பட்டதாதலின் அதன் தாட்கள் பழுப்பேறியும் பூச்சியரித்தும் போய்விட்டன. ஆயினும் இன்று அதனினும் சிறந்ததொன்று தொகுக்க இயலும்.

2.2. "ஒவ்வொரு கலைக்கும் அறிவியற்கும் தெரிவியல் (Theory) புரிவியல் (Practice) என இரு கூறுகள் உள. தெரிவியலை விரிவாகக் கற்பிக்கும் போது புரிவியலைக் காட்டுவதும் புரிவியலை விளக்கமாகக் காட்டுமிடத்துத் தெரிவியலைக் கற்பிப்பதும் வழக்கமன்று. அதற்குக் காலமும் இடந்தராது. நீர்மின்னோ அனல் மின்னோ உருவாக்கப் படுவது எங்ஙனம் என்றறிவது தெரிவியல்; மின்வலியால் விளக்கெரியச் செய்வதும் விசிறியாட வைப்பதும் புரிவியல். மின்விளக்கைக் காணும் பொதுமக்கள் மின்னாக்க முறை அதனால் அறிவிக்கப் படாமையால் அது அறிவியலின் பாற்பட்டதன்று என்று பழித்துப் புறக்கணியார்.

"என் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வெளிவரும் போது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறி முறைகளை விளக்கும் மடலமும் விரிவாக வெளிவரும்.

அதற்கு முன் என் தமிழ் வரலாறு என்னும் நூலைப்படித்து ஓரளவு தெரிந்து கொள்க. மேலும் என்வேர்ச் சொற் கட்டுரைகளில் எடுத்துக் காட்டும் சொற்களினின்றே எழுத்தும் சொல்லும் திரியும் முறைகளைப் பொது அளவு மதியுள்ள எவரும் அறிந்து கொள்ள இயலும்."

இம்மறுப்பை எழுதுதற்குச் சில ஆண்டுகளின் முன்னரே 'சொல் வேர் காண் வழிகள்' என்னும் கட்டுரை ஒன்றனை எழுதி வெளி யிட்டிருந்தார் பாவாணர்.

**சொல்வேர் காணும் வழிகள் :**

3. சொற்பிறப்பியல் நெறிமுறைகளை அறியார் சொல்வேர் காணும் முயற்சியில் ஈடுபடின் ஏற்படும் எழுவகை வழுமுடிபுகளை முதற்கண் எழுதி, அதன் பின்னர், "உண்மைச் சொல்லியல் நெறி முறைகளும் சொல்வேர் காணும் வழிவகைகளும்" என இருபது குறிப்புகளை வழங்கினார் :

3.1, Parliment என்பதைப் பாராளுமன்று என்று பெயர்ப்பது ஒலிமுறைச் சொல்லியல் (Sound Etymology) என்றும், வடு-வடை; நடுவில் துளையாகிய குற்ற முடையது என்பது உன்னிப்புச் சொல்லியல் (Guessing Etymology) என்றும், வெறு—வெறுக்கை = வெறுக்கத் தக்கது என்பது குறிக்கோட் சொல்லியல் (Tendentious Etymology) என்றும், உண்மை = உள்ளத்தோடு பொருந்தியது என்பது அடிப்பட்ட சொல்லியல் (Popular Etymology) என்றும், தோசை = சுடும்போது இருமுறை'சை' என்று ஓசை கேட்பது என்பது நகையாட்டுச் சொல்லியல் (Playful Etymology) என்றும், பெருச்சாளி = பெரிய பணப்பை போன்றது என்பது பொருந்தப் புகல்வு (Plausible Etymology) என்றும், கீழ் = ஞாலம் உருளும் போது கிழக்குத் திசையில் கீழ்நோக்கிச் செல்வது என்பது அறிவாரவாரச் சொல்லியல் (Pedantic Etymology) என்றும் எழுவகை வழுச் சொல்லியல்களை விளக்கத்துடன் வரைந்துள்ளார்.

3.2. ஒவ்வொரு பகு சொற்கும் முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, புணர்ச்சி, திரிபு ஆகிய அறுவகை உறுப்புகளும் அமைந்துள்ள வற்றைப் பகுத்தறியத் தெரிதலும்,

வரலாற்று மொழிநூலறிவும் சொந்த மொழியாராய்ச்சியும் பெற்றிருத்தலும்,

கீற்று எழுதியுள்ள ஆங்கிலச் சொல்லியல் நெறிமுறைகளையும், அவரும் சேம்பரரும் தொகுத்த ஆங்கிலச் சொல்லியல் அகர முதலிகளையும் கற்றுத் தெளிந்திருத்தலும்,

மலையாளம் தெலுங்கு போன்ற அகப்புற மொழிகளையும் மராட்டி இந்திபோன்ற புறமொழிகளையும், ஆங்கிலம் இலத்தீனம் கிரேக்கம் போன்ற புறப்புறமொழிகளையும் ஓரளவு கற்றிருத்தலும்,

இருவகை வழக்குகளிலுமுள்ள தமிழ்ச் சொற்களுட் பெரும்பாலன வற்றின் பொருளை அறிந்திருத்தலும்,

இற்றைத் தென்பாண்டி நாடாகிய நெல்லை வட்டார நாட்டுப்புற உலக வழக்கை அறிந்திருத்தலும், வேண்டும்.

3.3. இவற்றை அன்றியும், எழுத்துக்களின் திரிபுகளை அறிதல், சொற்றிரிபறிதல், சொற்களின் திருந்திய வடிவறிதல், பலபொருள் ஒருவடிவுச் சொற்களைப் பகுத்தறிதல், சொற்களைச் செவ்வையாய்ப் பிரித்தல், பொருள்களின் சிறப்பியல்பறிதல், பொருள் வரிசையறிதல், ஒப்புமை அமைப்பு அறிதல், வரலாற்றறிவையும் ஞால நூலறிவையும் துணைக் கொள்ளல், இடுகுறி தமிழில் இல்லை என அறிதல், பகுத்

தறிவைப் பயன்படுத்துதல் ஆகியவற்றுடன் அஞ்சாமை, நடுநிலை, பொறுமை ஆகிய பண்பு நலங்களும் வேர்ச் சொல்லாய்வார்க்கு வேண்டும் என்பார் பாவாணர்.

3.4. ள-ஃ : எள்கு-எஃகு, வெள்கு-வெஃகு.
ள-க : உளி-உகிர், தளை-தகை.
ள-ச : உளி-உசி-ஊசி-வ. சூசி.
ள-ட : நளி-நடி, மகள்-மகடூஉ.
ள-ண : பெள்-பெண், வள்-வளர்-வணர்.
ள-ய : தொள்-தொய், மாள்-மாய்.
ள-ர : நீள்-நீர், வள்-வார்.
ள-ல : கொள்-கொல்.
ள-ழ : காள்-காழ், துளசி-துழாய்.
ள-ற : தெள்-தெறு-தெற்று, வெள்-வெறு.
ள-ன ; முளை-முனை, வளை-வனை.

- இவை எழுத்துகளின் திரிபு.

அரம்(சிவப்பு)-அரத்தம் (சிவப்பு) - அரத்தி-அத்தி = சிவந்தபழம்

- இது சொற்றிரிபு.

இடைகழி-டேழி (கொச்சை)-ரேழி (கொச்சை)

- இது சொல் திருந்திய வடிவு.

மணி = கரியது. மள்-மண்-மணி = நீலக்கல்
= வட்டமானது. மள்-முள்-முண்டு-மண்-மணி = நாழிமணி
= சிறியது. மள்-மண்-மணி = மணிப்புறா
= ஒளியுள்ளது. மண்-மண்ணி -மணி = ஒளிக்கல்

- இது பலபொருள் ஒருவடிவச் சொல்.

உடக்கெடுத்துப் போதல் = உடக்கு + எடுத்துப் போதல்.
உடக்கு = உடம்புக்கூடு.

- இது சொல்லைச் செவ்வையாய்ப் பிரித்தல்.

இருமை (கருமை) யான மாட்டினம் எருமை
வழுவழுவென்றிருக்கும் மரம் வாழை.

- இவை பொருள்களின் சிறப்பியல்பு அறிதல்.

அருகுதல் = சிறுத்தல், ஒடுங்குதல். அரு-அரை = சிறுத்த அல்லது ஒடுங்கிய இடை, உடம்பின்நடு, பாதி.

- இது பொருள் வரிசையறிதல்.

குழல்-குடல், புழல்-புடல்

- இஃது ஒப்புமையமைப்பு அறிதல்.

பாண்டி = காளை, மறவன். பாண்டி-பாண்டியன்

- இது வரலாற்று அறிவையும் ஞால நூலறிவையும் துணைக் கொள்ளல்.

சுடலை < சுடல் < சுடு < சுள்

- இஃது இடுகுறி தமிழில் இல்லை என அறிதல்.

வடவை = வடமுனையில் தோன்று நெருப்பு அல்லது ஒளி
- இது பகுத்தறிவைப் பயன்படுத்தல்.

3.5. கூறப்பட்ட எல்லாத் திறங்களும் பெற்றிருப்பதுடன் அஞ்சாமை, நடுநிலை, பொறுமை என்னும் பண்பு நலங்களும் ஒருங்கே கொண்டிருந்தவர் பாவாணர். அப்பட்டறிவின் வகுப்பே இவ்வகை என அவர்தம் நூல்களில் அழுந்தினோரும் அணுக்கராகப் பழகினோரும் தெள்ளிதின் அறிவர்.

***சில நெறி முறைகள் :***

4. இனிப் பாவாணர் சுட்டும் வேர்ச் சொற் கட்டுரைகள், தமிழ் வரலாறு என்பவற்றால் அறியப் பெறும் சில நெறி முறைகளை இவண் அறிதல் தகும்.

அம் என்பது ஒரு பெருமைப் பொருள் பின்னொட்டு :[1]

அவை-அவையம் = பேரவை.

ஒ. நோ : மதி-மதியம் = முழுமதி.

இல் ஒரு சிறுமைப் பொருள் ஈறு:[2]

தொட்டி—தொட்டில் = குழந்தைகளுக்குத் தொட்டிவடிவில் மரத்தாற் செய்த சிறு தொங்கு கட்டில்.

(எ—டு.) புட்டி—புட்டில், விட்டி—விட்டில்.
கை என்பது ஒரு சிறுமைப் பொருள் பின்னொட்டு.[3]

(எ—டு.) குடி (வீடு)—குடிகை (சிறு வீடு)—குடிசை.
ஆரம் இடப் பொருள் பின்னொட்டு[4]

(எ—டு.) கொட்டாரம், வட்டாரம், பண்டாரம் (பண்டசாலை)

இவ்வாறே சிறுமை, குறுமை, பருமை முதலியவற்றுக்கு முன்

---

1. வேர்ச் சொற் கட்டுரைகள் : பக். 7.
2. வேர்ச் சொற் கட்டுரைகள், பக். 286
3. தமிழ் வரலாறு, பக். 48
4. ௸ பக். 95

னொட்டுகள் பலவாதலைத் தமிழ் வரலாற்றில் கண்டு கொள்க.[1]

பல்வேறு உயிர்த்திரிபு, பல்வேறு மெய்த்திரிபு, ஓரியலமைப்பு, ஒப்புமையமைப்பு முதலியனவும் சொற்றிரிபு முறைகளேயாம்.

நடத்து நடாத்து, வளாவு விளாவு, அம்ம அம்மை—இவை உயிர்த்திரிபு.[2]

கொப்பூழ்—தொப்புள், செம்பு—கெம்பு, பூசை—பூனை —இவை மெய்த்திரிபு.[3]

ஒன்று இரண்டு மூன்று முதலியவும்,

தெற்கு வடக்கு கிழக்கு முதலியவும்,

பேதை பெதும்பை மங்கை முதலியவும், ஓரியலமைப்பு.[4]

இயற்கை, செயற்கை; பிறப்பு,இறப்பு; இன்பு,துன்பு முதலியவை ஒப்புமையமைப்பு.[5]

தமிழின் சொல்வளம், அமைப்புச் செம்மை ஆகியவற்றுள் நெஞ்சம் பறி கொடுத்த பாவாணர் ''உலக மொழிகள் எல்லாவற்றுள்ளும் செம்மை என்னும் வரம்புள்ளது தமிழ் ஒன்றே''[6] என்றும், ''ஓரியல் ஒழுங்குபட்ட சுட்டு வினாச் சொற்கள் வேறு எம்மொழியிலும் இல்லை''[7] என்றும், மோனை எதுகைக் குதவுமாறு ஒரே உயிரிக்குப் பலபெயர்களை அமைத்திருப்பது வேறு எம்மொழியிலும் காண்டல் அரிது''[8] என்றும் பாராட்டுவார்.

---

1. ஷை பக். 88—94
2. ஷை பக். 71
3. ஷை பக். 73
4. ஷை பக். 98
5. ஷை பக். 98
6. தமிழ் வரலாறு, பக். 241
7. ஷை பக். 98 (எ—டு.) அதோ அந்த அவன் அங்கு அவண்
எதோ எந்த எவன் எங்கு எவண்
8. ஷை பக்.239 (எ—டு.) யானை—ஆம்பல்; உம்பல், உவா, ஓங்கல்; கடமா, கம்பமா, கரி, கவளமா, களிறு, கறையடி.

# 12. மொழி வரலாறுகள்

## தமிழ் மொழி வரலாறு

1. மொழி வரலாற்றின் இயற்கை முறைமைப் படியே, 1967ஆம் ஆண்டின் முற்படத் தமிழ் வரலாறும், அவ்வாண்டின் பிற்பட வட மொழி வரலாறும் வெளிவந்தன.

1.1. தமிழர் நண்ணிலக் கடற்கரையினின்று தென்னாடு வந்தவ ரென்றும் இந்திய நாகரிகம் ஆரியர் கண்டதென்றும் இருதவறான கருத்துகள் மேலையர் உள்ளத்தில் ஆழவேருன்றியிருப்பதால் பேரன் பாட்டனைப் பெற்றான் என்னும் முறையில் பிற்பட்ட சமற்கிருதத்தை முற்பட்ட தமிழுக்கடிப்படையாக வைத்து ஆய்தலை விலக்கி, மொழி நூல் திறவுகோல் தமிழிலேயே உள்ளதென்னும் உண்மையை அவர்க்கு உணர்த்து முகத்தான் எழுதப்பட்டது தமிழ் வரலாறு என்னும் பொத்தகமாகும்.

1.2. விரிவான முன்னுரையுடன் இயனிலைப் படலம், திரி நிலைப் படலம், சிதைநிலைப்படலம், மறைநிலைப் படலம், கிளர் நிலைப்படலம், வருநிலைப் படலம் என்று ஆறு படலங்களுடனும் பின்னிணைப்புகளுடனும் வெளிப்பட்டது தமிழ் வரலாறு.

1.2.1. ''உயிரெழுத்துகள் முதலில் நெடிலாகவே தோன்றியிருக்க வேண்டும்''[1] என்றும், ''முதற் காலத்தில் தமிழில் றன்னகரம் தோன்ற வில்லை; தந்நகரமே இருந்தது; அக்காலத்துச் சொற்களே வெரிந், பொருந்''[2] என்றும், ''ல, ள, ழ மூன்றும் ஒரே காலத்தில் தோன்ற வில்லை. ல முன்னும் ள இடையும், ழ பின்பும் தோன்றின. ஆதலால் அல்லீறு பின்னர் முறையே அள், அழ் எனத் திரிந்தது''[3] என்றும், ''ரறவும் தமிழில் ஒரே காலத்துத் தோன்றவில்லை. ர முன்னும் ற பின்னும் தோன்றின. ரகர மெய்யீறு சிலவிடத்து றகர மாகத் திரியும். றகரம் வல்லின மெய் ஆதலின் உகரம் ஏறப்பெறும். ஒளிர், ஒளிறு''[4] என்றும் உய்த்துணர்ந்து கூறுவதும் அவற்றைத் தக்க எடுத்துக் காட்டுகளால் நிறுவுவதும் திறம் மிக்கவை.

1.2.2. ''உயிரெல்லாம் முன்பும் மெய்யெல்லாம் பின்புமாகத் தோன்றவில்லை. உயிரும் மெய்யும் ஒழுங்கின்றி மாறி மாறியே தோன்றின. அம்முறையைக் காண்பது அரிது. ஆயினும் உயிரினத்

1. தமிழ் வரலாறு, பக். 76
2. ஷை 78
3. ஷை 78
4. ஷை 79

தையும் மெய்யினத்தையும் வேறு பிரித்து ஒவ்வோர் இனத்தையும் சேர்ந்த ஒலிகள் தோன்றிய முறையை ஒருவாறு அறியலாம்''[1] என்பார்.

1.2.3. உயிர்களில் இகர ஈகாரத்தின் மோனையாக எகர ஏகாரமும் உகர ஊகாரத்தின் மோனையாக ஒகர ஓகாரமும் தோன்றியிருத்தல் வேண்டும் என்பார். ஓரிரு சொன்முன் வரும் அகர இகரம் ஐகாரமாகவும், அகர உகரம் ஔகாரமாகவும் வருதலை, 'வள்—வய்—வயிர்—வயிரம்—வைரம்' என்றும், கதுவாலி (குறுகிய வாலையுடையது)—கவுதாரி—இலக்கணப் போலி—கௌதாரி[2] என்றும் சுட்டி மெய்ப்பிப்பார்.

1.2.4. ள ழ ற ன தோன்றுமுன் எல்லா உயிர்களும் தோன்றியிருக்கலாம் என்றும், மெல்லின மெய்களுள் மகரம் ஒன்றே தனியே தோன்றியிருத்தல் வேண்டும் என்றும், ஏனையவெல்லாம் ங்க, ஞ்ச, ண்ட, ந்த, ன்ற எனத் தன்தன் வல்லின மெய்யுடன் இணைந்தே தோன்றியிருத்தல் கூடும். வல்லினமெய்கள் தனித்தனித் தோன்றியிருத்தல்கூடும்[3] என்றும் கூறும் பாவாணர் உயிரும் மெய்யும் தோன்றிய முறையாக இங்குக் காட்டப்பட்டுள்ள ஈரொழுங்கும் தோராய முறையேயன்றி, இம்மியும் வழுவாத அறிவியலின் பாற்பட்ட துல்லிய முறையல்ல[4] என்பார்.

1.2.5. தமிழ் தோற்றமுற்று அமைப்புற்ற வரலாற்றைக் கூறும் இயனிலைப் படலமே, ஏனை ஐந்து படலங்களினும் நான்மடங்கு மிக்கதாக அமைந்துள்ளமையால் தமிழ் அமைப்புற்ற வரலாறே தமிழ் வரலாறு எனின் தகும்.

1.2.6. பழந்தமிழர் சொற்றூய்மையைப் பேணி வளர்த்தன்மையை அருமையாகக் குறிப்பிடுகிறார் பாவாணர். ஒட்டகத்தின் அரபிப் பெயர் 'சமல்' (Jamal) என்றிருந்தும் ஒருமாதம் வரை பட்டினியிருக்கும் திறம் ஒட்டகத்தின் சிறப்பியல்பாதல் அறிந்து பழந்தமிழர் பெயர் சூட்டிய பெற்றிமையை வியப்பார்.[5] அவ்வாறே கரும்பு, புகையிலை, உருளைக்கிழங்கு, முந்திரி, வான்கோழி, செந்தாழை, புகைவண்டி, மிதிவண்டி[6] என்னும் பெயரீடுகள் அமைந்த அருமையையும் சுட்டுவார்.

---

1. தமிழ் வரலாறு, பக். 109
2. ,, 111
3. ,, 112
4. ,, 111
5. ,, 237
6. ,, 237

தமிழ் வரலாறு பற்றி முன்னும் சொல்லியிருப்பதால் இவ்வளவுடன் அமைந்து வடமொழி வரலாறு பற்றிக் காண்போம்.

**வடமொழி வரலாறு**

2. ''தமிழை வடமொழியினின்று மீட்டு மீண்டும் அதை அரியணையில் அமர்த்தினாலன்றி, தமிழும் தமிழனும் வாழ வழியில்லை'' என்று துணிந்து பாவாணர் வடமொழி வரலாற்றை எழுதியதை முன்னுரையால் அறிகின்றோம்.

தமிழ் திரவிடத்திற்குத் தாயாக மட்டுமன்றி ஆரியத்திற்கு மூலமாகவும் உள்ளதென்னும் உண்மையை வடமொழிவரலாற்றால் நன்கனம் உணர்த்துகின்றார் பாவாணர்.

2.1. ஒரு சொல்லை இன்னமொழி என்று அறிதற்கு அதன் பகுதிப் பொருளையும் அதனின்றும் திரிந்த பல்வேறு சொற்களையும் பார்க்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கூறும் பாவாணர் வடமொழிச் சென்ற தென் சொற்களை 1930க்கு முன்னரே ஆராயத் தொடங்கி விட்டார்.[1]

2.2. ''எத்தனையோ தென்சொற்கள் வடமொழிச் சென்று வாருகராய் வழங்குகின்றன. அவை நளராகுங் காலமும் நண்ணும்'' என்று இரங்கி நம்பிக்கை கொண்ட்வாறே வடமொழிவரலாற்றால் மெய்ப்பித்துக் காட்டுகின்றார்.

2.2.1. ''வடமொழி தேவமொழியாதலால் அது எம்மொழியினின்றும் கடன் கொள்ளாது. அதிலுள்ள சொற்களெல்லாம் வட சொற்களே'' என்று திட்டமிட்டுத் திட்டமாக ஒருமித்துப் பறையறைந்தும் வேதங்களிலேயே தமிழ்ச் சொல் உண்டு என்றும், அவை இவை யென்றும் கால்டுவெல் கண்காணியார் கண்டு காட்டியதே தமிழர் கண்ணை விழிப்புறுத்தியதாம். அவ்வழி பற்றி மறைமலையடிகளார் சென்று மேலும் சில சொற்கள் உண்மையைக் கண்டார். பாவாணரோ முற்றாக இறங்கி ஆய்ந்து வடமொழியில் உள்ள தென்சொற்கள் இவை இவை எனப் பட்டியலிட்டுக் காட்டிய பின்னே 'சில தென் சொற்கள் வடமொழியிலும் உண்டு,[2] என்று ஏற்கின்ற ஒரு நிலை உருவாகியுள்ளது.

2.3. வடமொழிச் சென்ற தென் சொற்கள் என்னும் கட்டுரையில் ஏறத்தாழ ஒரு நூற்றுச் சொற்களையே—கட்டுரையாகலின்—சுட்டிக்

1. செந்தமிழ்ச் செல்வி, 9: 295.
2. வடமொழி இலக்கிய வரலாறு—மதிப்புரை, செந். செல். 54: 272.

காட்டிய பாவாணர், வடமொழி வரலாற்றில் அக்கம் முதலாக வையை ஈறாக எண்ணூற்று ஒன்பது சொற்களைச்சுட்டி வேர் வழி விளக்கமும், திரிபும் எடுத்துக் காட்டும் இயையும் காட்டிச் செல்கிறார். தொடக்க ஆய்வுப்படைப்புக்கும் நிறைவு ஆய்வுப் படைப்புக்கும் இடைவெளி ஏறத்தாழ நாற்பது[1] ஆண்டுகள் ஆயிற்றே!

2.4. தென் சொற்கள் வட சொற்களாக அமைந்துள்ளதற்குச் சில எடுத்துக் காட்டுகளைக் காணலாம்.

இஞ்சி வேர் - ச்ருங்க வேர.[2]

இஞ்சி என்பது தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் விளைந்து வரும் மருந்துப் பூண்டு. இஞ்சி மலைபடுகடாத்திலும், பதிற்றுப் பத்திலும் இடம் பெற்றுள்ள சொல். இஞ்சியை இஞ்சிவேர், இஞ்சிக் கிழங்கு, இஞ்சிப் பாவை என்று சொல்வது வழக்கம்.

இஞ்சுதல் என்பது நீரை உள்ளே இழுத்தலாம். இஞ்சு -

இஞ்சி; இஞ்சி காய்ந்தால் சுக்கு; சுக்கு நீர் வற்றியது.

சுள்-சுட்கு-சுக்கு. இஞ்சி × சுக்கு.

இஞ்சி கிறித்துவுக்கு முற்பட்டே மேனாடுகளுக்கு ஏற்றுமதியான பொருள்களுள் ஒன்று.

ம. இஞ்சி, கு. இஞ்சி, கோ. இஞ்ச், பர். சிங்கிவேர.

L. Zingiber, GK. Zingiberis, LL. Gingiber,

OE. Gingiber, E. Ginger, S. Śrngavera.

மேலையாரியச் சொற்களெல்லாம் இஞ்சிவேர் என்னும் தமிழ் வடிவைப் பெரிதும் ஒத்திருக்க, வட மொழியாளரோ இஞ்சிவேர் என்பதைச் ச்ருங்கவேர் எனத் திரித்து மான் கொம்பு போன்ற வடிவினது என்று வலிந்தும் நலிந்தும் பொருளாகக் கூற வட சொல் லாகக் காட்ட முயல்வர்.

ச்ருங்க என்பது கொம்பு என்று மீட்டும் பொருள்படும். இஞ்சிவேர் பொதுவாகக் கிளை கிளையாக இருப்பது பற்றி அதை மான் கொம் போடு ஒப்பிட்டு மான் என்னுஞ் சொல்லையும் சேர்த்துக் கொண்டனர். வேர என்பது உடம்பு என்னும் பொருள் படுவதே அன்றி வேர் என்னும் பொருள் கொண்டதன்று.

1. முன்னது 1930, பின்னது 1967
2. வட மொழி வரலாறு : பக். 87.

2.4.1. குட்டம் என்பதொரு தென் சொல். அதனைக் குஷ்டம் என்று வழங்கும் தலைப்பாடும் உள்ளது. அது 'குஷ்ட' என்ற சொல்லினின்று 'குட்டம் எனத் திரித்துக் கொண்டதாகத் தமிழாய்ந்த வரும் கூடக் கருதுகின்றனர். ஆனால் தென் சொல்லே என்றும் வட சொல்லாகச் சென்றுள்ளது என்றும் வேர்ப் பொருளுடன் நிறுவுகிறார் பாவாணர்.

குள்-குட்டு-குட்டம் = குட்டை, குட்டி.

குட்டம்-1. சீர் குறைந்த குறுகிய அடி

2. விரல்களும் முகமும் அழுகிக் குட்டையாகும் நோய். ''குட்ட நோய்'' (சீவக. 253).

வடவர் கு+ஸ்த என்று பிரித்து, குறைந்து நிற்பது என்று பொருட் கரணியம் கூறுவர். அதிலும் கு என்பது தென் சொல்லே. குள்-கு. ஒ. நோ: நல்-ந, அல்-அ.

குட்டை-வெண்குட்ட நோய்.

2.4.2. புத்தகம் என்னும் சொல் பொத்தகம் என்பதன் வழிவந்த சொல். ஆனால் 'புஸ்தகம்' என்ற சொல்லில் இருந்து வந்ததாகக் கருதிக் கொண்டு தமிழியல்புக்கு ஏற்பப் புத்தகம் என எழுதுவதாகப் படித்தவரும் கருதுகின்றனர். புத்தகத்தின் பொருளை மெய்பிக்கிறார் பாவாணர்.

புல்லுதல் = பொருந்துதல். புல்-பொல்-பொரு-பொருந்து-பொருத்து-பொத்து-பொட்டு.

பொத்துதல் = பொருத்துதல், சேர்த்தல், தைத்தல், மூட்டுதல் மூடுதல்.

பொத்து-பொத்தகம் = பொத்திய (சேர்த்த) ஏட்டுக்கற்றை, எழுதிய ஏட்டுத் தொகுதி.

சுவடி சேர்த்தல் என்னும் வழக்கை நோக்குக.
சும்மை = தொகுதி. சும்-சுவ்-(சுவள்)-(சுவண்)-சிவண்.
சிவணுதல் = பொருந்துதல், ஒத்தல். சுவண்-சுவடு = பாதம், நிலத்திற் பொருந்திய தடம். சுவடு-சோடு = இணை, இரட்டை, இணையுள் ஒன்று, ஒப்பு, செருப்பிரட்டை. சுவடு-சுவடி = இணை, கற்றை, கட்டு, பொத்தகம்.
கணவனும் மனைவியும் சுவடியாகப் போகிறார்கள் என்னும் வழக்கை நோக்குக. சுவடி-சோடி = இணை.
சுவடித்தல் = பொருத்தி அழகு படுத்துதல். சுவடி-சோடி-சோடணை = அழகுபடுத்துதல் (அலங்கரிப்பு).

பொட்டு-மண்டையோட்டுப் பொருத்து, பொட்டுதல்= பொருத்துதல், கட்டுதல். பொட்டு-பொட்டணம்.
பொத்தகம்=1. நூற் புத்தகம். 2. கணக்குப் புத்தகம்.
பொத்தகம்-புத்தகம். ''புத்தகமே சாலத் தொகுத்தும்''.
நாலடி. 318.

வடவர் காட்டும் மூலம் புஸ்த் என்பது. அதற்கு மா. வி. அ. மதி அல்லது அவமதி (?) என்றும், தாது பாடம் கட்டு என்றும் பொருள் கூறியுள்ளது. பிந்திய பொருளில் அது பொத்து என்பதன் திரிபே. ஆரியர்க்கு முதல் நூல் வேதம் என்றும், அது நீண்டநாள் எழுதப்படா திருந்து எழுதாக்கிளவி என்றும் கேள்வி என்றும் பெயர் பெற்ற தென்றும் அறிக[1] என்பது பாவாணர் குறிப்பு.

2.4.3. பலாப்பழம் பருத்தபழம். அது பல்—பரு—பல்—பலா பெரும் பழம். சிறுகோட்டுப் பெரும் பழம் என்பது குறுந் தொகை (18).

பலா-பலவு. ''தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்குமே'' புற நா. 109

பலாப்பழம் தமிழ்க் குறிஞ்சி நிலத்திற்குச் சிறப்பாக உரியதை அறிந்திருந்தும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகர முதலி வட சொல்லாகக் காட்டியிருப்பது வியக்கத் தக்க நெஞ்சமுத்தம்[2] என்கிறார் பாவாணர்.

2.4.4. ஊசி தமிழகத்தில் பெருவழக்குடையது. எழுத்தாணி எழுத்தூசி எனப்படும். இன்னும் குத்தூசி, துன்னூசி, தையலூசி என்பன உண்டு. 'ஊசி விற்பதா?' எனப் பழமொழியும் உண்டு. மதில்மேல் ஐயவித் துலாமும் கைபெயரூசியும் இருந்ததை இளங்கோ வடிகள் குறிப்பார்.[3]

கூர்மை சிறுமை இவற்றைக் குறிக்க ஊசிக் கணவாய், ஊசிக் கழுத்தி, ஊசிக்களா, ஊசிக்காய், ஊசிக் கோபுரம், ஊசிச்சம்பா, ஊசி மல்லிகை, ஊசி மிளகாய் எனப் பல உண்டு. இவ்வாறாகவும் ஊசி, 'சூசி' என்னும் வடசொல்லினின்று வந்ததாகச் சென்னைப் பல்கலைக் கழக அகர முதலி சுட்டியுள்ளதை எடுத்துக் காட்டி மறுக் கிறார் பாவாணர்.

உள்—அள்=கூர்மை, உள்—உளி=கூரிய வெட்டுக் கருவி,

---

1. வடமொழி வரலாறு , 211
2. ,, 202.
3. சிலப்பதிகாரம் 15:213.

உளி—உகிர் = கூரிய விரல் உறுப்பு.

உளி—உசி—ஊசி = கூர்மை (பதிற்றுப். 70:7) கூரிய குத்துக் க்ருவி அல்லது தையற் கருவி (பிங்) சிறுமை.

ஒ. நோ: இளி—இசி. வாளி—வாசி—வாசிகை.[1]

## இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?

3. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? என்பது பாவாணர் எழுதிய நூல்களுள் ஒன்று. அதில் விளையும் கேட்டை விரிக்கும் பகுதியில் சொற் சிதைவு என்பதை எடுத்துக்காட்டுடன் விளக்குகிறார்.

| தமிழ் | சமற்கிருதம் | இந்தி |
|---|---|---|
| அங்கணம் | அங்கண | அங்கண் |
| அரங்கம் | ரங்க | ரங்க் |

இவ்வாறு பல எடுத்துக் காட்டுகளைத் தந்து ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார்.

3.1. அவர் திருச்சிப் புத்தூர் ஈபர்மேற் காணியார் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராயிருந்த போது, ஒருநாள் 6-ஆம் படிவ வகுப்பில் இந்திச் சொற்கள் பலவற்றின் தமிழ் மூலத்தையும் கூழைத் தன்மையையும் பல எடுத்துக் காட்டுகள் கூறி விளக்கினார். பின்னர்ப் பாடம் நடத்தத் தொடங்கி 'இன்னும் எத்தனை பாட்டு நடத்த வேண்டும்' என்று மாணவரை வினவினார். ஒரு மாணவன் 'அஞ்ச் பாட்' என்றான். அதனால் அவர்க்கு உடனே இந்தி தமிழ் நாட்டிற்கும் பொது மொழியாக வந்தால் நாளடைவில் தமிழ் இந்நிலை தான் அடையும்என்னும் உணர்வு பிறந்தது. அதனை நினைவு கூர்கிறார் பாவாணர்: "நான் சொன்ன இந்திச் சொற்களின் கூழை வடிவம் அம்மாணவன் உள்ளத்தில் ஆழப்பதிந்ததால், அவ்வச் சிலேயே, அவனை அறியாது எழுந்த சொற்கள் 'அஞ்ச் பாட்' என்பன. அவன் குறும்புத் தனமாகக் கூறியனவல்ல. அவன் குறும்பனு மல்லன்".[2]

3.2. இந்தி வந்தால் இற்றை வடிவம் எதிர்காலத்து எப்படி மாறும் என்பதையும் இவ்விடத்தில் சுட்டினார்:

| **இற்றை வடிவம்** | **எதிர்கால வடிவம்** |
|---|---|
| திருநெல்வேலி | திந்நெல்வேல் (எகரம் இந்தியில் இல்லை) |

1. வடமொழி வரலாறு : 96; செ. ப. க. அ. மு. சீர்கேடு இடை இடை சுட்டப் பெற்றமையால் தனியே அந்நூல் சுட்டப் பெற வில்லை என்க.
2. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? பக். 20.

| | |
|---|---|
| தொல்காப்பியம் | தோல்காப் (ஒகரமும் இந்தியில் இல்லை) |
| திருக்குறள் | திக்குல் |
| பத்துப்பாட்டு | பத்பாட் |
| சிலப்பதிகாரம் | சில்பத்கார் |

தமிழுயரத் தமிழன் உயர்வான், தமிழயரத் தமிழன் தாழ்வான் என்னும் கொள்கைவீறு மல்கிய பாவாணர், ஒரு மொழிக்கு ஒரு மொழி அடிமையாக இருத்தல் கூடாது என முழங்குபவர். இந்தி வரவால் தமிழ் கெடும் வகைகளைத் திறமாக விளக்கும் பாவாணர் மறைமலையடிகள் வழியில் இருமொழிக் கொள்கையையே ஏற்கிறார்.[1]

## 13. இதழ்களில் பாவாணர்

**செந்தமிழ்ச் செல்வி :**

1. பாவாணரால் 'தினசரி இதழ்' 'நாட்சரி' ஆயது; 'கிழமை இதழ்', 'கிழமையன்' ஆயது; 'மாத இதழ்', 'மாதிகை' ஆயது. அவர்தம் படைப்புகளைத் தாங்கிய இதழ் எதுவாயினும் அழியா வாழ்வு பெற்றது அது. அவர்தம் பற்றாளர் கொண்டிருந்த ஆர்வக் கோள் அது.

1.1. ''என் வாழ் நாளெல்லாம் செந்தமிழ்ச் செல்விக்குக் கட்டுரை எழுதி வருவேன்'' என்பது பாவாணர் உறுதி. அவ்வுறுதி இறுதிவரை காக்கப்பட்டது! அவர்தம் மறைவுச் செய்தி வெளிப்பட்டு, இரங்கல் அரற்றாக வந்த இதழிலும் அவர் எழுதிய கட்டுரை இடம் பெற்றிருந்தது. அச்செந்தமிழ்ச் செல்வி மாதிகையைப் பாவாணர் படைப்பு மாண்புறுத்தியது! பின்னே அப்படைப்புகளில் பல நூல் வடிவும் கொண்டன. நூல் வடிவுறாது கட்டுரை வடிவிலேயே அமைந்து கிடப்பனவும் உள. அவற்றுள் ஒன்று கலைச் சொல்லாக்க நெறி முறைகள் என்பது.

1.2. அதில், தமிழிற் கலைச் சொற்களை ஆக்குவார் ஆங்கிலம் தமிழ் இரண்டையும் நன்றாய் அறிந்தவராயும் சொல்லாராய்ச்சி யுடையவராயும் தமிழ்ப்பற்று நிரம்பியவராயும் இருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார் பாவாணர்.

---

1. ஷை, பக். 75-6,

1.3. தமிழறியாத பெருமாளர் கலைச் சொல்லாக்குவது குருடர் வழி காட்டுவதையும், சொல்லாராய்ச்சியில்லாதார் ஆக்கும் கலைச் சொல் இளஞ்சிறார் ஓவியத்தையுமே ஒக்கும். தமிழ்ப் பற்றில்லாத வரிடம் கலைச் சொல்லாக்கத்தை ஒப்புவிப்பதோ பெற்றதாயைப் பற்றலரிடம் ஒப்புவிப்பதேயன்றி வேறன்று என்று கலைச் சொல்லாக் கத்தக்கார் இவர் எனச் சுட்டுகின்றார்.

**பயிற்று மொழிக்கு ஒரு முன்னோக்கு:**

2. ஐதராபாத்து உசுமானியப் பல்கலைக் கழகத்தார் பட்டத் தேர்வுகட்குரிய கல்லூரிக் கல்வியை உருது மொழியிற் புகுத்துமுன் நாலாண்டாகப் பொறுமையுடன் உழைத்துக் கலை நூல்களைப் பெயர்த்துக் கெண்டதைப் பின்பற்ற வேண்டும் என்று சுட்டுகிறார்.

**கலைச் சொல்லாக்க முன்னோடி :**

3. கலைச் சொல்லாக்கத்திற்கு முன்னோடியாகச் செய்யத்தக்க நான்கு கடப்பாடுகளைச் சுட்டுகிறார்.

முதலாவது, நூல் வழக்கு உலக வழக்கு கல்வெட்டு இம் மூன்றி னின்றும் இது காறும் அகராதியிற் புகாத சொற்களையெல்லாம் தொகுத்துக் கொள்ளல் வேண்டும். இது செய்யாமற் கலைச் சொல் ஆக்குவது கருவியில்லாமல் கருமம் செய்வதே போலும்.

இரண்டாவது, செந்தமிழ்ச் சொல்லியல் நெறிமுறைகளில் கலைச் சொல்லாக்கத்திற்கு வேண்டியவற்றை யெல்லாம் தெரிந்து கொள்ளல் வேண்டும். அதாவது முன்னொட்டுகள், பின்னொட்டுகள், இடை யொட்டுகள், ஈறுகள் என்ற நாற்றிறப்பட்ட சொற்களின் அல்லது குறைச் சொற்களின் பொருள்கள் பயன்கள் எல்லாம் தெரிந்து கொள்ளல் வேண்டும்.

மூன்றாவது, அவ்வக்கலையில் தேர்ச்சி பெற்ற ஆங்கில அறிஞரைக் கொண்டு மொழிபெயர்க்க வேண்டும். ஆங்கிலக் குறியீடுகளை யெல்லாம் கலைவாரியாக எழுதுவித்துக் கொள்ளல் வேண்டும்.

நாலாவது, முற்கூறிய மூவகைத்திறனும் ஒருங்கமைந்த திறவோர் ஒருங்கேயமர்ந்து தீர ஆய்ந்து கலை வாரியாக மொழிபெயர்க்கவோ சொற்புனையவோ வேண்டும்.

**கலைச் சொல்லாக்கம் :**

4. கலைச் சொல்லாக்கம் குறித்துப் பொதுக்குறிப்பும் சிறப்புக் குறிப்புமாக இருபாற்படுத்துச் சுட்டுகிறார் பாவாணர். பொதுக் குறிப்பு அடிப்படை நெறி; சிறப்புக் குறிப்பு அமைப்பு நெறி.

4.1. கலைச் சொற்களைத் தனித் தமிழிலேயே யாத்தல் வேண்டும். அது கூடாத ஒரோ வழிமட்டும் அயன் மொழித் துணை வேண்டப்படும். இது, எல்லாமொழிக்கும் பொது.

மொழிபெயர்ப்புத் திறனில் தமிழ் எம்மொழிக்கும் இளைத்ததன்று. தனித்தமிழில் குறியீட்டுக்காகப் புனைதற்கு, வழக்கற்ற சொற்களை வழக்கிற்குக் கொண்டுவருதல் வேண்டும். வழங்காமலே சொற்கள் வழக்கறுகின்றன. தமிழ் நாட்டின் வடபாகத்தில் வழங்காத துப்புரவு என்னும் சொல் தென்பாகத்திலும், தென்பாகத்தில் வழங்காத நூக்கு (தள்) என்னும் சொல் வடபாகத்திலும் தமிழில் வழங்காத நெய்த்தோர் என்னும் சொல் தெலுங்கில் 'நெத்துரு' என்றும் வழங்குவதை நோக்குக. அன்றியும், தமிழ்ச் சொல்லிருக்க அயற்சொல் நாடல், கையில் வெண்ணெயிருக்க நெய்க் கலைவதும், ஏதிலார் ஆரத்தமர் பசிக்க விடுதலுமாம்.

**கலைச் சொல்லாக்க நெறி முறைகள் :**

5. புதுச்சொல்லாக்கப் புனைவுக் கான நெறிமுறைகள் :

1. ஒரு பொருளுக்கு ஏதேனும் ஒரு காரணம் பற்றிப் பெயரிடலாம். அக்காரணம் ஒரு சிறிதே பொருந்து மேனும் அமையும். அதே காரணம் பிறபொருளுக்கு ஏற்குமா என்று கவனிக்க வேண்டியதில்லை. அவ்வியன்மை (அவ்யாப்தி) மிகுவியன்மை (அதிவியாப்தி) என்னுங்குற்றங்கள் வரையறைக்கே (Definition) யன்றிச் சொற்கு இல்லை.

2. பலபொருளுக்கு ஒரே காரணம் ஏற்பின் அவற்றின் பெயர்கள் வெவ்வேறாய் அமையும் படி ஒருபொருட் பல சொற்களை ஆளலாம்.

(எ-டு) வளையல் = வளைந்தஅணி.
கொடுக்கு = வளைந்த உறுப்பு.
புரிசை = வளைந்த மதில்.
குனிவு = முதுகு வளைதல்.
பரிதி = வட்டமான கதிரோன்.

3. ஒரே சொல்லைப் பலபொருட்கு வழங்கின் பொருள்தொறும் திரித்துக் கொள்ள வேண்டும்.

(எ-டு) கள்—கர் = கருப்பு, மறைவு.

கர, கரம்பு, கரம்பை, கரடி, கரந்தை, கரி, கரிசல், கரிச்சான், கரிசு, கரு, கருகு, கருக்கு, கருத்தை, கருப்பை, கரும்பு, கருவல், கார், காரி முதலிய சொற்களெல்லாம் கருமை என்னும் ஒரே கருத்தை அடிப்படையாகக் கொண்டு விகுதி வேறுபாட்டால் வெவ்வேறு பொருளைக் குறிப்பன.

4. ஒரே பொருளின் அல்லது கருத்தின் நுட்ப வேறுபாட்டைக் குறிக்கவும் சொல்லைத் திரித்துக் கொள்ளலாம்.

(எ-டு) பரிசு = இகலிப் பெறுவது.
பரிசில் = இகலாது பெறுவது.
பரிசம் = பெண்ணுக் களிப்பது.

5. சொற்றிரிப்பு பல வகைப்படும்.

ஒன்பான் திரிபு, முக்குறை, மும்மிகை, போலி, இலக்கணப் போலி, திரிபாகு பெயர் (தத்திதாந்தம்) மரூஉ முதலிய வெல்லாம் திரிபின் வகைகளாம்.

(எ-டு) கள்-களி. (கருமண் களிமண் போன்ற உணவு).
கள்-களிம்பு (களி போன்ற மருந்து).
இர்-இரா, இரும், இருள், இரும்பு, இறவி, இறுங்கு-
ஏனல், ஏனம், யானை (ஏனை).

6. (1) ஈறுகளைப் பொருண் மரபறிந்து புணர்க்க வேண்டும். ஒவ்வோர் ஈறும் ஒவ்வொரு அல்லது சிற்சில பொருள்களை மரபாகக் காட்டும்.

(எ-டு) அல்.
செம்மல், வள்ளல்-உடையோனை உணர்த்திற்று
வறுவல், நொறுவல்-செய்பொருளை உணர்த்திற்று
ஆடல் -தொழிலை உணர்த்திற்று
தோன்றல் -செய்வோனை உணர்த்திற்று.

(2) ஒரே பொருட்குப் பல ஈறும் ஏற்கும். ஈறு பெறுஞ் சொல்லின் இறுதிக் கேற்ப ஓர் ஈற்றைச் சேர்க்க வேண்டும்.

எச்சம், தோன்றல், ஓதுவான், விறகுவெட்டி, வெந்தை என்பவற்றிலுள்ள அம், அல், ஆன், இ, ஐ என்னும் ஈறுகள் செய்வோனையே குறித்தன.

(3) குற்றியலுகரச் சொற்களெல்லாம் செய்வோன் பொருளில் இகர ஈற்றை ஏற்கும். (எ-டு) தோன்றி, ஓதி, வெட்டி.

7. (1) ஒரு பொருள் இன்னொன்றின் பெருமைப் பாடாய் இருந்தால் பெருமை அடைகளையும் ஈறுகளையும் பொதுமையான பொருட் பெயரோடு சேர்த்துக் கொள்ளலாம்.

(எ-டு) நெருஞ்சில்-ஆனை நெருஞ்சில் = அடை.
குன்று-குன்றம் = ஈறு.

(2) பெருமைப் பாட்டுப் பெயர்களைப் பெருமைப் பொருள் வேர்களின்று திரிக்கலாம்.

(எ-டு) கடல், கடப்பான், படாகை.

8. (1) ஒரு பொருள் இன்னொன்றின் குறுமைப் பாடாயிருந்தால் குறுமை யடைகளையும் ஈறுகளையும் பொதுமையான பொருட் பெயரோடு சேர்த்துக் கொள்ளலாம்.

(எ-டு) அறை-கண்ணறை } அடை.
அகத்தி-சிற்றகத்தி }
முறம்-(முற்றில்)-முச்சில்-ஈறு.

(2) குறுமைப் பாட்டுப் பெயர்களைக் குறுமைப் பொருள் வேர்களினின்றும் திரிக்கலாம்.

(எ-டு) குணில், குக்கல், குற்றி, சிறுக்கன்.

9. (1) ஒப்புமை பற்றிச் சில பெயர்களை அடை சேர்த்து சேராமலும் உவமையாகு பெயராகவும் திரித்தும் வழங்கலாம்.

(எ-டு) ஈப்புலி, கரடிகை, பெருச்சாளி, மணிப்பவளம்.

(2) ஒப்புமை ஏதேனும் ஓர் இயல்பு பற்றி இருக்கலாம்.

(எ-டு) தோணிப் பாலம், ஆமை வடை.

10. ஓரினப் பொருள்களை அவற்றின் நன்மையும் தீமையும் பிற தன்மையும் குறித்த அடைகளைப் பொதுப் பெயருடன் சேர்த்துப் பிரித்துக் கூறலாம்.

(எ-டு) நல்ல துளசி, நாய்த் துளசி
நன்செய், புன்செய்
கரும்பு, பேய்க் கரும்பு.
கடலை-கொண்டைக்கடலை, வேர்க்கடலை, பட்டாணிக்கடலை.

11. (1) ஓரினப் பொருள்களைக் குறிக்க ஒரு பொருட் சொற்களையும் பயன்படுத்தலாம்.

(எ-டு) காற்று = wind, வளி = gas.

(2) ஆங்கிலச் சொற்களை ஒத்த தமிழ்ப் போலி யொலிகள் ஆங்கிலத்தோடொத்த பொருள்தரின் கொள்ளப்படலாம்.

(எ-டு) Parliament-பாராளுமன்று.
Bracket-பிறைக் கோடு.

12. ஆங்கிலச் சொற்களின் வேர்ப் பொருளை யறிந்து அதற் கேற்ப மொழி பெயர்க்கலாம்.

(எ-டு) Colemn-பிழம்பு.
Colonel-(The leader of a Column of Soldiers) பிழம்பர்.

13. சில ஆங்கிலச் சொற்களுக்குச் செம் மொழி பெயர்ப்புச் (Literal) செய்து கொள்ளலாம்.

(எ-டு) Inspect-உண்ணோக்கு
Inspection-உண்ணோக்கம்.
Inspector-உண்ணோக்காளர்.

14. சில சொற்கள் ஆங்கிலத்துக்கும் தமிழுக்கும் பொதுவாயி ருப்பதால், அவற்றை அங்ஙனமே வைத்துக் கொள்ளலாம்.

(எ-டு) Note-நோட்டு. நோடு-பார். நோடுவது-நோட்டு, நோட்டம்.

15. ஓர் ஆங்கிலச் சொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல்லை அவ் வாங்கிலச் சொல் குறிக்கும் பல பொருளிலும் வழங்கலாம்.

(எ-டு) Article = உருப்படி = 1) பொருள் 2) பண்டம் 3) செய்திப் பகுதி.

16. ஒரு பொருளின் பல கூறுகளைக் குறித்தற்கு ஒரு பொருட் பல சொற்களை ஆளலாம்.

(எ-டு) Pork = பன்றிக் கறி- L. Porcus, a pig.
தும்பிக்கை = யானைக்கை. தும்பி = யானை.

17. சில ஆட் பெயர்களையும், அவ்வாட்களைப் பற்றிய விதப்புச் செய்திகளைக் குறிக்கும் சொற்களாக வழங்கலாம்.

(எ-டு) Boycott, from captain Boycott who was excommunicated by his neighbours in Ireland in 1881.

18. சொற்களை இயன்ற வரை பொருள் மயக்கமின்றி அமைக்க வேண்டும்.

19. அயல் நாட்டினின்றும் வந்த பொருளுக்கு, அதன் அயன் மொழிப் பெயரே அமைய வேண்டும் என்பது யாப்புறவின்று.

(எ-டு) Ostrich = தீக்கோழி.
Cycle = மிதிவண்டி.

20. தமிழுக்கில்லாது பிறமொழிகட்குள்ள சொல்லாக்க முறைகளில், செந்தமிழ் இயல்பிற் கேற்றவற்றைத் தமிழிலும் தழுவிக் கொள்ளலாம்.

(1) ஆங்கிலத்தில் பெயர்ச் சொற்களை வினைச் சொற்களாகப் பயன்படுத்துவது பெரும்பான்மை. தமிழிலும் கரும்பு என்னும் சொல் கரும்பை அல்லது அது போன்றதைத் தின்பதைக் குறிக்கும் சொல்லாகவும் வழங்குகின்றது.

(2) தொடர்பினால், வழிவழி வெவ்வேறு பொருள்களைக் குறிக்கும் ஆகுபெயர் போன்றே, வெவ்வேறு வினைகளை அல்லது கருத்துக்களைக் குறிக்கும் ஆகு வினைகளுமுண்டு. ஆங்கிலத்திலுள்ள focus என்னும் சொல் இலத்தீனில் அடுப்பு என்னும் பொருளது. அது, ஆங்கிலத்தில் நெருப்பைச் செலுத்தல், ஒருபொருளைத் திருப்பல் என்னும் பொருள்களில் வினையாகவும் வழங்குகின்றது. இம்முறையில் தமிழிலும் சொற்களை வழங்கிக் கொள்ளலாம்.[1]

**பாவாணர் படைப்புச் சொற்கள் :**

6. பாவாணர் சுட்டியுள்ள இவ்விருபது நெறிமுறைகளின் படி எண்ணற்ற கலைச் சொற்களை அவரே படைத்துள்ளார். அவர்தம் பட்டறிவும் படைப்புத் திறனுமே நெறிமுறைகளாக வகுக்கப்பட்டன ஆதலின், அவை அவர்க்கு இயல்பாய் அமைந்தன. எப் புதுச் சொல்லுக்கும் உடனே மொழிபெயர்ப்புச் செய்தற்கும், எப் புதுப் பொருளுக்கும் உடனே மொழியாக்கம் செய்து தருதற்கும் விளையாட்டுப் போலப் பிறர் வியப்புறும் வண்ணம் செய்தற்கும் அவரால் இயன்றது. எண்ணற்றோர், எங்கெங்கிருந்தோ 'இச் சொல்லுக்குத் தமிழாக்கம் என்ன?' என்று கேட்டுக் கேட்டு மறுமொழி பெறும் நிலையும் இருந்தது! அவர் தம் கடிதங்களைத் தொகுத்து ஒழுங்குறுத்திப்பார்ப்பின் சில ஆயிரம் பிறமொழிச் சொற்களுக்குத் தமிழ்ச் சொல் கண்டு கொள்ள வாய்க்கின்றது!

**தமிழ்ப் பாவை :**

7. மதுரைத் தமிழ் எழுத்தாளர் மன்றச் சார்பில் பாவாணர் மணி விழாக் கொண்டாடப் பெற்றுப் பண முடிப்பும் வழங்கப் பெற்றது. பாவாணர், எழுத்தாளர் மன்றச் சார்பில் நடைபெற்று வந்த 'பாவை' இதழுக்குத் தம் படைப்புகளைத் தொடர்ந்து வழங்கி வந்தார். அவ்விதழில், கலைச் சொற்பட்டி ஒன்று வெளியிட விழைந்தனர். அப்

---

1. செந்தமிழ்ச் செல்வி 19 ; 234; 284 இன்றியமையாமை கருதிக் கட்டுரையின் பெரும் பகுதி தரப் பெற்றுள்ளது.

பொறுப்பைப் பாவாணர் பால் விடுத்தனர். தொடர்ந்து கலைச் சொற்கள் பன்னூற்றுக் கணக்கில் வழங்கினார் பாவாணர். ஒவ்வோர் இதழிலும் கலைச் சொற்கள் அகர முறையில் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன. அவற்றுள் எடுத்துக் காட்டாகச் சில சொற்களைக் காண்க.

| 7.1. வடசொல் | | தமிழாக்கம் |
|---|---|---|
| அலுவா (அல்வா) | — | தேங்கூழ் |
| அவதாரம் | — | தோற்றரவு |
| அன்னசத்திரம் | — | ஊட்டுப்புரை |
| ஆசங்கை | — | ஐயுறவு |
| ஆங்காரம் | — | செருக்கு |
| ஆசனம் | — | இருக்கை |
| ஆதரவு | — | தாங்கல், உதவி |
| ஆத்திரம் | — | பரபரப்பு |
| ஆயத்தம் | — | அணியம் |
| ஆரூடம் | — | குறிநூல் |
| ஆலிங்கனம் | — | தழுவுகை |
| ஆலோசனை | — | சூழ்வு |
| இதம் | — | நன்று |
| இரசவாதம் | — | பொன்னாக்கம் |
| இரசிகன் | — | சுவைஞன் |
| இரட்சித்தல் | — | மீட்டல் |
| இராசி | — | ஓரை |
| இருதுசாந்தி | — | கூடல்மணம் |
| இரேகை | — | வரி |
| இலகான் | — | கடிவாளம் |
| இலயம் | — | ஒன்றிப்பு |
| இலாடம் | — | குளம்பாணி |
| உக்கிராணம் | — | சரக்கறை |
| உபதேசம் | — | ஓதுகை |
| உயிர்ப்பிராணி | — | உயிரி |

-இவை வடசொல் தமிழாக்கத்தில் இருந்து எடுத்த இருபத்தைந்து சொற்கள். [இவை பன்னூற்றுக் கணக்கில் வந்துள][1]

1. தமிழ்ப்பாவை-மாதிகை. 3:5 முதல்.

| 7.2. ஆங்கிலம் | | தமிழ் |
|---|---|---|
| Advisory Board | — | அறிவுரைக்குழு |
| Alliance | — | நேசக்கூட்டு |
| Agencies | — | முகவாண்மைகள் |
| Agenda | — | நிகழ்ச்சிக் குறிப்பு |
| Cell | — | புரை, கண்ணறை |
| Cement | — | சுதைமா |
| Bill of exchange | — | புரிமாற்றப்பட்டி |
| Balance sheet | — | மீத்தக்கணக்கேடு |
| Badge | — | சின்னம், குத்தி |
| Bail | — | பிணை |
| Bonus | — | நன்னர் |
| Balcony | — | பலகணி, பலகணி முற்றம் |
| Charge | — | பொறுப்பு |
| Choice | — | உகப்பு, தெரிப்பு, |
| Calandar | — | ஐந்திறம், நாளேடு |
| Campus | — | வளாகம் |
| Contractor | — | குத்தகையாளர் |
| Conductor | — | நடத்தாளர் |
| Casual leave | — | நேர்ச்சி விடுமுறை |
| Condition | — | நிலைப்பாடு, நிலைமை |
| Courage | — | திடாரிக்கம் |
| Coffee | — | குளம்பி |
| Credit Note | — | கடன் ஒலை |
| Counter | — | எண்ணி |
| Coupon | — | கிழிப்பம். |

—இவை ஆங்கிலம் தமிழாக்கத்தில் இருந்து எடுத்த இருபத்தைந்து சொற்கள். (இவை பன்னூற்றுக் கணக்கில் வந்துள)[1]

**தென்மொழி:**

8. சமற்கிருதம் வடமொழி எனப்பட்டதால், தமிழ் தென்மொழி எனப்பெற்றது. தென்மொழி என்னும் பெயரால் தனித்தமிழ் இதழ் பாவாணரைச் சிறப்பாசிரியராகக்கொண்டு பாவலர் பெருஞ்சித்திரனார் அவர்களால் வெளிப்பட்டுச் சிறப்பாகக் கடனாற்றிவருதலை நாடறியும்.

---

1. தமிழ்ப்பாவை—மாதிகை. 7:8 முதல்.

8.1. பாவாணர் படைப்புகளைப் போற்றித் தமிழ் கூறும் நல்லுலகப் பொருளாக்கி வைத்தது செந்தமிழ்ச்செல்வி என்னும் மாதிகையும் அதன் ஆசிரியர் தாமரைச் செல்வர் சுப்பையா பிள்ளையும் எனின், பாவாணர் படைப்புகளை நன்கனம் பரப்பி, அவர்மேல் மட்டற்ற பற்றுமை கொண்ட அணுக்கத் தொண்டர் பலரை ஆக்கிய பெருமையும், உலகத் தமிழ்க் கழகம் என்னும் ஓர் அமைப்பை உருவாக்கிய பெருமையும் தென்மொழியையும் அதன் ஆசிரியர் பெருஞ்சித்திரனாரையும் சாரும். அவ்விதழில் பாவாணர் கட்டுரைகள் தொடர்ந்து வந்தன; அவர்தம், 'அண்ணாமலைப் பல்கலைக் கழக வாழ்வு' தொடர் கட்டுரையாகவும் வெளியிடப்பட்டது. அத் தென்மொழிக் கட்டுரைகளுள் ஒன்று, ''தமிழ் கடன்கொண்டு தழைக்குமா?'' என்னும் பெயரியது.[1] அக்கட்டுரைச் செய்திகள் என்றும் போற்றிக் கொள்ளத் தக்கனவாம். அதனால் உ. த. க. முதன் மாநாடு பறம்புக்குடியில் நிகழ்ந்தபோது[2] தனிநூலக வெளிவந்தது. வெங்காலூர்த் தமிழ்ச் சங்கத்தில் பாவாணர் படத்திறப்பு விழா நிகழ்ந்த போதும்[3] தனிநூலாக வெளியிடப்பட்டது. அதற்கு முன்னே முதன் மொழி மாதிகையிலும் வெளிவந்தது.

8.2. 'தமிழ் கடன் கொண்டு தழைக்குமா?' என்னும் கட்டுரையால், பிறரிடம் கடன் கொள்ள வேண்டாத பெருஞ் செல்வர் போல் தமிழும் பிறமொழிகளினின்று சொல்லைக் கடன் கொள்ளாது என்றும், அயற் சொற்களை எல்லாம் இயன்றவரை மொழிபெயர்த்தல் வேண்டுமென்றும், மொழி பெயர்க்க முடியாதவற்றிற்குப் புதுச் சொற்களைப் புனைந்து கோடல் வேண்டுமென்றும், அதுவும் இயலாத ஒரு சில இன்றியமையாத சொற்களைத் தமிழ் எழுத்திற்கேற்பத் திரித்து வழங்குதல் வேண்டுமென்றும், பிறமொழிகளிலுள்ள அரிய நூல்களை மொழி பெயர்ப்பதே தமிழை வளப்படுத்தத் தலைச்சிறந்த வழியென்றும், பிறமொழிச் சொற்களைக் கட்டுமட்டு இன்றித் தமிழிற் கலப்பது அதன் கேட்டிற்கே வழி கோல்வதாகும் என்றும், இதுவரை தமிழிற் புகுத்தப்பட்ட எல்லாச் சொற்களும் தமிழதிகாரிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டன அல்ல என்றும், அவற்றை இயன்றவரை விலக்கித் தமிழின் தூய்மையைக் காப்பது தமிழறிஞரின் தலையாய கடனென்றும், நேர்நின்று காக்கை வெளிது என்பாரும் தாய்க்கொலை சால்புடைத் தென்பாரும் தமிழை யொழிக்கத் தயங்காராதலின், அவர் தமிழுக்கு மாறாக் கூறும் கூற்றையெல்லாம் 'கூற்று' என்றே கொள்ளுதல் வேண்டுமென்றும் தெளிவாக விளக்கியுள்ளார்.

---

1. தென்மொழி—மாதிகை. 1.8. 1959.
2. 1. 8. 1999.
3. 17. 10. 1982.

8.3. ''சொல்லும் பொருள்போல் ஒரு செல்வமே. ஒரு செல்வன் பொருளாற்பெறும் நன்மையை ஒரு புலவன் சொல்லாற் பெறுகின்றான். முன்னோர் ஈட்டிய செல்வத்தைப் பெருக்குவதற்குப் பின்னோரும் ஈட்டுவது போல், முன்னோர் ஆக்கிய மொழியை வளம் படுத்தற்குப் பின்னோரும் புதுச் சொற்களை ஆக்குதல் வேண்டும். இங்ஙனம் செய்யாது பிறமொழிச் சொற்களையே வேண்டாது கடன் கொள்பவர், தானும் தேடாது முன்னோர் தேட்டையும் கடனால் இழக்கும் முழுச் சோம்பேறியை ஒப்பர்'' என்று புதுச் சொல்லாக்கத்தில் அறிவறிந்தோர் தலைப்பட ஏவுகின்றார்.

8.4. ''சிலர், கார் பஸ் ரோடு முதலிய சொற்கள் தமிழில் கலந்து விட்டதால் விலக்கக் கூடாது என்பர். அதனை, அவை கலக்க வில்லை என்றும், உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே ஆதலால் உயர்ந்த புலவோர் வழக்கில் ஊன்ற வில்லை என்றும், மொழி திருந் தாதார் வழங்கும் கார், பஸ் முதலிய சொற்களைத் தமிழ்ச் சொல்லாக ஏற்றுக் கொள்வது கீழ்மக்களின் ஐம்பெருங் குற்றங்களை நல்லொழுக்க மாக ஒப்புக் கொள்வது போன்றதே என்றும் மறுத்துரைத்து நெறி காட்டுவார்.

**முதன்மொழி :**

9. முதன்மொழி இதழ் பாவாணரைச் சிறப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்த மாதிகையாகும். அதன் ஆசிரியர் பேரா. தி. வை. சொக்கப்பனார். உறுப்பாசிரியர் அரிமாப் புலவர் திரு. மி. மு. சின்னாண்டார். அவ்விதழிலும் பாவாணர் கட்டுரைகள் வந்துள. வடசொல் தென்சொல் ஆக்கமும் குறிப்பாகத் திருக்கோயில்களில் தமிழ்ச் சொற்கள் என ஒரு வரிசை வந்தது. கதிர் 1, மணி 3-இல் மதிப்படைச் சொற்கள் பட்டியும் விளக்கமும் வந்தன. அவற்றுள் சில:

| **பெயர்** | **அடைச்சொல்** |
|---|---|
| மணமாகாத இளைஞன் பெயருக்குமுன் | குமரன் (Master) |
| மணமாகாத இளைஞை பெயருக்குமுன் | குமரி (Miss) |
| இளந்தை (youth) கடந்த ஆடவன் பெயருக்குமுன் | திருவாளன் (Mr.) |
| இளந்தை கடந்த பெண்டின் பெயருக்குமுன் | திருவாட்டி (Mrs.) |
| கண்ணியம் வாய்ந்த ஆடவன் பெயருக்குமுன் | பெருமான் |
| கண்ணியம் வாய்ந்த பெண்டின் பெயருக்குமுன் | பெருமாட்டி |

**அரசினர் வழங்கும் பட்டங்களான அடைச்சொற் பெயர்ப்பு :**

| பட்டம் | பெயர்ப்பு |
|---|---|
| பத்மஸ்ரீ | தாமரைத்திரு |
| செர் (Sir) | வயவர் |
| ராஜா செர் (Rajah Sir) | அரசவயவர் |
| ராய் பஹதூர் | அரைய ஆண்டகை |
| ராவ் பஹதூர் | அராவ ஆண்டகை |
| திவான் பஹதூர் | அமைச்ச ஆண்டகை |
| ராவ் சாஹிப் | அராவ அண்ணல் |

**அரசியற் பதவிகள் பற்றிய முன்னடைகள்**

| | | |
|---|---|---|
| The Hon'ble | — | பெருந்தகை |
| The Rt. Hon'ble | — | மாபெருந்தகை |
| His worship | — | வணங்குதகை |
| His Lordship | — | குருசில்தகை |
| His Excellency | — | மேன்மைதங்கிய |
| His Highness | — | உயர்வுதாங்கிய |
| His Majesty | — | மாட்சிமைதங்கிய |

**மதவியல் பற்றிய முன்னடைகள்**

| | | |
|---|---|---|
| Rev. | — | கனம் |
| Rt. Rev. | — | மாகனம் |
| His Grace | — | அருட்டிரு |
| His Holiness | — | தவத்திரு |

**மூல ஆவணம் :**

10. எத்துணையோ மலர்களில் பாவாணர் சொல்லாய்வுக் கட்டுரைகள் வந்துள. நூல்களில் இடம் பெறாத குறிப்புகளும், சொல்லாக்கங்களும் அவற்றில் உண்டு. அவர் எழுதிய கடிதங்களில், ஒருபாதியிலேனும் சொல்லாய்வுக் குறிப்புகள் இடம் பெற்றுள. அவற்றை எல்லாம் முழுதுறத் தொகுத்தல் வேண்டும். இவையெல்லாம் ஆய்வாளர்க்குப் பாவாணரை முழுதுறக் காட்ட வல்ல மூல ஆவணங்களாம் என்பது உறுதி.

# 14. முதலும் முடிவும்

**மொழியாராய்ச்சி :**

1. பாவாணர் தொடக்கத்தில் ஆங்கிலத் தேர்ச்சியையே பெரிதும் கருதினார் என்றும் இசைப்பாக்கள் இயற்றுதலிலும், இசைக் கருவிகள் மீட்டுதலிலும் ஈடுபட்டிருந்தார் என்றும், பின்னே தமிழில் ஆழமுழுகி ஆய்வதற்குத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வின் வெற்றி தூண்டிய தென்றும் அறிந்துள்ளோம். அந்நாளில் அவர்தம் படைப்புகளுள் பாக்களே முனைப்பாக இருந்ததென்றும் அதன் கரணியமாகவே 'கவிவாணர்' என்னும் பாராட்டுப் பெற்றார் என்றும் தெரிந்துள்ளோம். ஆனால், அவர்தம் ஆய்வுப் படைப்புகளுள்—உரை நடையில் வரைந்தவற்றுள்—முற்பட்டதாக அறியப்பெறும் கட்டுரை 'மொழியாராச்சி என்பதேயாம்.

1.1 மொழியாராச்சி செந்தமிழ்ச் செல்வி ஒன்பதாம் சிலம்பு, ஆறாம் பரலில் வெளிப்பட்டது. அது 1931-ஆம் ஆண்டு சூன்-சூலைத் திங்கள் ஆகும். அப்பொழுது பாவாணர் அகவை 29 ஆகும்.

பாவாணரின் இறுதிக் கட்டுரை, ''உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு'' என்னும் கட்டுரையாகும். இக்கட்டுரையும் செந்தமிழ்ச் செல்வியிலேயே சிலம்பு ஐம்பத்தைந்து, பரல் நாலில் வெளிவந்தது. 1980 ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் வெளியீடு அது.

1.1.1 கட்டுரையளவில் பிற்படவரைந்தது ஈதே ஆயினும் முற்பட எழுதி ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு மதுரை மாநகரில் 4-1-1981 இல் தொடங்கிய போது வெளியிடப்பட்ட மலரில் இடம் பெற்றதும், பாவாணரால் மாநாட்டரங்கில் படிக்கப் பெற்றதும் ஆகிய கட்டுரை 'தமிழனின் பிறந்தகம்' என்பதாம்.

1.1.2. தமிழனின் பிறந்தகம் பற்றிய கட்டுரைப் பொழிவின் விளக்கம் கூறிக் கொண்டிருக்கும் போதே (5-1-81-இல்) மாரடைப் பால் தாக்குண்டு 15-1-81-இல் பேரா இயற்கையுற்றமையால், அவர் படித்த கட்டுரை என்னும் அளவில் இறுதியானது அக்கட்டுரையே யாம். செல்வியில் வந்த அவர் கட்டுரைகளுள் இறுதியானதும்[1] அதுவேயாயிற்று. பாவாணரின் முதற் படைப்பும் இறுதிப்படைப்பும் ஒப்பிட்டு நோக்குதலே இம் முதலும் முடிவுமாம்.

---

1. ''உயர்திரு பாவாணர் அவர்களின் கட்டுரைகள் தொடர்ச்சியாகச் செல்வியில் வெளியிடப்பட்டு வந்ததை அன்பர்கள் அறிவார்கள். அவரது மறைவுக்குப்பின் வெளிவரும் இவ்விதழில் அவரது நினைவாக, அவர் உலகத் தமிழ் மாநாட்டில் படித்த இவ் ஆராய்ச்சிக் கட்டுரையினை மாநாட்டுச் சிறப்பு மலரினின்று எடுத்து வெளியிடுகிறோம்'' என்பது செல்வி ஆசிரியர் குறிப்பு. (55:256)

**பேரிடைவெளி:**

2. முதற் கட்டுரைக்கும் முடிவுக் கட்டுரைக்கும் இடைப்பட்ட யாண்டுகள் 50. முன்னது 1931: பின்னது 1981.

முதற் கட்டுரையின் போது பாவாணர் அகவை 29. முடிவுக் கட்டுரையின் போது அவர் அகவை 79.

''பாளையாம் தன்மை செத்தும்
பாலனாம் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்
மீளுமிவ் வியல்பு மின்னே
மேல்வரு மூப்பு மாகி
நாளுநாம் சாகின் றேமால்
நமக்குநாம் அழாத தென்னே''

என்னும் பாட்டில்[1] பருவச் சாக்காடுகள் சுட்டப்பட்டுள்ளன. அப் பருவச் சாக்காடுகளின் சாக்காடு மட்டும் தாம் சுட்டப்பட்டனவா? பருவக் கருத்துச் சாக்காடும் சுட்டப் பெறாவா? பன்னீராண்டுகளுக்கு ஒருமுறை கருத்துத் திருப்பங்கள் பகுதியாகவோ, முழுவதுமாகவோ ஏற்படுதல் உண்டெனக் கூறுவது உண்டு அல்லவா? அதன் அடிப் படையில் தானே, ஓர் உரிமையை நிலைப்படுத்தப் பன்னீராண்டுக் கால எல்லை வேண்டும் என்றும், பன்னீராண்டுக்கு ஒருமுறை கோள் களின் முழுச்சுழல்வாம் என்றும், வாணாள் சிறைத் தண்டனை என்பதும் பன்னீராண்டே என்றும் நாட்டு நடைமுறைகள் உள. இப்பொது வியற்படி பாவாணரை நோக்கினால்—அவர் படைப்பு களைக் கொண்டு நோக்கினால் கிடைக்கும் உண்மைகள் எவை?

**மொழியாய்வின் மூலப்பொருள்:**

3. முதற் கட்டுரையின் பொருளை அறிந்து கொண்டால் அதனை அளவு கோலாகக் கொண்டு முடிவுக் கட்டுரையை அளக் கலாம் அல்லவோ? அவர்தம் அடிப்படை ஆய்வு உறைப்பாகியதா? ஒதுங்கிச் சென்றதா? தடமே புரண்டதா? எதிரணிக்குத் தாவியதா? இன்னவற்றைக் கண்டறிய ஏந்தாக வாய்ப்பது—அளவு கோலாக அமைவது அக்கட்டுரையே அன்றோ?

1. குண்டலகேசிப் பாட்டு.

# மொழியாராய்ச்சி
(Comparative Philology)
[வித்துவான் G. தேவநேசன் அவர்கள்]

3.1.1. உலகத்திலுள்ள மொழிகளெல்லாம், Turanian, Semitic, Aryan என முப்பெருங் கவைகளாயடங்கும். இவற்றுள் ஒவ்வொரு கவையும் பற்பல கிளைகளாய்ப் பிரியும். ஒவ்வொரு கிளையும் ஒவ்வொரு மொழித் தொகுதியாகும். இவற்றுள், துரேனியக் கவையில் திராவிடக் (Dravidian) கிளைக்குத் தலைமையாகக் கருதப்படுவது அமிழ்தினும் இனிய தமிழ் மொழியே.

3.1.2. ஒருமரத்தில், சிறு கிளைகட்கு நேர் இயைபு இன்றேனும் அவற்றைத் தாங்கும் பெருங்கவைகட்கு அடிமரத்துடன் நேர் இயைபு இருப்பதுபோல, உலக மொழித் தொகுதிகட்குள் சிறு பிரிவுகட்கு நேர் இயைபு இன்றேனும் அவற்றிற்கு மூலமான பெரும் பிரிவுகட்கு நேரியைபு திட்டமாயுள்ளதாம். எல்லாக் கிளைகட்கும் மூலமான ஓர் அடிமரம் இருப்பதுபோல் எல்லா மொழிகட்கும் மூலமான ஒரு தாய் மொழியும் இருத்தல் வேண்டும். உலகத்திலுள்ள மக்களெல்லாம் ஒருதாய் வழியினராதலின் அவர் வழங்கும் மொழிகளும் ஒருதாய் வயிற்று மொழியாதல் வேண்டும்.

3.1.3. உலகத்தின் மக்கள் முதல் முதல் தோன்றின இடம் கி. மு. 2000 ஆண்டுகட்குமுன் இந்துமகா சமுத்திரத்தில் அமிழ்ந்து போனதும் தலைச்சங்கம் இருந்ததுமான குமரி நாடே. ஆஸ்திரேலியா தென்னிந்தியா, தென்னாப்பிரிக்கா என்ற மூன்றும் ஆதியில் நிலத்தால் இசைந்திருந்தன வென்று மேனாட்டுப் பண்டிதர்கள் கண்டவுண்மையே இதற்குப் போதிய சான்றாம். ஆகவே மக்கள் முதன் முதற்பேசிய மொழி தமிழே யாதல் வேண்டும்.

3.1.4. எல்லா மொழிகளும் இயற்கை செயற்கையென இரு பாலாய் அடங்கும். இவற்றுள் தமிழ் ஒன்றுமே இயற்கை. ஏனைய வெல்லாம் செயற்கை. ஆதலான், தமிழ் இயன்மொழி (Primitive Language) என்றும் ஏனைய திரிமொழி (Derivative Language) என்றும் கூறப்படும். எல்லா மொழிகட்குமுள்ள பெரும்பாற் சொற்களைப் பகுதிப் பொருளுடன் இயற்கை வடிவில் வழங்குவது தமிழேயென்று மொழி நூலால் (Philology) விளங்குகின்றது. அவற்றுள் ஆங்கிலம் (English) கிரேக்கு (Greek) லத்தீன் (Latin) என்ற மும்மொழிகளிலும் சென்றுவழங்கும் தென்சொற்கள் ஆயிரக் கணக்கின என்பதை ஐந்நூற்றுக்கு மேற்பட்டவற்றால் வெள்ளிடைமலைபோல் தெள்ளிதிற் காட்டுதும்.

3.1.5. முதற்கட்டுரைச் செய்திகள் இவையே. மேலே காட்டுவன அனைத்தும் அகர முறையிற் சொற்கோவையே.

(எ-டு) Abba — அப்பன் (தொடக்கம்)
Axle — அச்சு
Babe — பார்ப்பு, பாப்பா
Chew — சவை
Cry — கரை
Kid — குட்டி
Murmur — முறுமுறு
Sign — சின்னம்
Tank — தாங்கல்
War — போர்
Zenith — சென்னி.

இவ்வாறு எடுத்துக் காட்டாகக் காட்டப்பட்டுள்ள சொற்கள்: 598 ஆகும்.

**தமிழனின் பிறந்தகம் :**

4. தமிழனின் பிறந்தகம் என்னும் இறுதிக் கட்டுரையோ, 'மொழி ஞாயிறு தேவநேயன்' பெயரால் வருகின்றது. பாவாணர் குறிப்பது ஞா. தேவநேயன் என்ற அளவேயாம். கடிதங்களில் 'ஞா. தே' அளவில் அமைவதும் அவர்க்கு வழக்கம்.

4.1. ''ஒருவீட்டிற்கு ஆவணம் போன்றே, ஒரு நாட்டிற்கு வரலாறு உரிமைச் சான்றாகும். ஆயின், ஓர் ஆவணத்தில் எதிரிகளால் ஏதேனும் கரவடமாகச் சேர்க்கப்படலாம். அதுபோன்றே, ஒரு நாட்டு வரலாறும் பகைவரால் அவர்க்கேற்றவாறு மாற்றப்படலாம். ஆதலால், இவ்விரு வகையிலும் உரிமையாளர் விழிப்பாயிருந்து தம் உரிமையைப் போற்றிக் காத்துக் கொள்ளல் வேண்டும்'' என்பது கட்டுரைக்கு முன்னுரை போலும் பகுதி.

4.1.1. இந்தியவரலாற்றைத் தெற்கில் இருந்து தொடங்க வேண்டும் என்னும் போரசிரியர் சுந்தரம் பிள்ளை கருத்தை வின்சென்று சிமிது சுட்டிக் காட்டி ஏற்பதையும் அம்முறையில் பி. டி. சீநிவாசையங்காரும், வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதரும் தமிழக வரலாற்றுக்குச் சான்றாக இருப்பது மொழியே என்பதையும் சுட்டிக் காட்டும் பாவாணர், இற்றை இலக்கியச் சான்றுகள் என்னும் தலைப்பில் வரைகின்றார்.

4.1.2. ''தமிழ் தோன்றியது தென்மாவாரியில் முழுகிப்போன குமரிநாடே. ஆதலால் தமிழன் தோன்றியது அந்நாடே'' என்னும் பாவாணர் மொழியியற் சான்றுகள் இவையெனக்குறிக்கின்றார்:

4.1.3 தமிழும் அதன் திரிபான திரவிடமொழிகளும் இந்தியா விற்குள்ளேயே வழங்குதலும், அவற்றுள் இலக்கியமுள்ள முதன்மை யான நான்மொழியும் தென்னிந்தியாவிற்குள்ளேயே வழங்குதலும், அவற்றுள்ளும் தலைமையான தமிழ் தென்கோடியில் வழங்குதலும் அதன் வழக்கும் தெற்கிற் சிறந்திருத்தலும் வடக்கே செல்லச் செல்ல ஏனைத் திரவிட மொழிகள் இலக்கணமின்றியும் இலக்கியமின்றியும் பண்பாடின்றியும் சொல்வளமின்றியும் கொச்சையாகியும் மேன் மேலும் சிறுத்தும் சிதைந்தும் கலவையாகியும் போவதும், இந்தியா விற்கு வெளியே சிதைந்த தமிழ் அல்லது திரவிடச் சொற்களன்றி மொழியேதும் வழங்காமையும்.

2. இந்தியின் அடிப்படைச் சொற்கள் சிதைந்த தென் சொல்லா யிருத்தல்.

**முதல் கருப்பொருட் சான்றுகள்:**

4.1.4. காலவேறுபாடும் இயற்கை நிலைமைகளும் உயிரின வகைகளும் விளைவுப் பொருள்களும் தொன்று தொட்டு மாறா திருந்து வருதல்.

சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள காரோதிமம் (காரன்னம்) இன்று ஆத்திரேலியாவிலும் தாசுமெனியாவிலும் மட்டும் இருத்தலும் தென்றிசைப் பெயருக்குக் காரணமான தென்னைமரம் தென்கிழக்குத் தீவுகளில் மட்டும் இயற்கையாக வளர்தலும்.

**மறுப்பீற்கு மறுப்பு**

4.1.5. மேனாட்டு இடப்பெயரீடு கட்குத் தமிழிலேயே பொரு ளிருத்தலாலும், குமரி நாட்டிலிருந்து நன்னிலக் கடற்கரை நாட்டிற்கு முதற்கண் சென்ற மக்கள் நீள் மண்டையராய் இருந்ததனாலும், ஊர் என்னும் மருத நிலக் குடியிருப்புப் பெயர் குமரி நாட்டிலேயே தோன்றியமையாலும் பருங்கற் கட்டட அமைப்பே சிறுகற் கட்டட அமைப்பிற்கு முந்துவது இயற்கை ஆதலாலும் இலாகோவாரி (Lohovary), பாலகிருட்டிணன் நாயர் முதலியோர் தமிழின் அல்லது தமிழரின் தொன்மையை மறுப்பது அறியாமை பற்றியதே என்று கூறி விடுக்க.

**முடிந்த முடிபு.**

4.1.6. தமிழ், தென்னாட்டிற்கும் தெற்கில் தென் மாவாரியில் முழுகிக் கிடக்கும் தென்கண்டத்தின் தென்கோடி நாடான தென் பாலியில் தோன்றிய தென்மொழியே. அதனால் அதனைத் தோற்றி வளர்த்த தமிழன் பிறந்தகமும் அத்தென்புலமே.

**முதலும் முடிவும்:**

5. முதற் கட்டுரைக்கும் முடிவுக் கட்டுரைக்கும் கருத்தில் வேற்றுமை இல்லையே! சொல்லாட்சியில் வேறுபாடு உண்டு. நடையமைப்பில் வேறுபாடு உண்டு. வடவெழுத்து தமிழெழுத்துப் பயன்படுத்துதலில் வேறுபாடு உண்டு. கருத்தில் வேறுபாடு இல்லை. மாறுபாடு இருக்கவும் முடியுமோ, வேறுபாடும் இல்லாத போது?

5.1. முதற் கட்டுரையில், 'மக்கள் தோன்றிய இடம் குமரி நாடே' என்பதும், 'அம்மக்கள் பேசிய மொழி தமிழே யாதல் வேண்டும்' என்பதும் குறிக்கப்பட்ட செய்திகள்.

முடிவுக் கட்டுரையில், 'தமிழ் (குமரி நாட்டுத்) தென்பாலியில் தோன்றியது' என்பதும் 'அத் தமிழைத் தோற்றி வளர்த்த தமிழன் பிறந்தகம் அத்தென்புலமே' என்பதும் குறிக்கப்பட்ட செய்திகள்.

முதற் கட்டுரையில் ஒப்பியற் சொற்களை நிரலுறுத்திக் கருத்தை நிறுவினார். முடிவுக்கட்டுரையில் வரலாற்றுச் சான்று, மொழியியற் சான்று, திணைநூற் சான்று ஆயவற்றை யெல்லாம் எடுத்துக்காட்டி நிறுவினார். 50 ஆண்டுகளின் விளைவு இவ்விளக்கங்களாம்.

முதற் கட்டுரையில் வடசொற்கள் உண்டு; வடவெழுத்துக் கலப்பு உண்டு; ஆங்கிலச் சொல் வாக்கிய உருப்படியில் இடம்பெறுதல் உண்டு. இவையெல்லாம் முடிவுக் கட்டுரையில் போன இடமும் தடமும் இல்லாமல் ஒழிந்தன. உன்னித்து நோக்க வேண்டிய குறிப்பு ஈதாம்.

முதற் கட்டுரையிலேயுள்ள கருத்து அன்றிக், 'கவை' 'கிளை' இயைபு, பிரிவு, குமரிநாடு, இருபால், ஏனைய, மொழிநூல், இயன் மொழி, தென்சொல் என்பவற்றில் பாவாணர் புன்முறுவல் பூக்கிறார்.

5.2. இந்துமகா சமுத்திரம், தலைச்சங்கம், ஆதி, கிரேக்கு லத்தீன், பண்டிதர், ஆஸ்திரேலியா இச்சொல்லாட்சிகள் முதிர்ந்த பாவாணரிடத்து மறந்தும் தலைக் காட்டமுடியுமோ?

ஆத்திரேலியா, தாசுமேனியா, இலாகோவாரி என்பவை தமிழ் மரபில் ஆளப்படுகின்றனவே. இந்துமகா சமுத்திரம் 'தென்மாவாரி' யாகிவிடுகின்றதே. 'தோன்றின இடம்' என்பது 'பிறந்தக'மாகச் சிறக்கின்றதே! அன்னம் வடசொல் என்பதால் சிலப்பதிகாரத்தில் காரன்னம் எனச் சொல்லப்பட்டிருந்தும் அப்படியே வழங்காமல் 'காரோதிமம்' எனத் திகழ்கின்றதே! இவைதாமே பாவாணர் எச்சங்கள்! தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சம் தாமே காட்டும்?

**ஆய்வின் ஒருமை:**

6. பாவாணர் தம் ஆழ்ந்து அகன்று நுண்ணிய ஆய்வால் அல்லது நுண் மாண் நுழை புலத்தால் கண்டவை எவை?

1. தமிழே உலக முதல் உயர் தனிச் செம்மொழி அஃது உலக மொழிகளுக்குத் தாயும் ஆரிய மொழிக்கு மூலமுமாம்.

2. முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக் கண்டமே; அதுவே தமிழன் பிறந்தகம்.

3. மொகஞ் சொதரோ அரப்பா நாகரிகம் பழந்தமிழர் நாகரி கமே என்பவையாம்.

6.1. இம்மூன்றனுள் முன்னை இரண்டும் முதற் கட்டுரை யிலேயே காட்சி வழங்குகின்றனவே. புகை புகாத இடத்தும் புலவன் நுழைவர்ன் என்பதும், ''புறக் கருவி கொண்டு ஆய்கின்றான் விஞ்ஞானி; அகக்கருவி கொண்டு ஆய்கின்றான் மெய்ஞ்ஞானி; ஆயின் இருவர் முடிவும் ஒன்றாகவே அமைகின்றன'' என்பதும் மொழிநூல் துறையில் பாவாணரால் மெய்ப்பிக்கப்பட்டிருத்தல் கண்கண்ட உண்மையே யாம். இக்கருத்தின் மெய்ம்மையில் பாவாணர் தெளிவு டனும் உறுதியுடனும் இருந்தார்!

6.2. ''தமிழன் பிறந்தகம் மாந்தன் பிறந்தகமாகிய குமரி நாடே என்னும் அடிப்படை யுண்மை, இம்மாநாட்டில் அறுதியும் இறுதியும் உறுதியுமாக முடிவுறல் வேண்டும்.''

அம்மட்டோ?

6.2.1. ''அடுத்த மாநாடு 1985 இல் வட ஆப்பிரிக்கச் செனகெல் (Senegal) நாட்டில், அதன் குடியரசுத் தலைவர் மேன்மை தங்கிய லியபோல் செங்கோர் தலைமையில் நடைபெறல் வேண்டும். அதற்குத் தமிழ் நாட்டுப் புலவர் குழுவை முதலமைச்சரே நடத்திச் செல்லல் வேண்டும். அம்மாநாட்டில், தமிழே உலகமுதன் மொழி யென்றும் ஆரியத்திற்கு அடிமணை என்றும் இந்திய நாகரிகம் தமிழரது என்றும் யாம் (பிறரும் யானும்) ஐயந்திரிபற நாட்டுவேம். அதை இந்தியா, செருமனி, பிரெஞ்சு, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய பன்னாட்டு ஆரியப் புலவரும் பட்டிமன்றத்தில் எதிர்க்கலாம். இறைவன் அருளால் அப்போலி எதிர்ப்பை எல்லாம் தவிடு பொடி யாகத் தகர்த் தெறிவேம்.

6.2.2. ''பேரன் சேயானை அதாவது பாட்டனைப் பெற்ற பூட்டனைப் பெற்றான் என்பதுபோல் ஆரியத்தினின்று தமிழ் பிறந்த தென்பதும்; முட்செடியில் முந்திரிப்பழம் பழுத்தது என்பதுபோல், ஆரியச் சிறுதெய்வ வணக்கத்தினின்று சிவதிருமாற் பெருந்தேவ

மதங்கள் திரிந்தன என்பதும்; மரப்பாவை ஓர் உயிர் மகவை ஈன்றது என்பதுபோல், பாணினீயத்தினின்று தொல்காப்பியம் தோன்றிற் றென்பதும் அன்றோடொழிதல் வேண்டும்! ''[1] இவை பாவாணரின், உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாடு என்னும் கட்டுரையில் இடம் பெற்றுள்ள செய்திகள்.

பாவாணர் தம் சொல்லாய்வுத்திறமே இவ்வுண்மைகளை அவர்க் குக் காட்டிற்று என்பதாலும், அதனைக் கொண்டே மாறுபட்டாரை அவர் வாகை கொள்ளும் வழிதுறைகளை மேற்கொள்வதாலும் பாவாணரின் சொல்லாய்வுப் பொருள் வழியதே இம் முதலும் முடிவும் என்னும் பகுதியாம் என்க. ஒருமை மாந்தர் இயற்கை ஈதே போலும்!

## 15. தேவநேயம்

### தேவநேயர் படைப்புத்திரட்டு :

1. தேவநேயர் படைப்பாக்கங்களை எல்லாம் ஒருங்கு திரட்டி ஓரடைவு செய்தால் அது தேவநேயமாகத் திகழும். ஆசிரியர் தொல் காப்பியனார், தொல்காப்பியத்தால் நம்முடன் ஒன்றி உறைந்து உடனாகித் திகழுமாப் போலத் தேவநேயத்தால் தேவநேயரும் தம் மொடும் ஒன்றி உறைந்து உடனாகித் திகழ்வார்.

1.1. தேவநேயரின் அகரமுதலி அவராலேயே முற்றுற முடிக்கப் பெற்றிருப்பின், மற்றொன்று வேண்டா என்னும் நிலையில் அஃ தொன்றே தேவநேயமாகத் திகழ்ந்திருக்கும்! அதனைப்பெறும் பேறு தமிழ்மண்ணுக்கு வாய்க்காமையால் கிடைத்த, கிடைக்கின்ற - அளவி லேனும் தேவநேயத்தை உருவாக்கி விடுதல் வேண்டும். அதனை உருவாக்குதல் எவ்வண்ணம்?

1.2. தேவநேயர் படைப் பெல்லாம் சொல்லாய்வாகவே வெளிப் பட்டவை. அவர் எப்பொருளை எடுத்துக் கொண்டு பேசினாலும் எழுதினாலும் அவர்க்கு முந்துற நிற்பது சொல்லாய்வே! சொல்லாய்வு இல்லாத உரையாட்டும் கூட அவர் மாட்டு அமைந்தது இல்லை! ஆகலின் அவர்தம் படைப்புகளில் உள்ள சொல்லாய்வுக் குறிப்புகளை எல்லாம் அகர முறையில் தொகுக்க வேண்டும். அவர் வேர்கண்ட சொற்களுக்குவேர், விளக்கங்கண்ட சொற்களுக்கு விளக்கம், ஒப்புமை கண்ட சொற்களுக்கு ஒப்புமை, பொருள் மட்டும் கூறிய சொற்களுக்குப்

1. செந்தமிழ்ச் செல்வி 55-154-5.

பொருள் சொல்லாக மட்டும் வாளா சொல்லி வைத்திருப்பினும் அச்சொல் ஆகிய எல்லாவற்றையும் தொகுத்து அகர முறையில் அமைத்தல் வேண்டும்.

**அகரமுதலி இயக்ககப்பணி :**

2. வடமொழியைத் தென்மொழி ஆக்கமாக்கிய தாயினும் சரி, ஆங்கிலத்தைத் தமிழாகப் பெயர்த்த தாயினும் சரி, புதிதாகப் படைத்த கலைச் சொல்லாயினும் சரி அவ்வகர முதலியில் விடுபாடு இல்லாமல் இணைத்து விடவேண்டும். அவ்வாறு அமைந்து விடுமானால் சொல்லாய்வாளர்க்குத்தேடி வைத்த திருவாகத் திகழ்தல் உறுதியாம், அவர் வழியில் ஆயத்தலைப் படுவார்க்குக் கிடைத்தற்கரிய கருவிநூலாம். அத்தலைப்பாடே தலைப்பாடாக வேறெவர் ஊன்றினாலும்சரி, ஊன்றாதொழியினும் சரி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி இயக்கக மேனும் முந்து நிற்றல் வேண்டும். அது தலையாய கடமையாம்.

2.1. ''திருவாசகம் இன்றில்லையேல் சாழல், தெள்ளேணம் முதலிய சொற்களை வேறெங்குக் காணமுடியும்?''* என ஏங்குபவர் பாவாணர். ஆயிரம் ஆயிரம் சொற்களை மணி மொழியார் தம் நூலில் படைத் திருந்தாலும் சாழலும் தெள்ளேணமும் தனித்துயர்ந்து தலை தூக்கி நிற்பானேன்? அவ்வாட்சி பிறர்மாட்டுக்காண இயலாப் பெற்றியவை. பத்தோடு பதினொன்று என்று இல்லாமல் அவருக்கே உரிமை பூண்ட ஆட்சிச் சொற்கள் அவை. ஆதலால் அவையே மணிவாசகனார்க்குத் தனி வீறும் தனிப்பேறும் அருளிக் கொண்டுள்ளனவாம். சாழலும் தெள்ளேணமும் நினைவில் வருவார்க்கு, இளங்கோ வடிகளோ திருத்தக்கத் தேவரோ தேவாரம் பாடிய மூவரோ பிறர் பிறரோ தோன்றாமல் மணிவாசகப் பெருந் தகையே தண்ணாரும் எழில்முகம் காட்ட வாய்க் கின்றதாம்! அவ்வாறு பாவாணர்க்கே உரிய, பாவாணரையே அடையாளம் காட்டக் கூடிய சொற்கள் ஒன்றா? இரண்டா?

**பாவாணர் ஒளிவீச்சு :**

3. பண்டாரகரா[1], பண்டுவரா[2] பாவாணரை நினைவு கூராமல் முடியுமா?

---

* சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள். பக். 89.
வனப்புச் சொல்வளம் என்னும் கட்டுரையில் சிலம்பு, மேகலை, சிந்தாமணி, பெருங்கதை ஆகிய வனப்பு நூல்களுக்கே சொற்களைத் தொகுத்துரைக்கிறார் பாவாணர். செந். செல். 39: 305-310

1. டாக்டர் 2. மருத்துவர்

குளம்பி[3] வேண்டுமா? கொழுந்துநீர்[4] வேண்டுமா? என்று வினவுவாரிடைப் பாவாணர் அன்றோ மென்னகை புரிகின்றார்.

நான் அணியமாக[5] இருந்தேன்; நீங்கள் இப்பொழுது வந்தது ஏந்தாக[6] இருந்தது என்பாரிடைப் பாவாணர் இரண்டறக் கலந்து திகழ்கிறார் அல்லரோ?

இந்த மொட்டான்[7]தான் அந்த மேடைக்கு[8] அமைவாக இருக்கும் என்பவர் இன்றமிழ் உள்ளத்தில் பாவாணர் அன்றோ வீற்றிருக் கிறார்.

பழக் கூட்டும்[9] பனிக்கூழும்[10] எனக்கு ஒத்துக் கொள்வதில்லை. வெதுப்பமாகப் பருக வேண்டும் என்பார் மாட்டுப், பழக்கூட்டும் பனிக் கூழுமாக அல்லவோ பாவாணர் குளிர்கின்றார்.

பொந்திகை[11]யாக உண்டு சடுத்த[12]மாக வருவாருடனே பாவாண ரும் அன்றோ பொந்திகையாக வருகின்றார்.

பிறப்பியம்[13] எழுதி ஐந்திறம்[14] அறிவாரிடத்தும், தொன்மம்[15] படித்துத் தோற்றரவை[16] நம்புவாரிடத்தும், கூட்த் தமிழால் ஒன்றி யுள்ளார் பாவாணர்.

அறிவன்,[17] காரி[18] பார்த்து நீராடுவாரிடத்தும், செந்தணப்பில்[19] வீற்றிருப்பாரிடத்தும் பாவாணர் உறைகின்றார்.

தூவல்[20] கொண்டு எழுதுவாரிடத்தும் பாடகராகிப்[21] பாடுவாரி டத்தும் பாவாணர் ஒன்றியுள்ளார்.

குமுகாய[22] மேம்பாட்டுக்கு எடுப்பை[23] அகற்றி அடிப்பைப்[24] பயன்படுத்த வேண்டும் என்று சூளிட்டுக் கொள்வாரிடத்தே பாவாணர் சுடர்கின்றார்.

---

3. காபி
4. தேநீர்
5. தயார்
6. வசதி
7. ஸ்டூல்
8. மேசை
9. புருட்சாலிட்
10. ஐஸ்கிரீம்
11. திருப்தி
12. விரைவு
13. சாதகம்
14. பஞ்சாங்கம்
15. புராணம்
16. அவதாரம்
17. புதன்
18. சனி
19. ஏர்கண்டிசன்
20. பேனா
21. பாகவதர்
22. சமுதாயம்
23. எடுப்புக்கக்கூஸ்
24. பிளஸ்அவுட்

அரத்தம்,[25] படைச்சால்[26] வைத்தூற்றி,[27] மணிப்பவழம்[28] இன்னவற்றை அகர முதலியில் இணைப்பாரிடத்தே பாவாணர் இணைந்திருக்கிறார்.

அழகனார்,[29] அழகமதியர்,[30] அருட்செல்வர்,[31] ஆமலையழகர்,[32] மதியழகர்,[33] மணவழகர்,[34] அருளர்,[35] மனங்கவர்ந்தார்,[36] சின்னாண்டார்,[37] மகிழ்நர்[38] இன்ன பெயராளர்களிடத் தெல்லாம் பேராளராகப் பாவாணர் திருக்கோலம் கொண்டுள்ளார்.

வெங்காலூர்,[39] வேம்பாய்,[40] எருதந்துறை,[41] பைந்தீவம்,[42] அமைதிவாரி[43] என்று எண்ணுவாரிடத்தும் வேம்பா (கொதிகலன்)த் தொழிற்சாலை,[44] தடிவழிவிரைவான்,[45] நாட்சரி,[46] மாதிகை[47] என்று பெயரிடுவாரிடத்தும் பாவாணர் அமைந்திருக்கிறார்.

காட்டு விலங்காண்டி[48] என்றாலும் பட்டந்தாங்கி[49] என்றாலும் நேரி[50]யைப் பயன்படுத்தும் அளவில் மொழியாக்க நோக்குக் கொள்ளுதல் வேண்டும் என்று கருதின் அவரிடத்தே பாவாணர் அகமலர்ந்து முகமலர்ந்து அழகுக் காட்சி வழங்குகின்றார்.

**தேவநேயக் களஞ்சியம்:**

4. இங்குச் சுட்டிக்காட்டிய ஐம்பது சொற்கள் தாமோ தேவநேயம்! இப்படி எத்துணை எத்துணை ஐம்பதுகள்! அவற்றையெல்லாம் ஒருங்கே தொகுத்துக் காட்டும் வேர் விளக்கம்—பொருள் விளக்கம்—எடுத்துக் காட்டு விளக்கம் இன்னவையெல்லாம் ஒருங்கே ஒரு தொகுப்பாகத் தொகுத்துக் காட்டும் — சொற்களஞ்சியமே தேவநேயமாகத் திகழுமாக! அத்தொகுப்பும் அண்ணணித்தாய் வெளிவருமாக!. அதற்கு அரசும், அமைப்புகளும், ஆர்வலர்களும் முந்து நின்று பணி செய்வார்களாக!

வாழ்க தேவநேயம்! வளர்க தேவநேயம்!

---

25. இரத்தம்
26. பர்லாங்
27. புனல்
28. மணிப்பிரவாளம்
29. சுந்தரம்
30. இராமச்சந்திரன்
31. கருணாநிதி
32. பசுமலைசுந்தரம்
33. சேரமசுந்தரம்
34. கலியாணசுந்தரம்
35. கருணை
36. மனோகரன்
37. சின்னச்சாமி
38. சந்தோஷம்
39. பெங்களூர்
40. பம்பாய்
41. ஆக்ஸ்போர்டு
42. கிரீன்லாண்ட்
43. பசிபிக்கடல்
44. பாய்லர் தொழிற்சாலை
45. கிரேட்டிரங் எக்ஸ்பிரஸ்
46. தினசரி
47. மாதப்பத்திரிகை
48. மிருகாண்டி (மிராண்டி)
49. பட்டதாரி
50. ஓட்டு.

## சொல்லடைவு

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழர் தோற்கருவிகள் | ... ரூ. 10-00 |
| 2. | தமிழும் தமிழரும் | ... ரூ. 5-00 |
| 3. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... ரூ. 6-00 |
| 4. | தமிழ் இலக்கியக் கொள்கை-8 | ... ரூ. 20-00 |
| 5. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள் ஓர் மதிப்பீடு | ... ரூ. 20-00 |
| 6. | தொல்காப்பியம் புணரியல் | ... ரூ. 10-00 |
| 7. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... ரூ. 12-00 |
| 8. | தொல்காப்பியம் - விளிமரபு | ... ரூ. 6-00 |
| 9. | தொல்காப்பியம்-- பெயரியல் | ... ரூ. 12-00 |
| 10. | தொல்காப்பியம் - வினையியல் | ... ரூ. 20-00 |
| 11. | திருமயிலை உலா | ... ரூ. 7-00 |
| 12. | வெள்ளைக்காரன் கதை | ... ரூ. 7-00 |
| 13. | சிந்து இலக்கியம் | ... ரூ. 8-00 |
| 14. | மெய்க்கீர்த்திகள் | ... ரூ. 20-00 |
| 15. | பிரபந்த தீபிகை | ... ரூ. 12-00 |
| 16. | திராவிடமொழி இலக்கியங்கள் | ... ரூ. 35-00 |
| 17. | தமிழில் விடுகதைகள் | ... ரூ. 12-00 |
| 18. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... ரூ. 15-00 |
| 19. | தஞ்சைமாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... ரூ. 12-00 |
| 20. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... ரூ. 6-00 |
| 21 | கண் மருத்துவம் | ... ரூ. 50-00 |
| 22 | தமிழரின் தாயகம் | ... ரூ. 10-00 |
| 23 | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ... ரூ. 20-00 |
| 24. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ... ரூ. 14-00 |
| 25. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - தொகுதி-1 | ... ரூ. 12-00 |
| 27. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - தொகுதி-2 | ... ரூ. 22-00 |
| 28. | வர்மசூத்திரம் | ... ரு, 10-00 |
| 29. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... ரூ. 12-00 |
| 30. | தமிழர் இசை | ... ரூ. 70-00 |
| 31. | இனிக்கும் இராஜநாயகம் | ... ரூ. 50-00 |
| 32. | பாவாணரும் தனித்தமிழும் | ... ரூ. 12-00 |
| 33. | Language and Grammar-Heritage of the Tamils | ... Rs. 22-00 |
| 34 | Cultural Heritage of the Tamils | ... Rs. 20-00 |
| 35. | Literary Heritage of the Tamils | ... Rs. 50-00 |
| 36. | Papers on Tamil Studies | ... Rs. 15-00 |
| 37. | Tamil Drama | ... Rs. 20-00 |
| 38. | A Study of the Perunkatai | ... Rs. 12-00 |
| 39. | Thiru Murugan | ... Rs. 5-00 |
| 40. | Dr. Mu. Va. | ... Rs. 20-00 |
| 41. | Dissertations on Tamilology | ... Rs. 10-00 |
| 42. | Tamil writers Directory | ... Rs. 10-00 |
| 43. | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. 25-00 |
| 44. | Heritage of the Tamils-Siddha Medicine | ... Rs. 45-00 |
| 45. | Siddha Medical Manuscripts in Tamil | ... Rs. 8-00 |
| 46. | Karaikkal Ammaiyar | ... Rs. 6-00 |

Japonica - Dial 44 19 13